அவ்வவருடைய ஆடலோடேகூட. (எழிலாரித்யாதி) "பூமியில் பாரதவர்ஷமே உத்தேஶ்யம்; பண்ணின புண்யமானது சாலிலெடுத்த நீர்போலே க்ஷபித்தவாறே முகம் கீழ்ப்படத்தள்ளுகிற ஸ்வர்க்கமு மொருதேசமாய்த்ததோ? கோலின ப(ஃ)லங்களுக்கெல்லாம் ஸாதநா நுஷ்ட்டாநம் பண்ணலாம் பாரதவர்ஷத்தை யொழிய" என்றார்க ளிறே; அப்படியே,பூமிப்பரப்பில் ஶ்லாக்யமா யிருந்துள்ள இந்த நகரத்தோடொக்கக் கடவதில்லை என்று தேவர்கள் புஷ்பாத்யுபகரண ங்களைக்கொண்டு ஆஶ்ரயித்து நித்யவாஸம் பண்ணுகிறதேசம். (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (எண்ணிலித்யாதி)ஆக, கீழ் ஆறுபாட்டாலும்- ஆபத்ஸகத்வத்தை பஹுப்ரகாரமாக உபபாதித் தநுபவித்தாராய், இனி இரண்டுபாட்டாலே- மோக்ஷப்ரதத்வத்தை யநுபவிக்கக் கோலி, இதில் - ஸாதநாந்தர நிஷ்ட்டர்க்கு உபாஸ்யனுகையால் வந்த மோக்ஷப்ரதத்வத் தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"எண்ணில்" என்கிற யதி(கி) பதத்துக்கு ஹ்ருதய மருளிச்செய்கிறார் (ரஜஸ்தமஸ்ஸுக்களாலே யித்யாதி).

"பாரதவர்ஷமே உத்தேஶ்யம்" என்றத்தை உபபாதித்தருளுகிறார் (பண்ணின வித்யாதி). ... ... ... ... ... ... (அ)

மூ.—வங்கமலி பௌவமது மாமுகடினுச்சி புக மிக்க பெருநீர்
அங்கமழியா ரவனதாணை தலைசூடு மடியாரறிதியேல் [ல்
பொங்குபுனலுந்து மணிகங்குலிருள் சீறுமொளியெங்குமுளதா
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வங்கம் | மரக்கலங்களால் | அவனது | அந்த ஸர்வேஶ்வர னுடைய |
| மலி | ஸம்ருத்தமான | | |
| அது | அந்த(பூமிக்கு ரக்ஷக மான) | ஆணை | ஆஜ்ஞையை |
| | | தலைசூடும் | சிரஸாவஹியாநின், |
| பௌவம் | ஸமுத்ரமானது | அடியார் | தாஸபூதர் |
| மா | உயர்ந்திருக்கிற [ய | அங்கம்அழி யார் | சரீரநாசத்தை யடை யார்கள், |
| முகடின் | அண்டபித்தியினுடை | | |
| உச்சி | சிரஸ்ஸளவும் | மனமே | ஓமநஸ்ஸே! [ல், |
| புக | வ்யாபிக்கும்படி | அறிதியேல் | (இதை) அறிவாயாகி |
| மிக்க | பொங்கிவாராநின்ற | பொங்கு | பெருகாநின்ற |
| பெருநீர் | (ப்ரளயகால) மஹா ஜலத்திலும், | புனல் | ஜலமானது |
| | | உந்து | ஒதுக்காநின்ற |

| | |
|---|---|
| மணி | ரத்நங்களில் நின்றும் புறப்பட்டதாய் |
| கங்குல் | ராத்ரியிலே யுண்டான |
| இருள் | அந்தகாரத்தை |
| சீறும் | கோபியாநின்ற (போக்காநின்ற) |
| ஒளி | காந்தியானது |
| எங்கும் | ஸர்வதேசத்திலும் |
| உளது | வ்யாபியாநின்றதாய்; |
| நங்கள் | நமது |
| பெருமான் | ஸ்வாமியானவன் |
| உறையும் | நித்யவாஸம் பண்ணுநிற்பதான |

நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே! (௯)

வ்யா.— ஒன்பதாம்பாட்டு. (வங்கமித்யாதி) மரக்கலங்களால் மிக்கிருக்கிற கடலானது, பாடிகாப்பாரே களவுகாணுமாபோலே பூமிக்கு ரக்ஷகமாக இட்டுவைத்த இதுதானே அண்டபித்தியளவும் சென்று நாக்கும்படி மிக்கஜலத்தில், அவனுடைய வார்த்தையை சிரஸா வஹிக்கக்கடவ சேஷபூதரானவர்கள், ப்ரளயாபத்துக்கு ஹேதுவான கர்மமநுபவியார்கள்; (க) "ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச - ஸர்க்கேபி நோபஜாயந்தே ப்ரளயே நவ்யதந்திச" என்கிறபடியே. (அதிதியேல்) சைதந்யப்ரஸரத்வாரமாகில்.

(பொங்கித்யாதி) பெருகின நீரானது கொடுவந்து தள்ளுகிற ரத்நமானது ராத்ரியிலிருளைத் தன்கிரணங்கொண்டு தள்ளுகிற ஒளி எங்குமொக்கப் பரந்திருக்குமாய்த்து. (நங்கள் பெருமானுறையும்) பராவஸ்தை நித்யஸூரிகளுக்காயிருக்கும்; வ்யூஹம் ப்ரஹ்ம ருத்ராதிகள் பரிபவத்தைப்போக்கவாயிருக்கும்; அவதாரங்கள், ஸ்ரீவஸுதேவர் சக்ரவர்த்திகள் தொடக்கமான பாக்யாதிகருக்காயிருக்கும்; பிற்பாடரான நம்போல்வார்க்காயிருக்குமிறே உகந்தருளின நிலங்கள். நித்யஸூரிகளு மிங்குவரும்போது குறைவாளராய் வரவேணும்; அந்த(ந்)ர்க்கு வைத்தசாலையில் விழித்தார்க்கு வரும்போது கண்ணை மறைத்து வரவேணுமிறே. ... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வங்கமித்யாதி). இப்பாட்டில்-உபாஸ்யனைகையால் வந்த மோக்ஷப்ரதத்வத்தை யருளிச்செய்து, ப்ரபத்தவ்யனைகையால் வந்த மோக்ஷ ப்ரதத்வத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

ஆணை தலை சூடுமடியாராவார் - (க) "வார்த்தை யறிபவர்" என்கிறபடியே ப்ஸலோகார்த்த நிஷ்டரென்றிறே திருவுள்ளம்.

நமக்கானபடி எப்படி, அங்குள்ளாரு மிங்கு வருவர்களே யென்ன வருளிச்செய்கிறார் (நித்யேத்யாதி). (குறைவாளராய்) என்றது - தங்கள்

(க) கீதை-௧௪-௨. (க) தி-வாய்-௭-௫-௧௦.

வேஷத்தை மறைத்து மநுஷ்யாதி வேஷத்தைக் கொண்டென்கை. - வே ஷம்மாறி வரவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அந்தர்க்கித்யாதி).

மூ.—

நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணியுறையு
உறைகொள்புகராழி சுரிசங்கமவையங்கையுடையானை யொளிசேர் [ம்
கறைவளரும் வேல்வல்ல கலியனொலி யாலையிவையைந்துமைந்தும்
முறையிலிவை பயிலவல்ல வடியவர்கள் கொடுவினைகள்முழுதகலுமே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நறைசெய் | தேனையுடைய | ஒளிசேர் | புகரையுடைத்தாய் |
| பொழில் | சோலைகளிலே | கறைவளரும் | ரக்தக்கறைமிக்கிருந்த |
| மழை | மேகங்களானவை | வேல் | வேலாயுதத்தை [ன்ன |
| தவழும் | ஸஞ்சரியாநின்ற | வல்ல | ஆளவல்லரான |
| நந்திபுர விண்ணகரம் | நந்திபுர விண்ணகர மென்னும் திவ்ய | கலியன் | ஆழ்வார் |
| | | ஒலி | அருளிச்செய்த |
| நண்ணி | கிட்டி [தேசத்தை | இவை | இப்படி விலக்ஷணமாயுள்ள [மான |
| உறையும் | நித்யவாஸம் பண்ணுநின்றவனாய் | மாலே | சப்தஸர்தர்ப்ப ரூப |
| உறைகொள் | உறையிலே யிடப்பட்டதாய் [தான | இவை | இந்த [யும் |
| | | ஐந்தும் ஐந்தும் | பத்துப் பாசுரங்களை |
| புகர் | தேஜஸ்ஸை யுடைத் | | |
| ஆழி | திருவாழியும் | முறையில் | க்ரமத்திலே (உத்தேஸ்யபுத்தியாலே) |
| சுரி | சுழியையுடைத்தான | | |
| சங்கம் | சங்கும் (ஆகிய) | பயிலவல்ல | அப்யஸிக்கவல்ல |
| அவை | அந்த திவ்யாயுதங்களை | அடியவர்கள் | சேஷபூதர்களுடைய |
| அங்கை | அழகிய திருக்கையிலே | கொடு | க்ரூரமான |
| | | வினைகள் | பாபங்கள் |
| உடையானை | உடையனான ஸர்வேஸ்வரன்விஷயமாக | முழுது | ஸம்பூர்ணமாக |
| | | அகலும் | நீங்கிப்போம். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (நறைசெயித்யாதி) மதுமிக்கபொழிலிலே மேகங்கள் வந்து ஸஞ்சரிக்கிற ஸ்ரீநந்திபுரவிண்ணகரிலேகிட்டி நித்யவாஸம்பண்ணுவதும் செய்து, விரோதிநிரஸநத்துக்குத் திருமங்கையாழ்வார் கையில்வேலுண்டானபின்பு திருவாழிஉறையிட்டிருக்கும்காண்; உறைகொண்டிருப்பதாய் புகரையுடைத்தாயிருக்கிற திரு

வாழிதுடக்கமான திவ்யாயுதங்களை அழகிய திருக்கையிலே யுடைய வனைக் கவிபாடிற்று. (ஒளிசேர்கறைவளரும்) உறையில்கிடக்க அவஸரமில்லையாய்த்துத் திருமங்கையாழ்வார் வேலுக்கு; சத்ருநிரஸநம் பண்ணிக் கறைகழற்ற அவஸரமின்றிக்கேயிருக்கும்; இப்பத்தையும். (முறையிலினைபயிலவல) "நன்னுமனமே" என்று உத்தேஶ்யபாக ச்சொன்ன தேசமாகையாலே இவ்விடம் நமக்காஶ்ரயணீய ஸ்த்தலம் என்னும் ப்ரதிபத்தியோடேகூட அப்யஸிக்கவல்ல அடியவர்களுடைய, க்ரூரமாய் அநுபவித்தாலல்லது நசிக்கக்கடவதன்றிக்கே யிருக்கிற பாபங்கள் ஸவாஸநமாகப்போம். ... .... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (நறைசெயித்யாதி) "உறைகொள்" என்று திருவாழிக்கு விசேஷணமிடுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (விரோதி யித்யாதி). ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஞ்சாம்பத்தில் பத்தாந்திருமொழி முடிந்தது.





ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறாம்பத்து முதல் திருமொழி

## வண்டுணுப்ரவேசம்

—oo❖oo—

வ்யா.—இவர்க்கு உகந்தருளின நிலங்களிலுண்டான ருசியைப் பற்ற ஈஶ்வரன் இங்கேவைத்தான், சப்தாதிவிஷயங்களும் இந்நிலத்திலேயாயிருந்தது; நீர்மணிச்சரைக் கரையிலே நிறுத்தினால் பழைய வாஸநையாலே நீரிலேபோய்ப் புகுமாபோலே, உகந்தருளின நிலங்கள் இங்கேயுண்டானாலும் விஷயங்கள் பரிமாறுகிற விடத்திலுண்டான இருப்பு அவற்றிலே கைகழியப்போகைக்கும் உடலாயிருக்கையாலே, ஈஶ்வரனுக்கும் "இவர்க்கு இங்ஙனேயுமொருநினைவுண்டோ" என்று கைகழியவிடுகைக்கு உடலாயிருக்கையாலே, ஸாக்ஷாத்கரித்தல்லது நிற்கவொண்ணாதபடி பகவத்விஷயத்திலே தமக்குண்டான ருசியையும், விட்டல்லது நிற்கவொண்ணாதபடி ஸம்ஸாரத்திலே பிறந்த அருசியையும்,அவன் திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பம்செய்கிறார். ஆத்மவஸ்து; பகவதர்ஹமல்லாமையன்றிறே அநாதிகாலம் ஸம்ஸரித்தது, அசித்ப்ரத்யாஸத்தியாலேயிறே; ஆனபின்பு, இத்தைத்தவிர்த்துக்கொள்ளவேணுமிறே. ... ... ... *

---

அரு.—வண்டுணுப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில்-"நந்திபுர விண்ணகரம் நண்ணுமனமே" என்று பலகாலும் சொல்லிவைத்தவர், "வேண்டேன் மனைவாழ்க்கையை" என்று ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லிக் கூப்பிடுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (இவர்க் இத்யாதி).

மூ.— [மேல்

வண்டுணுநறுமலரிண்டைகொண்டு பண்டைநம்வினைகெடவென்றடி
தொண்டருமமரரும்பணியநின்றங்கண்டமோடகலிடமளந்தவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| அமரரும் | தேவர்களும் |
| தொண்டரும் | (மற்றும்) பக்தஜநங்க[ளும், |
| வண்டு | வண்டுகள் |
| உணும் | மதுபாநம் பண்ணுகிற்பதாய் |
| நறு | பரிமள ப்ரசுரமான |
| மலர் | பூக்களினால் கட்டப்[பட்ட |
| இண்டை | மாலையை |
| கொண்டு | ஸம்பாதித்துக்கொண்(டுவந்து), |
| பண்டை | ப்ராசீகமான |
| நம்வினை | எங்கள் பாபங்களை |
| கெட | போக்கியருளவேணும் |
| என்று | என்று ப்ரார்த்தித்து |
| அடிமேல் | திருவடிகளின் மேலிட்டு |
| பணிய | ஆஶ்ரயிக்க, (அவர்களுக்காக) |
| நின்று | (மஹாபலியிடம்) இரப்பாளனாயிருந்து |
| அங்கு | அந்த யஜ்ஞவாடத்தில் நின்றே [கூட |
| அண்டமோடு | மேலுலகங்களோடு |

| பதம். | உரை. |
|---|---|
| அகல்இடம் | பரந்தபூமியை |
| அளந்தவனே | (திருவடிகளால்) ஆக்ரமித்துக்கொண்டவனே! |
| ஆண்டாய் | (இதுக்கு முன்னமே) என்னை அடிமையாக்கிக்கொண்ட ஸ்வாமியே! |
| விண்ணகர் | திருவிண்ணகரென்னும் திவ்யதேசத்தில் |
| மேயவனே | பொருந்தி நித்யவாஸம் பண்ணுமவனே! |
| உன்னை | உன்னை |
| காண்பது | (நான்) ஸேவிக்கும்படி |
| ஓர் அருள் | நிர்ஹேதுகமான க்ருபையை |
| எனக்கு | என் விஷயத்தில் |
| அருளுதியேல் | செய்வாயாகில் (செய்தருளவேணும்), |
| மனைவாழ்க்கையை | (இனி) ஸம்ஸாரத்திலிருப்பை |
| வேண்டேன் | (நான்) விரும்பேன். |

வாழ்க்கை-ஸுகம். (க)

வ்யா.—முதற்பாட்டு. (வண்டுணும்) செவ்விப்பூமாலையைக்கொண்டு. (பண்டையித்யாதி) "முன்பு நாம்பண்ணிவைத்த பாபங்களையடையப்போக்கவேணும்" என்று திருவடிகளின்மேலே, (க) "[illegible] - ஸங்கைஸ்ஸுராணும்" என்கிறபடியே, தேவர்களும், மற்றும் திருவடிகளுக்கு நல்லராயிருப்பாரும் ஆஶ்ரயிக்க. (நின்று) அர்த்தித்துநின்று, பெற்ற அவ்விடந்தன்னிலே நின்றே அண்டங்களோடேகூட பூமிப்பரப்பை யளந்துகொண்டவனே!

(ஆண்டாய்) நான் இதரவிஷயங்களிலே ப்ரவணனாய் உன்பக்கலிலே வைமுக்க்யம் பண்ணிப்போரா நிற்கச்செய்தே, இவ்வளவும்வர என் ஸத்தையை யழியாமல் நோக்கிக்கொண்டு போந்தவனே! (உன்னையித்

(க) மாங்கள்யஸ்தவம்.

யாதி) நீ அநாதிகாலம் ஸந்ததையை நோக்கிக்கொடுபோந்ததின்ப(ஃ)லம் நீயே பெறவேண்டியிருந்தாயாகில், என்பக்கலிலே க்ருபையைப்பண்ணியருளவேணும். (வேண்டேனித்யாதி) "இன்னமுமிவனுக்கு ஸம்ஸாரவாஸநை கழிந்ததில்லை" என்று இருக்கவேண்டா, எனக்குலோகயாத்ரையில் ருசியில்லாமையைத் திருவுள்ளம் பற்றவேணும். (௧)

---

அரு. — முதற்பாட்டு. (வண்டித்யாதி). இந்த்ரன் கார்யம்செய்ய வந்தபடியாலே, ,,స్వర్గేశ్వరాణామపి భూతలస్థైస్తథా మనుష్యైర్గగనేచరైశ్చ। స్తుతః క్రమాన్యః ప్రచకార సర్వదా మమాఽస్తు మాఙ్గళ్య వివృద్ధయే హరిః - ஸ்வர்கேச்வராணாமபி பூதலஸ்தைஸ்ததா மநுஷ்யைர்க்ககநேசரைச்ச। ஸ்துதஃ க்ரமாந்யஃ ப்ரசகார ஸர்வதா மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரிஃ" என்கிறபடியே முந்துற அமரரைச் சொல்லுகை உசிதமாகையால், "அமரரும், தொண்டரும்" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (ஸங்கை ரித்யாதி).

"அருளுதியேல்"- அருளவேணுமென்று கூட்டி அர்த்தமருளிச்செய்கிறார் (நீ அநாதிகால மித்யாதி).... ... ... ... ... (௧)

மூ.— [டவனே

அண்ணல்செய்தலைகடல்கடைந்ததனுள்கண்ணுதல் நஞ்சுண்ணக்கண்

விண்ணவரமுதுண வமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமா

ஆண்டா யுன்னைக் காண்பதோ ரருளெனக்கருளுதியேல் [னே

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அண்ணல்செய்து | (தேவர்கள்பக்கல்) ஔதார்யத்தைப் பண்ணி | கண்டவனே | பார்த்த(ஸங்கல்பித்த) ருளினவனே! |
| அலைகடல் | அலைமோதாநின்ற ஸமுத்ரத்தை | விண்ணவர் | தேவர்கள் [மிர்த, |
| கடைந்து | மதநம்பண்ணி, | அமுது உண | அம்ருதபாநம் பண்ண |
| அதனுள் | (அக்காலத்தில்) அந்த ஸமுத்ரத்தில் நின்றும் புறப்பட்ட | அமுதில் | (அந்த)அம்ருதத்தில் நின்றும் |
| நஞ்சு | விஷத்தை | வரும் | (ஸாரபூதையாய்க்கொண்டு) வாராநின்ற |
| நுதல்கண் | நெற்றிக்கண்ணனான ருத்ரன் | அமுது | போக்யபூதையான |
| உண்ண | விழுங்கும்படி. | பெண் | பெரியபிராட்டியாரை |
| | | உண்ட | (லபித்து) அநுபவியாநின்றவனாய் |
| | | எம்பெருமானே | எங்களுக்கு உபகாரகனானவனே! (௨

வ்யா.—இரண்டாம்பாட்டு. (அண்ணல்) ஒருகால்சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லுகிறார் தம்முடைய இந்த ருசியை ஸ்த்திரமென்னு மிடத்தை அவன் திருவுள்ளத்தே படுத்துகைக்காக.

(அண்ணல்)ஔதார்யத்தைப்பண்ணி யென்னுதல், ஸ்வாமித்வத்தை நிர்வஹித்தென்னுதல்; பெரிய க்ஷோபத்தை யுடைத்தாயிருந்துள்ள கடலைக்கடைந்து. (அதனுள் - நஞ்சை - கண்ணுதல் - உண்ணக்கண்டவனே) அதிலுண்டான விஷத்தை புஜிந்து தேவர்கள் முடியாதே யிருக்கும்படியாகப் பார்த்தவனே! (விண்ணவரித்யாதி) தேவஜாதி அம்ருதத்தை புஜித்து உஜ்ஜீவிக்க, அந்த அம்ருதந்தான் கோதாம்படிவந்து தோற்றின பெரியபிராட்டியாரை லபித்து, அவ்வழியாலே ஆஸ்ரிதவர்க்கத்துக்கு உபகரித்தவனே! ஜநநிபக்கல் பண்ணுமுபகாரம் ப்ரஜைகளுக்கா யிருக்குமிறே.

(ஆண்டாயித்யாதி) அச்சேர்த்தியை நான் கண்டநுபவிக்கும்படி என்பக்கலிலே க்ருபையைப் பண்ணி யருளுவுதியாகில், அத்தேவஜாதி உன்னைக்கொண்டு பூண்கட்டிக்கொள்ளுகிற ஸம்ஸாரயாத்ரையை வேண்டேன். ... ... ... ... ... ... (௨.)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (அண்ணலித்யாதி) கீழ்ப்பாட்டில் - இந்த்ரனுக்காக இரந்தாகிலும் அவன் வாழ்க்கையை நிலைநிறுத்தினாய், அந்தன் ஒரு ருசி எனக்கில்லை என்றார்; இதில் - தேவஜாதி யெல்லாம் சாகாமலிருக்கவேணுமென்ன, அதுக்காகக் கடல் கடைந்தாகிலும் அது தலைக்கட்டினாய், எனக்கு அங்ஙனிருப்பதொரு தேஹசாபல்யமில்லை யென்கிறார் என்று ஸங்கதி. (இந்தருசியை) என்றது - "மனைவாழ்க்கை - வேண்டேன்" என்னும்படியான பகவத்விஷய ருசியை என்றபடி. ... ... (௨)

மூ.—

குழல்நிறவண்ணநின் கூறுகொண்ட தழல்நிறவண்ணன் நண்ணார்நகரம்
விழநனி மலை சிலைவளைவு செய்தங்கழல் நிற வம்பதுவானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோரருளெனக் கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (௨)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| குழல்நிறம் | திருக்குழலின் வர்ணம்போன்ற (நீலமான) | வண்ண | திருமேனி நிறத்தையுடையவனே! |
| | | நின் | உன் திருமேனியில் |

| | | | |
|---|---|---|---|
| கூறுகொண்ட | ஒருபார்ஶ்வத்தைத் தனக்கிருப்பிடமாக வுடையனாய் [ற | விழ | நசிக்கும்படியாக, |
| | | நனி | பெருத்து |
| | | மலை | மலைபோன்றதான |
| தழல்நிறம் | அக்நிவர்ணம் போன் | சிலை | வில்லை [து, |
| வண்ணன் | சரீரவர்ணத்தையுடையனை ருத்ரனை(க் கொண்டு), | வளைவுசெய்து | வளையும்படி செய்வித் |
| | | அங்கு | அந்த வில்லிலே(தொடுக்கப்பட்டு) |
| நண்ணார் | சத்ருக்களான அஸுரர்களுடைய | அழல்நிறம் | அக்நிவர்ணமாய் [ன |
| | | அது | அப்படி அதிக்ரூரமா |
| நகரம் | பட்டணமான த்ரிபுரமானது | அம்பு ஆனவனே | பாணத்திலே ப்ரவேசித்து நின்றவனே! |

வ்யா. — மூன்றாம்பாட்டு. (குழல்நிறவண்ண) திருக்குழலில் நிறத்தையுடைய திருமேனியின் நிறத்தையுடையவனே! (க) "கூறாளும்" என்கிறபடியே - உன் திருமேனியிலே கூறுடையனாய், அக்நி கல்பமான நிறத்தையுடையவன். கண்ணுக்குக் குளிர்ந்திருக்கும் ஸர்வேஶ்வரன் திருமேனி; கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி எரிந்திருக்கும் இவன்மேனி. ஆஸுர ப்ரக்ருதிகளுடைய த்ரிபுரமான படைவீடு நசிக்கும்படியாக, பெருத்து மேருகல்பமான வில்லை வளைத்து, (உ) "தஸ்யாத்" என்கிறபடியே - அதுக்குள்ளீடாய்ப் புக்கு நின்றாய்த்து. இவ்வபதாநத்துக்கு ஹேது வென்னென்ன; (உ) "விஷ்ணுராத்மா" என்றதிறே. (அங்கழல் நிறவம்பது) அம்புக்குக் கூர்மையாய்ப் போய்ப்புக்கு ப்ரதிபக்ஷத்தை யழியச்செய்து, "அந்த விஜயாபதாநத்தை அவன் செய்தான்" என்று விருதூதித்திரியும்படி பண்ணினவனே!

(ஆண்டாய்) "ஓரபதாநம் பண்ணினேன்" என்று விருதூதித் திரியும்படி பண்ணவேண்டா. (வேண்டேன்) ஸ்வரூப விரோதியைக் கழித்து ஸ்வரூபாநுரூபமான பேற்றைப் பண்ணித் தரவேணும். ... ... ... ... ... ... ... (௩)

அரு. — மூன்றாம்பாட்டு. (குழலித்யாதி) கீழ்ப்பாட்டில்-சிரகாலம் ஜீவித்திருக்க யத்நம்பண்ணினார்க்கு அத்தைத் தலைக்கட்டிக் கொடுத்தாய், எனக்கு அதுவேண்டா என்றாராய்; இதில் - "ஜீவித்திருந்தால் 'இன்னான் இனியான்' என்று நாலுபேர் கொண்டாடவேணும்" என்றிருப்பானை ருத்

(க) தி-வாய்-௪-அ-க. (உ) பாரதம்-கர்ணபர்.

ரனுக்கும் அது தலைக்கட்டிக் கொடுத்தாய், எனக்கு அங்ஙனிருப்பதொரு புகழ் வேண்டுவதில்லை யென்கிறு ரென்று ஸங்கதி.

(நிறத்தை) என்றவநந்தரம், உபமாநமாக என்று சேஷம். "நனி" என்றதினர்த்தம் (பெருத்து) என்றது. "தழல் நிறவண்ணன்" - கொண்டு என்று அத்யாஹரித்து, "செய்து" என்றது-செய்வித்து என்றுக்தித் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (தஸ்மாதித்யாதி). ருத்ரன் செய்திருக்க, "ஸர்வேஸ்வரன் செய்வித்தான்" என்கைக்கு மூலமென்? என்னும் சங்கையைக் கிளப்பி, பரிஹாரமானபடியை விவரிக்கிறுர் (இவ்வபதாநத்துக் கித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௩)

மூ.—

நிலவொடு வெயில் நிலவிருசுடருமுலகமு முயிர்களு முண்டொருகால்
கலைதரு குழவியினுருவினையா யலைகடலாலிலை வளர்ந்தவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. ... (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நிலவொடு | நிலாவோடும் | உண்டு | விழுங்கி (வயிற்றிலே வைத்து), |
| வெயிலொடு | வெய்யிலோடும் (கூடி) | கலைதரு | அத்யல்பமான |
| நிலவு | உலாவாநின்ற | குழவியின் | குழந்தையினுடைய |
| இருசுடரும் | இரண்டு தேஜஃபதார்த்தங்களான சந்த்ரஸூர்யர்களையும் | உருவினையாய் | வடிவையுடையனாய்க் கொண்டு, |
| உலகமும் | லோகங்களையும் | அலை | அலைமோதாநின்ற |
| உயிர்களும் | (அங்குள்ள) ப்ராணிகளையும் | கடல் | மஹாஸமுத்ரத்தில் |
| | | ஆல் இலை | (ஓர்) ஆலந்தளிரில் |
| ஒருகால் | ஒருகாலத்திலே (ப்ரளயத்திலே) | வளர்ந்தவனே | கண்வளர்ந்தருளினவனே! (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (நிலவொடு) நிலாவோடேகூட, வெய்யில், நிலவுகிற - ஸஞ்சரிக்கிற, சந்த்ரஸூர்யர்களுக்கு நிர்வாஹகனாய், வர்த்தியாநின்றுள்ள நிலாவையும் வெய்யிலையு முடைய இருசுடரென்றுதல். லோகங்களும், அவற்றிலுண்டான ப்ராணிகளும், ஆகிய இவற்றை ஒருகால் வயிற்றிலேவைத்து, கலாமாத்ரமா யிருந்துள்ள குழவியினுடைய வடிவை யுடையையாய், க்ஷோபத்தை யுடைத்தான கடலிலே ஒருபவனுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளுகிற அகடிதகடநா ஸாமர்த்யத்தையுடையவனே!

(ஆண்டாய்) என்பக்கல் அகடிதங்களை கடிப்பிக்க வேண்டா, உன்னைக் காண்பதொருவகை ‡ அருளவமையும். (வேண்டேன்) என் தலையால் வரும் அம்சத்தில் கண்ணழிவில்லை. ... ... (ச)

அந.—நாலாம்பாட்டு. (நிலவித்யாதி) ருத்ரன் தலையில் விஜயத்தை ஏறிட்டாப்போலே, எனக்கு அவ்வளிருப்பதொரு புகழ்படைக்க வேண்டா, ஸ்வரூபவிரோதியைக் கழித்துத் தரவேணுமென்றீர்;நீர் நினைத்தபோதாகச் செய்யப்போமோ, சிரகால வாஸிதமன்றோ மனைவாழ்க்கை என்னவருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

நிலாவோடும் வெய்யிலோடும்கூட நிலவுகிற இருசுடர் என்றாக்கி ஒரு யோஜனை அருளிச்செய்து, நிலவுகிற நிலாவோடும் வெய்யிலோடும் கூடின இருசுடர் என்று அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (வர்த்திக்கிற வித்யாதி).

மூ.—
பாரெழு கடலெழு மலையெழுமாய்ச்சீர் கெழுமிவ்வுலகேழு மெல்லாம்
ஆர்கெழுவயிற்றினி லடக்கிநின்றங் கோரெழுத் தோருருவானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பார்எழும் | ஸப்தத்வீபங்களான பூமிக்கும் [கும் | வயிற்றினில் | திருவுதரத்தில் |
| கடல்எழும் | ஸப்தஸமுத்ரங்களுக் | அடக்கி | (வைத்து) அடக்கிக் கொண்டு |
| மலைஎழும் | ஸப்தகுலாசலங்களுக் கும் [ண்டு, | அங்குநின்று | அவ்வாலந்தளிரிலே யிருந்தவனாய்; |
| ஆய் | நிர்வாஹகனாய்க் கொ | ஓர் | சப்தங்களில்ப்ரதான மான |
| சீர்கெழும் | அழகுமிக்க | எழுத்து | அகாரத்துக்கு |
| இவ்வுலகு ஏழும் | இந்த ஸப்தலோகங்க ளையும் [ளையும் | ஓர்உரு ஆனவனே | முக்யார்த்தமாய் நின்றவனே! (ஞ) |
| எல்லாம் | (மற்றும்) எல்லாவற் | | |
| ஆர்கெழு | மிக அழகியதான | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாரித்யாதி) பூமிகளேழும், கடல்களேழும், மலைகளேழுமான இவற்றுக்கு நிர்வாஹகனாய்; அழகுசெய்திருந்துள்ள இந்த லோகங்களேழு மடைய, அழகு மிக்கிருந்துள்ள வயிற்றிலே யடக்கிநின்றாய். இத்தால் - வாச்யங்களுக்கெல்லாம் தன் பக்கலிலே இருப்பாம்படி. இவற்றுக்கு ஆதாரபூதனாய் நிற்கும்படி.

‡ (பா) அருளவேணும்.

சொல்லிற்று. (ஓரெழுத் தோருருவானவனே) வாசக ஜாதத்துக்கெல் லாம் ப்ரதாநமாயிருக்கிற அகார சப்த வாச்யனானவனே!(ஆண்டாய்).

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (பாரித்யாதி) கீழ்ச்சொன்ன அகடிதகட நாஸாமர்த்யந்தனக்கும் மூலமான காரணத்வத்தால் வந்த சக்தி விசேஷத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(வயிற்றிலே) என்றது - ஸங்கல்பத்திலே யென்றபடி. "உரு" அர்த்தம். ... ... ... ... ... ... ... ... (௫)

மூ.—கார்கெழுகடல்களும் மலைகளுமா யேர்கெழுமுலகமு மாகி முதலார்களுமறிவரு நிலையினையாய்ச் சீர்கெழு நான்மறையானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| கார்கெழு | மேகங்கள்நிறைந்த |
| கடல்களும் | ஸமுத்ரங்களுக்கும் |
| மலைகளும் | பர்வதங்களுக்கும் |
| ஆய் | ஆதாரபூதனாய், |
| ஏர்கெழும் | ஒழுங்குபட்டிருக்கிற |
| உலகமும் | லோகங்களுக்கும் |
| ஆகி | நிர்வாஹகனாய், |
| முதலார்களும் | ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் |
| அறிவரும் | அறியப்போகாத |
| நிலையினையாய் | ஸ்வபாவத்தை யுடையவனாய், |
| சீர்கெழு | ப்ராமாண்யமாகிற அழகுடைய |
| நால்மறை | நாலுவேதங்களுக்கும் |
| ஆனவனே | ப்ரதிபாத்ய னானவனே! (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (கார்) மேகங்கள் படிந்த ஸமுத்ரமும், பூமிக்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற மலைகளும். இவ்வன் பிரித்துச் சொல்லுகிறதென்? கட்டளைப்பட்டிருந்துள்ள லோகங்களுமாய். இத்தால் - ஜகதாதாரனாய், ஜகச்சரீரனாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. (முதலார்களு மறிவரு நிலையினையாய்) சதுர்தச புவநேஶ்வரனை சதுர்முகன் தொடக்கமான ப்ரதாநரானவர்களாலும் "இவ்வளவு" என்று பரிச்சேதிக்கவொண்ணாத ஸ்வபாவத்தை யுடையையாய், ப்ராமாண்யத்துக்குப் போரும்படி யதாபூதவாதியா யிருக்கிற நாலுவகைப்பட்ட வேதங்களாலே ப்ரதிபாத்யனா யிருக்கிறவனே!

(ஆண்டாய்) நீ ஜகதாதாரனாய் ஸர்வாதிகனா யிருப்புதி என்று ப்ரமாணங்களிலே கேட்டுப் போகையன்றிக்கே, உன்னுடைய அஸாதாரணாகாரத்தை நான் ஸாக்ஷாத்கரிக்கும்படி என்பக்கலிலே க்ருபை

யைப் பண்ணி யருளுவுதியாகில், நானும் மெய்யே இத்தை அருவருத்தேன். ... ... ... ... ... ... (௬)

அரு.—ஆரும்பாட்டு. (காரித்யாதி) கீழ் - காரணத்வ ப்ரயுக்த சக்தி விசேஷத்தை அநுஸந்தித்தாராய், ஜகத்தெல்லாம் சரீரமாக நீ சரீரியா யிருப்பாரொருவ னன்றோ, எனக்கு வேண்டின புருஷார்த்தம் கொடுக்கைக்கு நீயே கடவா யென்கிறாரென்று ஸங்கதி.

"ஏர்" என்றதினர்த்தம் (கட்டளைப்பட்டு) என்றது. ... (௬)

மூ.—

உருக்குறுநறுநெய்கொண்டாரழலி லிருக்குறுமந்தணர் சந்தியின்வாய்
பெருக்கமொடமரர்க ளமரநல்கு மிருக்கினிலின்னிசை யானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| அமரர்கள் | தேவர்கள், |
| பெருக்கமொடு | ஸம்பத்தோடுகூட |
| அமர | (தங்களுக்கு) யாகோபகரணங்களைப் பொருந்தப்பண்ணுகைக்காக, |
| உருக்கு உறு | உருக்கப்பட்ட |
| நறு நெய்கொண்டு | நாதகமான நெய்யைக்கொண்டு |
| ஆர் அழலில் | அழகிய அக்நியிலே |

| பதம். | உரை. |
|---|---|
| சந்தியின்வாய் | ஸந்த்யாகாலங்களிலே |
| நல்கும் | (ஹவிஸ்ஸை) கொடாநின்றுள்ள |
| இருக்கு உறும் | வேதாத்யயநபரரான |
| அந்தணர் | ப்ராஹ்மணர்களுடைய (தநமான) |
| இருக்கினில் | வேதத்தில் |
| இன் | இனிமையான |
| இசை | ஸ்வரூப ப்ரணவத்துக்கு |
| ஆனவனே | வாச்யனானவனே! (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (உருக்குறு) உருக்கின நறுநெய்யைக் கொண்டு, அக்நியிலே, இருக்குறும் ப்ராஹ்மணர் ஸந்த்யைகள்தோறும். (பெருக்கமித்யாதி) (க) "పరస్పరం భావయన్తశ్శ్రేయః పరమవాప్స్యథ - பரஸ்பரம் பாவயந்த ஶ்ரேய: பரமவாப்ஸ்யத" என்கிறபடியே - பெருக்கத்தோடே கூட, தங்களுக்கு உபகரண ஸம்பத்தியுண்டாம்படி தேவர்கள் பண்ணுகைக்காக, அவர்களுக்கு தா(ர)ரகமான ஹவிஸ்ஸை அவர்களுக்குக் கொடாநின்றுள்ள ப்ராஹ்மணர்க்கு தநமான வேதத்தில் இன்னிசையுண்டு - ஸ்வரூபமான ப்ரணவம், அத்தாலே

(க) கீதை-௩-௧௧.

ப்ரதிபாத்யனுமுள்ளவனே! (க) "ஸோஹிஸ்ரீ ரம்ருதாஸதாம்-ஸாஹிஸ்ரீ ரம்ருதாஸதாம்" என்று - ஓதநர் என்னக்கடவதிறே ப்ராஹ்மணர்; "ஸ்வரம் - ஸ்வரம்" என்று - ப்ரணவத்தைச் சொல்லக்கடவதிறே, (உ) "யத்வேதாதௌ ஸ்வர: ப்ரோக்த: - யத்வேதாதௌ ஸ்வர: ப்ரோக்த:" என்று. ‡ப்ரணவம் பரஸ்வரூபத்தை ஒன்றையும் சொல்லுகிறதோ? ஆத்மஸ்வரூபத்தையும் சொல்லுகிறதோ?" என்றால், இரண்டையும் சொல்லாநின்றதிறே - (ங) "ஆத்மானம் யுஞ்ஜீத-ஆத்மாநம் யுஞ்ஜீத" என்றும், (ச) "ஓங்காரோ பகவான்விஷ்ணு: - ஓங்காரோ பகவாந்விஷ்ணு:" என்றும். (எ)

அரு — ஏழாம்பாட்டு. (உருக்கித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஸகலஜகச்சரீரியாய் ஸகலவேத ப்ரதிபாத்யனான படியை யநுஸந்தித்து, நீயே என் மநோரதத்தைத் தலைக்கட்டவேணு மென்றார்; இதில்-ஸகல யஜ்ஞாராத்யனாய்க்கொண்டு, ஸகல வேதஸாரமான ப்ரணவ ப்ரதிபாத்யனான நீயே என்கார்யம் செய்யவேணு மென்கிறாரென்று ஸங்கதி.

"இருக்கு உறும்" என்றது - ருக்குக்களை உற்றிருக்கிற வென்றபடி. தேவர்கள் யாகோபகரண ஐஸ்வர்யாதிகளைக் கொடுக்கவும், ப்ராஹ்மணர் ஹவிஸ்ஸைக் கொடுக்கவு மாம்படி. அந்யோந்யம் ப்ரீதியோடே கொடுக்கும்படி யென்று அர்த்த மருளிச்செய்கிறார் (பரஸ்பர மித்யாதி). "இருக்குறும் அந்தணர் - இருக்கினில்" என்றந்வயித் தருளிச்செய்கிறார் (அவர்களுக் கித்யாதி). (ஹவிஸ்ஸை) என்றது அத்யாஹார்யம். வேதம் தகும் என்கைக்கு ப்ரமாணம் (ஸாஹீத்யாதி). "ருச:-ஸாமாநி-யஜூம்ஷி-ஸாஹிஸ்ரீ ரம்ருதாஸதாம் - ருச:-ஸாமாநி - யஜூம்ஷி-ஸாஹிஸ்ரீ ரம்ருதாஸதாம்" என்று கீழ் கூட்டிக்கொள்வது. "ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத" என்றதுக்கு-ஆத்மாவை ஈஸ்வரன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கும்போது, "ஓம்" என்று மந்த்ரத்தைச் சொல்லும்போது ஆத்மவாசகமாக வேணுமிறே என்று கருத்து. [பெருக்கமொடமரர்கள் அமர நல்கும்படியாக - சந்தியின்வாய்-உருக்குறு நறுநெய்கொண்டு ஆரழலிலே, ஹவிஸ்ஸுக்களைக் கொடாநின்றுள்ள, இருக்குறு மந்தணருடைய இருக்கினில் இன்னிசையானவனே] என்றந்வயம். ... ... ... ... ... ... ... (எ)

மூ.—

காதல்செய்திளையவர் கலவிதரும் வேதனைவினையது வெருவுதலாம்
ஆதலினுனதடி யணுகுவன் நான்போதலர் நெடுமுடிப் புண்ணியனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (அ)

-) (உ) தை-நாரா-கo. (ங) தை-நாரா-ஙக.

‡ (பா) ப்ரணவம் பரஸ்வரூபத்தையோ சொல்லுகிறது என்றால்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போது அலர் | செவ்விய பூமாலையி லேலே அலங்கரிக்கப்பட்ட | அது | அப்படிப்பட்ட |
| நெடுமுடி | நீண்ட திருவபிஷேகத்தையுடைய | வினை | கர்மமானது (நினைக்கப் புகில்) |
| புண்ணியனே | பரிசுத்தனே! | வெருவுதல் ஆம் | (எனக்கு) பய(ப்ரத)மாகாநின்றது, |
| இளையவர் | யுவதிகள் | ஆதலில் | ஆகையாலே, (அது கழியும்படி) |
| காதல்செய்து | ப்ரீதிபண்ணி | உனது அடி | உன் திருவடிகளை |
| தரும் | கொடாநின்ற | நான் | நான் |
| வேதனை | துக்கரூபமான | அணுகுவன் | கிட்டி ஆச்ரயிக்கக்கடவேன். (அ) |
| கலவி | ஸம்ச்லேஷத்துக்கு ஹேதுவான | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (காதல்) இளையவர் காதலைப் பண்ணிக்கொண்டு-ஸ்த்ரீகளானவர்கள் ஸங்கத்தை யுடையராய்க் கொண்டு, தருகிற துக்காத்மகமான ஸம்ச்லேஷத்துக்கு ஹேதுவாயிருக்கிற கர்மத்தை அநுஸந்திக்க வநுஸந்திக்க எனக்கு பயமாகாநின்றது; ஆனபின்பு, இப்படிப்பட்ட அபாயங்களைத் தப்புவிக்கும் உன் திருவடிகளைக் கிட்டுவன் நான். அந்த ஸம்ச்லேஷந்தான் துக்காத்மகமாயிறேயிருப்பது. அநுபவிக்கப் புக்கால் ஒருநாள்வரையில் பர்யாப்தனாகிறகின்றிக்கே, தன்னுடைய பும்ஸ்த்வத்தை அழியமாற வேண்டும்படியாய், இனித்தான் கண்டார்க்குக் கவிழ்தலை யிட்டுத் திரியவேண்டும்படியாய், மேல் நரகமாம்படி ஸ்வரூப ஹாநியை விளைக்கக்கடவதான ஸம்ச்லேஷத்துக்கு ஹேதுவான கர்மத்தை அநுஸந்திக்கிற இது அச்சத்துக்கு ஹேதுவாகாநின்றது; ஆனபின்பு, எங்கேனும் திரியிலும் யமாதிகள் †மேலே அடியிட்டுத் திரியும்படியான திருவடிகளை அணுகுவன் நான். (போதலர் நெடுமுடிப் புண்ணியனே) வைத்தவளையமும் நீயுமாயிருக்கிற இருப்பைக் காட்டி என்னுடைய இதர விஷயத்தில் ப்ராவண்யத்தைத் தவிர்த்த சுத்தியையுடையவனே! நாட்டார்க்கு இது பிறக்கிறதில்லையிறே. இவர்க்கே யிறே இது உண்டாய்த்து.

(ஆண்டாய்) உன்னை யொழிந்தவிஷயங்களில் ருசியைப் போக்கின நீயே, உன்னை நான் கண்ணாலே காணலாம்படி என் பக்கலிலே க்ருபையைப் பண்ணுவுதியாகில், எனக்கு இவற்றில் அருசியுண்டு

† (பா)தலையிலே.

**அரு.**—எட்டாம்பாட்டு. (காதலித்யாதி) இப்பாட்டில்-ஸகலயஜ்ஞாராத்யனை நீயே எனக்கருளவேணுமென்கிறார்; இதில் - ஆழ்வார்! ஸகல யாகங்களைப் பண்ணி அந்தணர் ஸ்வர்க்காதி பலங்களை ப்ராபிக்க, நீரொருவரும்; "வேண்டேன்" என்கிறது என் கொண்டென்ன வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

விவரணம் (ஸ்த்ரீகளித்யாதி). இழ- வாக்யார்த்த மருளிச்செய்து தாத்பர்யார்த்த மருளிச்செய்கிறார் (அந்த ஸம்ஶ்லேஷந்தா னித்யாதி).... (அ)

மூ.— [தேன்

சாதலும்பிறத்தலு மென்றிவற்றைக் காதல்செய்யாதுனகழலடைந்
ஓதல்செய் நான்மறையாகி யும்பராதல்செய் மூவுருவானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக் கருளுதியேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஓதல்செய் | அத்யயநம் பண்ணப்படாநின்ற | சாதலும் | மரணமும் |
| நால்மறையாகி | நாலு வேதங்களுக்கும் நிர்வாஹகனாய் | பிறத்தலும் | ஜநநமும் |
| உம்பராதல் | தேவர்களில் ப்ரதானராக | என்று | என்று சொல்லப்படுகிற துக்க பரம்பரையை ஆராய்ந்து |
| செய் | பண்ணப்பட்ட | இவற்றை | இந்த ஜநநாதிகளை |
| மூவுரு ஆனவனே | ப்ரஹ்ம ருத்ரேந்த்ரர்களைச் சரீரமாக உடையவனே! | காதல்செய்யாது | விரும்பாதவனாய்க் கொண்டு |
| | | உனகழல் | தேவரீர் திருவடிகளை |
| | | அடைந்தேன் | ஆஶ்ரயித்தேன். (கூ) |

**வ்யா.**—ஒன்பதாம்பாட்டு. (சாதல்) மரணஸமயத்திலே படும் வ்யஸநம், பின்பு நரகாநுபவம் பண்ணிப்படும் வ்யஸநம், பஞ்சாக்நி வித்யையில் சொல்லுகிறபடியே கர்ப்பரூபத்தாலே படக்கடவ வ்யஸநம், இவற்றை அநுஸந்தித்து ஜந்மாதிகளில் ஆசைபண்ணாதே, இவற்றைத் தவிர்த்தருளும் தேவர் திருவடிகளை வந்துகிட்டினேன். இவற்றை ஆதரிப்பாருண்டோ வென்னில்; "அநிஷ்டாவஹமான ஜநநாதிகளைக் கழித்துக்கொள்வான் பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணி" என்று சாஸ்த்ரங்கள் சொல்லாநிற்க, அது செய்யாதபோதே, இத்தை ஆதரித்தார்களாமித்தனையிறே. (ஓதல்) என்று மொக்க ஓதியே போரக்கடவதாகையாலே, நிர்த்தோஷமாயிருந்துள்ள வேதங்களை விபூதியாக வுடையையாய், தேவர்களுக்கெல்லாம் ப்ரதாநராய், அதிகாரி

புருஷர்களா யிருக்கிற ப்ரஹ்ம ருத்ராதிகளைச் சரீரதயா சேஷமாக உடையவனே!

(ஆண்டாய்) எனக்கு இங்ஙனே யிருப்பதோரு அதிகாரத்தைத் தந்து, காற்கட்டாமது எனக்கு வேண்டா. (வேண்டேன்) அவர்களதிகாரங்களில் எனக்கு ருசியில்லை. ... ... ... ... (௯)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (சாதலித்யாதி) நாட்டிலே இளையவர் கலவியே புருஷார்த்தமென்று ஊர்வசீ ஸாலோக்யத்துக்கு யத்நம்பண்ணு நிற்க, நீர் அதுக்கு வெருவுகைக்கு மூலமேதென்ன வருளிச்செய்கிறீரென்று ஸங்கதி.

"உம்பராதல்" உம்பராக - மேலாக, ப்ரதாநராக, செய்யப்பட்ட மூவருலையும் சரீரமாக வுடையவனே யென்றருளிச் செய்கிறார் (தேவர்களுக்கெல்லா மித்யாதி).... ... ... ... ... ... (௯)

மூ.—பூமரு பொழிலணி விண்ணகர்மேல்
காமரு சீர்க்கலிகன்றி சொன்ன
பாமரு தமிழிவை பாடவல்லார்
வாமந னடியிணை மருவுவரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ஃ—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ மரு | பூக்கள் பொருந்தின (எப்போதும்பூவாநின்ற) | பாமரு | அழகிய பாசுரங்கள் நிறைந்த |
| பொழில் | சோலைகளை [ய | தமிழ் இவை | த்ராவிடரூபமான இந்தப் பத்துப்பாட்டையும் [கள், |
| அணி | அலங்காரமாக வுடை | | |
| விண்ணகர் மேல் | திரு விண்ணகரென்னும் திவ்யதேச விஷயமாக, | பாடவல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| | | வாமநன் | வாமநாவதாரம் பண்ணின ஸர்வேஸ்வரனுடைய |
| காமரு | ஆசைப்படத்தக்க | | |
| சீர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை | இணை அடி | ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற திருவடிகளை |
| கலிகன்றி | ஆழ்வார் [யுடைய | | |
| சொன்ன | அருளிச்செய்த | | |
| | | மருவுவர் | கிட்டப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பூமருவித்யாதி) பூமாறாத பொழிலாலே அலங்க்ருதமாயிருந்துள்ள திருவிண்ணகர்மேலே சொல்லிற்று.

நித்யவஸந்தமான திருவிண்ணகர்மேலே. (காமரு) காமரப்படுவதாய் - எல்லார்க்கும் ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியான வைஷ்ணவஸ்ரீ யையுடையரான ஆழ்வாரருளிச்செய்த, நல்ல ச(ஂ)ந்தஸ்ஸுக்களை யுடைத்தான இவற்றை அப்யஸிக்கவல்லவர்கள். (வாமனனடி) இவர் "வேண்டேன்" என்றதைத் தவிர்ந்து,"அருளுதியேல்" என்றபேற் றைப்பெறுவர்.... ... ... ... ... ... (கூ)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (பூவித்யாதி) தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கித்யேத்யாதி). (இவர்) ஆழ்வார். ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆறாம்பத்தில் முதல்திருமொழி முடிந்தது.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறாம்பத்து இரண்டாந்திருமொழி
# பொறுத்தேன் ப்ரவேசம்.

வ்யா.—ஸம்ஸாரத்தில் தமக்குண்டான அருசியை விண்ணப் பஞ்செய்தார்; விண்ணப்பம் செய்யச்செய்தேயும் கடுகவந்து அத்தைத் தவிர்த்துத் தன்னைக்கொடுத்துகொடு நிற்கக்கண்டிலர்; காணாமையா லே, "முன்பு அநாதிகாலம் அவற்றைவிரும்பித் தன்னைநெகிழ்ந்து போந்தோம், இப்போதும் அவ்வாஸனையைக்கொண்டு அவற்றை விரு ம்பி த்தன்னை நெகிழ்ந்திருந்தோம்" என்று நினைத்திருந்தானாக வே ணும்; பூர்வவ்ருத்தத்தை ஸ்மரிப்பித்து, அதில் எனக்கு ருசியில்லை யென்னுமிடத்தை ஸர்வஜ்ஞன் திருவுள்ளத்திலே படுத்திக் கடுகக் கிட்டலாவதொரு ஸாதநத்தைப் பரிக்ரஹித்துக் கொடுநிற்கவேணுமெ ன்று பார்த்து; அதுக்குறுப்பாக, அநாதிகாலம் தாம் ஸம்ஸரித்துப் போந்தபடியையும், அது தன்னில் ஜந்ம பரம்பரைகளிலே கைகழிந் தபடியையும், அர்த்தகாமங்களை விரும்பிப் போந்தபடியையும், இந்த்

வ்யா.—முதற்பாட்டு. (பொறுத்தேன்) ஸம்ஸாரிகளை "பந்துக்கள்" என்று நினைத்திருந்தால், அவர்கள் தாங்கள் சத்ருக்களாயிருக்கச் செய்தேயும், அண்ணியாரைப்போலே வர்த்தித்து, இவன்பண்ணின உபகாரங்களைக் கொண்டு, உபகரியாதானாக வார்த்தை சொன்னால், "இவர்கள் வேறுசிலரை இவ்வார்த்தை சொல்லாநின்றார்களோ, நம்மை இவ்வார்த்தை சொல்லிற்று நம்மோடுண்டான உறவில் ஊற்றமன்றோ" என்று, அவர்கள் சொல்லும் புல்லியசொற்களை ஸஹித்துப் போந்தேனென்னுதல்; அன்றிக்கே, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், புண்டரீகாக்ஷனாயிருக்கிற ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்கக்கடவ பாசுரங்களைக்கொண்டு, (க) "பாரிலோர்பற்றையை" என்கிறபடியே த்ருணஸமனாயிருக்கிற க்ஷுத்ரனை, (உ) "பனியிருங்குழல்கள்" என்றும் (ங) "சுந்தரத்தோள்" என்றும் சொல்லிக்கவிபாடும்படி, புல்லியசொற்களை நெஞ்சிலே தரித்துப் போந்தேனென்னுதல். சொல்லுக்குப்புன்மை, விஷயத்தைப்பற்ற வருமதிறே.

(பொருளித்யாதி)சிலரை பந்துக்களாக நினைத்திருந்தால், அவர்களுக்கு உபகரிக்கும்போது அர்த்தம்வேணுமே; பிறரைக்கவிபாடுவது அர்த்தத்துக்காகவிறே; ஆகையாலே, ஶ்ரோத்ராதிகளுக்கு ப்ரியதமாயிருக்கிற அர்த்த காமங்கள் என்று சொல்லப்படுகிற இரண்டையும், கடமை இறுப்பாரைப்போலே அவற்றாலேபரிபூ(பூ)தனாய்க் கொடுத்துப்போந்தேன்; இப்படி அர்த்தக்ரஹணம் பண்ணப்புக்கால், அதுக்கு ஸஹகரித்தவர்களுக்கு ஸ்நேஹித்து வாழ்விக்கக்கடவனென்றும், அதுக்கு விரோதத்தைப்பண்ணினாரைச் செற்று முடிக்கக்கடவனென்றும் ப்ரதிஜ்ஞைபண்ணி, அந்தஸங்கல்பத்தை அநுஷ்டாநபர்யந்தமாக்கித் தலைக்கட்டிப்போந்தேன்; பொருளின்பமெனவிரண்டுமிறுத்தேன்.

(அவைதன்னைமனத்தகற்றி) இப்படி நெடுநாள் வாஸனைபண்ணிப்போந்த இவற்றைக் கழித்துக்கொள்ளப்பார்த்து, அது என்னால் செய்து தலைக்கட்டப்போகாதாகையாலே, வெறுத்துவந்து உன் திருவடிகளைப் பற்றினேனென்னுதல்; அன்றிக்கே இவைதன்னை ஸங்கல்பிக்குமித்தனைபோக்கி இவனால் அநுஷ்டித்துத் தலைக்கட்டப் போகாதே; வாஸனையாலே அவைதான் நெஞ்சிலேபட்டுக்கிடக்குமே;

(க) தி-வாய்-கூ-கூ-எ. (உ) தி-வாய்-கூ-கூ-ங. (ங) நா-தி-கூ-க.

அவற்றை ஹ்ருதயத்திலே விரிய விட்டுக்கூடுபூரித்து."அவைதன்னை" என்று-ராக த்வேஷங்களை. (வெறுத்தேன்) அதுதான் பின்னை சோக மோஹங்களோடே தலைக்கட்டுமிறே; அத்தாலே வந்து தேவர் திருவடிகளிலே சரணம்புகுந்தேன். (திருவிண்ணகர்)இவன் இப்போது செய்கிற இவை விபாகத்தில் அநர்த்தத்தோடே தலைக்கட்டக்கடவது; அப்போதாக "சுக்கிடத்திட்டுண்டோ" என்பாரைப்போலே, நமக்குத்தஞ்சமாவாரார்? என்று ஆராயக்கடவன், அவ்வளவில் நாம் தூரஸ்த்தராக வொண்ணாது என்று, நான் விபரீதத்திலே கைவளருகிறநாளே தொடங்கி எண்ணித் திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனுகையாலே திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன் என்னுமளவுமாய்த்திறே இங்குவந்து நின்றது. ... ... ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (பொறுத்தேனித்யாதி) "புன்சொல் - நெஞ்சில் - பொறுத்தேன்" என்று அந்வயித்து, "நெஞ்சில்" என்று விசேஷித்ததக்கு ஹேது பூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளை யித்யாதி). லோகோக்தியன்றியே "சொல்" என்றது - கவிகளாய், அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி).

இவ்வர்த்தத்வயத்துக்கும் சேரத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (சிலரை யித்யாதி). "ஐம்புலன்கட் கடனாயின - பொருளின்ப மெனவிரண்டும் இறுத்தேன்" என்று அந்வயித் தருளிச்செய்கிறார் (ஆகையாலே யித்யாதி). இத்தால் - பந்துக்களுக்காக இறுத்தேனென்று முந்தின வர்த்தத்துக்குத் தாத்பர்யமும், ஐம்புலன்கட்காக இறுத்தேனென்று இரண்டா மர்த்தத்துக்கு அநுகுணமாகத் தாத்பர்யமும் கண்டுகொள்வது. "ஆர்வச்செற்றத்தை - வாயிலொட்டி யறுத்தேன்" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி).

"அவைதன்னை" என்றது - "பொருளின்பம்" என்றவற்றை யாதல், ஆர்வச்செற்றங்களைச் சொல்லுதல்; ஆக, இரண்டுயோஜனை யருளிச்செய்கிறார் (இப்படி நெடுநாளித்யாதி). "மனத்தகற்றி" என்றதுக்கு - பொருளின்பங்களை மனத்தில்நின்றும் அகலும்படி பண்ணியென்றுதல், ஆர்வச்செற்றங்களை மனத்திலே, அகல - விஸ்த்ருதமாகப் பண்ணி யென்றுதல் சொல்லலாமென்று கருத்து. (சுக்கிடத்திட்டுண்டோ) என்றது - ஒருசெட்டி அக்கரைக்குப் போகாநிற்க, ஓடக்காரன் காசுகேட்க, "நான் என்காலாலே நடந்து போகாநிற்கச்செய்தே உனக்குக் காசு ஏது" என்று போனுய், திரும்பிவரும்போது நட்டாற்றிலே வருகிறவளவிலே மார்மட்டுக் கழுத்துமட்டாக, அப்போது பயப்பட்டு "சுக்கிடுகிறேன், திட்டுண்டோ - இடருண்டோ" என்றுனும்; அத்தைச் சொல்லுகிறது. இத்தால் - இச்சே

தானும் ஏற்கவே விசாரியாமல் ஆபத்து வந்தவேளையிலே தேடுவன், அப்போதாகவொண்ணாது என்று திருவிண்ணகரில் ஏற்கவேவந்து நின்றான் என்றதாய்த்து. ... ... ... ... ... ... ... (க)

மூ.—மறந்தேனுன்னை முன்னம் மறந்த மதியின் மனத்தால்
இறந்தேனெத்தனையு மதனாலிடும்பைக் குழியில்
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான் திருமார்பா
சிறந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர் மேயவனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உன்னை | எப்போதும்நினைக்கத்தக்க உன்னை | பிறந்தே | இடைவிடாத ஜநந(மரண)ங்களை யுடையனாய்க்கொண்டு |
| முன்னம் | அநாதிகாலமாக [ன், | எய்த்து | இளைத்து (சக்தியற்றவனாய்க் கொண்டு) |
| மறந்தேன் | நினையாதொழிந்தே (அதுக்குமேலே) | ஒழிந்தேன் | ஸ்வயத்நத்தில் நின்றும் நிவ்ருத்தனானே |
| மறந்த | நினையாதொழிந்தேனென்கிற | பெருமான் | ஸ்வாமியே! [ன், |
| மதிஇல் | ஜ்ஞாந (அநுதாப)முமில்லாத [கையால் | திருமார்பா | புருஷகார பூதையான பிராட்டியைத் திருமார்பிலே யுடையவனே! (இப்போது) |
| மனத்தால் | மநஸ்ஸை யுடையேனா | | |
| எத்தனையும் | மிகவும்(அசித்தைக்காட்டிலும்) | | |
| இறந்தேன் | கைகழியப் போந்தேன்; (நிக்ருஷ்டனா | நின் அடிக்கே | உன் திருவடிகளுக்கே (ஆட்பட) |
| அதனால் | ஆகையாலே[னேன்). | | |
| இடும்பை | துஃக்கரூபமான | சிறந்தேன் | தகுந்தவனானேன்; |
| குழியில் | கர்ப்பத்தில் | | திருவிண்ணகர் மேயவனே! (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. இத்தனையோ செய்தகுற்றமென்ன, (மறந்தேனுன்னைமுன்னம்) அந்தப்பொருளின்பங்களோபாதி உன்னையும் ஒருமூலையிலே ஆதரித்துக்கொடுபோரப் பெற்றிலேன். அது செய்து போந்தாராகில் அப்போதைக்கிப்போது அவற்றுக்குப் பரிஹாரம் பண்ணினாரவரோ. (மறந்தேன்) யாதொரு விஷயம்விடாதே நினைக்கவடுக்கும், அதொன்றையும் மறந்துபோந்தேன். மதுரையிலே நிர்வஹியாநிற்கச்செய்தே, ஒப்பிலாதபெருமாள் (க) "[illegible] - த்யேயோ நாராயணஸ்ஸதா" என்கிறவிஷயத்தையாகாதே மறந்துபோந்தது" என்றார். அல்லாதவை செய்தபடிசெய்ய, உன்னை முந்

(க)

துறமுன்னம் மறந்துகொடுகின்றேனென்னுதல்; அன்றிக்கே, அநாதி காலம் மறந்துபோந்தேனென்னுதல். இம்மறப்புப்போருகிறது நெடு நாளுண்டாகில், உன்னை முன்னம் மறந்திலேன் என்றன்றோ சொல்ல வடுப்பது என்னில்; அதுவேண்டாவாய்த்து, "உன்னை" என்கிறவிடத்திலே ஸம்பந்தத்தை ஸ்மரித்தவராகையாலே; ஸம்பந்தம் ஸ்வாபாவிகமேயாகையாலே, முன்பு நெடுநாள் மறந்துபோரச்செய்தேயும் சில நாள் ஸ்மரித்து மறந்தாப்போலே யிருக்கத் தோற்றிற்று.

* கலங்காப் பெருநகரந்தன்னிலே யிருந்து மறக்கிறதன்றிறே, ஸம்ஸாரத்திலே யிருந்து மறக்கை குற்றமோவென்ன; அவ்வளவேயன்று, நான் சேதநனாகப்பெற்றிலே னென்கிறார். சேதநனாகில் "மறந்தோம்" என்னும் அநுதாபம் பிறக்கவேணுமிறே மறந்தால்; "மறந்தோம்" என்கைக்கு யோக்யதையில்லையிறே அசித்துக்கு; சித்துக்கு ஜ்ஞாத்ருத்வ மாகிறது - ஜ்ஞாநகுணங்களுக்கு ஆஶ்ரயமாகையிறே; அக்குணங்கள் தன்பக்கல் காணுமையாலே அவற்றுக்கு ஆஶ்ரயமுண்டாகப்பெற்றதில்லை. மறந்தோமென்கிற மதியில்லாத நெஞ்சையுடையேனென்கையாலே - அநுதாபரூபஜ்ஞாநமும் பிறக்கைக்கு த்வாரம் மநஸ்ஸிறே; அதில்லாமையாலே (இறந்தேனெத்தனையும்) அசித்துக்கும் அவ்வருகேயானேன். முதலிலே நினைக்கைக்கும் யோக்யதையில்லையிறே அசித்துக்கு; சித்துக்கு யோக்யதையுண்டாயிருக்கச்செய்தேயும், நினையாமையாலே அசித்துக்கும் அவ்வருகே கை கழியப்போனேன். (க) "అసన్నేవ -அஸந்நேவ" என்று ப்ரமாணங்களும் சொல்லலாம்படியானேன். உண்டாயிருக்கச் செய்தேயும், "இல்லை" என்று வ்யவஹரிக்கலாம்படி நசித்தேன்.

(அதனால்) (உ) "అవిద్యా తరుసమ్భూతి బీజమేతద్ద్విధా స్థితమ్ - அவித்யாதருஸம்பூதி பீஜமேதத்த்விதா ஸ்த்திதம்" என்கிறபடியே - அநாத்மந்யாத்மபுத்தியும் அஸ்வே ஸ்வபுத்தியும் ஸம்ஸாரத்துக்கு பீஜமென்றிருப்பார்கள்; இவர், அநுதாபமில்லாமை ஸம்ஸாரபீஜமென்றிருக்கிறார். (இடும்பை) துக்கம். துக்கத்தை விளைக்கக்கடவதான கர்ப்பத்திலே போய்ப்புக்கு, சாவது பிறப்பதாய்க்கொண்டு க்லேசப்பட்டேபோந்தேன். (பிறந்தே) இப்படிசாவது பிறப்பதாய்ப்போராநின்றால், நடுவிலே காதாசித்கமாக பகவத் ஸமாஶ்ரயணம்பண்ணிலிறே அதொரு

(க) தை-ஆந-கூ-க. (உ) வி-பு-கூ-எ-கக.

ஜந்மத்துக்கு ப்ரதிபந்தகமாக வற்றுவுது; அப்படி புருஷகாரங்காட்டி மீண்டதில்லை. (எய்த்தொழிந்தேன்) இன்னும் பிறக்கைக்கடியான கர்மவாஸனை யுண்டேயாகிலும், பிறக்கைக்கு த்ரவ்யமில்லாதபடி யானேன்; - கர்மவாஸனை கிடந்து பிறக்கவேண்டினாலும் பிறக்கைக்கு க்ஷமனல்லேன். ‡ (ஒழிந்தேன்-நானே-எய்த்தேன்) இனி, உடையவர்களுக்கு எடுத்துக்கொள்ள நல்லகாலமென்கிறார்.

உடையவர்கள் எடுத்துக்கொள்ளுகிறார்கள் என்கிறது நீர்தாம் எது நினைத்தென்ன; (பெருமான்). உம்மை நினைத்துக் கைகழிந்தீராகில் செய்யலாவதுண்டோ வென்ன; (பெருமான்) எனக்கு நானேயோ உளேன்? நீயல்லையோ? சேஷித்வப்ராப்தியைப் பற்றச் சொல்லுகிறீராகில், சேஷிகளானவர்க்கு ஸ்வாதந்த்ர்ய முண்டாயிருக்குமே; ஸ்வதந்த்ரரான நம்மைச் சொல்லுகிறதென் நீரென்ன; (திருமார்வா) உன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தை அழித்து ஸ்வீகரிப்பிக்கும் பிராட்டியன்றோ அருகேயிருக்கிறாள். (க) “ந கஶ்சிந்ந அபராத்யதி - நகஶ்சிந்நா பராத்யதி” என்பாளன்றோ அருகே. (சிறந்தேன்) அவள் ஏதேனும் தப்புச் சொல்லிலும் விடேனென்னும் நீயும், உன் ஸ்வாதந்த்ர்யத்தை யழித்து உன்னையிட்டு ஸ்வீகரிப்பிக்குமவளும், இருவரும் இங்கே ஸந்நிதிபண்ணுகையாலே, தேவர் திருவடிகளுக்குத் தகுதியானேன். (திருவிண்ணகர்) *கலங்காப் பெருநகரம் இருப்பாயிருக்க, அவ்விடத்தை விட்டுப் பிராட்டியோடே கூட, எய்த்தாரை எடுக்கைக்காகத் திருவிண்ணகரிலே ஸந்நிஹிதனானாய். நான் எய்த்துக் கொடுநின்றேன்; எய்த்தார்க்கும், எய்த்தாரை எடுக்கவந்து நிற்கிறவர்களுக்கும் ஒரு சேர்த்தியில்லையோ?... ... ... ... ... ... ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (மறந்தேனித்யாதி) (உ) “மேருமந்தரமாத்ரோऽபி ராஶி: பாபஸ்ய கர்மண: । கேஶவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி - மேருமந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண: । கேசவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி” என்றிருக்க, நீரிங்ஙனே அஞ்சவேணுமோ என்னும் சங்காமுகேந ஸங்கதி ஸ்ப்புரிப்பிக்கிறார் (இத்தனையோவித்யாதி). இந்த பதத்துக்கு இப்படி அர்த்தம் சொன்னபேருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (மதுரையிலே யித்யாதி).

மேலுக்கவதாரிகை (கலங்காவித்யாதி). சேதநனாலே அநுதாபம் வேணும் என்கைக்கு ஜ்ஞாபகமென்னென்ன வருளிச்செய்கிறார் (சேதந

(க) ரா-யு-ககூ-சச. (உ) விஷ்ணுதர்மம்-எஅ. ‡ (பா) நான்.

னுகி லித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே); அசித்வ்யாவ்ருத்த னுகையாலே அநுதாபத்துக்கு யோக்யதை உண்டென்று கருத்து. மேலுக்கவதாரிகை (அநுதாபேத்யாதி). "மறந்த மதியின்மனம்" என்கையாலே - அநுதாபமில்லையென்றாய், அசித்ஸாம்யம் சொல்லிற்று; சித்துக்கு ஸாம்யம் எவ்வாகாரத்தாலேயென்ன வருளிச்செய்கிறார் (சித்துக் கித்யாதி). "எத்தனையும் - இறந்தேன்" என்றது - மிகவும் இறந்தேனென்றாய் அசித்தைப்பற்ற ஆதிக்யஞ் சொல்லுகிறது.

"பிறந்தே" என்கிற அவதாரணத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி). (காட்டி)புருஷகார முண்டேயென்று. "எய்த்தொழிந்தேன்" என்று முழுச்சொல்லாக்கி யருளிச்செய்கிறார் (இன்னுமித்யாதி). விவரணம் (கர்மேத்யாதி). இரண்டுசொல்லாக்கி அந்வயித்து "ஒழிந்தேன்" என்றதுக்கு ஸ்வயத்நத்தை விட்டேன் என்றாக்கி, அத்தாலே "எய்த்தேன்-தரைப்பட்டேன், போக்கற்றேன்" என்றாக்கி, இரண்டாலும் பலிதார்த்த மருளிச்செய்கிறார் (இனியித்யாதி). இத்தால் - ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களுடைய னுகையாலே உனக்கு நல்ல ஸமயமென்று கருத்து.

இரண்டுபதமாக்கின பக்ஷத்துக்கு அநுகுணமாக ஓரவதாரிகை யருளிச்செய்து, முழுச்சொல்லான பக்ஷத்துக்குச் சேர "பெருமான்" என்றதுக்கு அவதாரிகை (உம்மையித்யாதி).... ... ... ... (௨)

மூ.—மானேய் நோக்கியர்தம் வயிற்றுக்குழியி லுழைக்கும்
ஊனேராக்கை தன்னை யுதவாமை யுணர்ந்துணர்ந்து
வானேமாநிலமே வந்துவந்தென் மனத்திருந்த
தேனே நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானே | நித்யவிபூதி நிர்வாஹகனே! | நோக்கியர்தம் | கண்ணழகையுடையரான ஸ்த்ரீகளுடைய |
| மா | பெரிய | வயிற்றுக்குழியில் | கர்ப்பத்திலிருந்து |
| நிலமே | பூமியோடு கூடின லீலாவிபூதிக்கு நிர்வாஹகனானவனே! | உழைக்கும் | க்லேசப்படுமதாய்; |
| வந்து | பரமபதத்தில் நின்றும்வந்து | ஊன் | மாம்ஸமயமாய், |
| உவந்து | உகப்புடனே | ஏர் | புருஷார்த்தஸாதகமாகையாகிற அழகையுடையதான |
| என்மனத்து | என் ஹ்ருதயத்தில் | ஆக்கைதன்னை | கேவல சரீரத்தையும் |
| இருந்த | நித்யவாஸம் பண்ணுகின்ற | | |
| தேனே | போக்யபூதனே! | | |
| மானெய் | மானோடொத்த | | |

| | | | |
|---|---|---|---|
| உதவாமை | (அது என்னுடைய புருஷார்த்தத்துக்கு) ஸாதநமாகாமையையும் | உணர்ந்து உணர்ந்து | நன்றாக அறிந்து |
| | | நின் அடைந்தேன் | உன்னையே ஸாதநமாகப் பற்றினேன். |
| | | | திருவிண்ணகர் மேயவனே! (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மானேய்) மானேய்ந்த நோக்கையுடையராயிருக்கிற ஸ்த்ரீகளுடைய. (வயிற்றுக்குழியி லுழைக்கும்) ஒரு தேசவிசேஷத்திலே போய் யமனுடைய தண்டலிலே உழைக்குமது கிடக்கச்செய்தே,கர்ப்பத்திலே புக்குப்படும் க்லேஶத்துக்கு அவதியில்லையாய்த் திருப்பது. தங்களுடைய பருவமும் மௌக்த்யமும் கிடக்கச்செய்தே, "ஒருப்ரஜை யுண்டாகவேணும்" என்று நோன்பு நோற்பர்களாய்த்து; இவனுடைய விநாசத்துக்காய்த்து யத்நிப்பது. (ஊனேயாக்கை) என்னவுமாம், (ஊனேராக்கை) என்னவுமாம். மாம்ஸப்ரசுரமான சரீரமென்றபடி; உள்ளும் புறம்பு மொக்க த்யாஜ்யமாயிருக்கை. இதுக்கு இரண்டாகார முண்டு; தன்னை விரும்பினாரைத் தானும் விரும்பி, தன்னை வேண்டாதாரைத் தானும் வேண்டாதது; ஆகையாலே, புருஷார்த்த ஸாதநமான ஆகாரம் கிடக்கச்செய்தே பந்தகமான ஆகாரமே யாய்த்து விஞ்சிப்பது. (உதவாமை யறிந்தறிந்து) காண்கிற தேஹத்திலே விருப்பத்தைப் பண்ணி, இது தன்னையே ஆத்மாவாக அபிமாநித்து; ஆத்மாவையும், அதுக்கு சேஷியான ஸர்வேச்வரனையும் நெகிழ்ந்துபோந்தால், பின்னை பந்தகமேயாய்த்துத் தலைக்கட்டுவது. நல்வழி போகைக்கு உடலாமது கிடக்க, அநர்த்தத்தை விளைக்குமதாய் த்யாஜ்யமாயிருக்கு மென்னுமிடத்தை விசதமாக வறிந்து.

(வானேமாநிலமே) உபயவிபூதி யோகத்தால் வந்த உயர்த்தியும் கிடக்கச்செய்தே, என்னைப் பெறுகை தனக்குப் பெறும்பேறு என்னுமிடம்தோற்ற இராநின்றான். (வானே) என்கிறது - நித்யவிபூதியை; (மாநிலமே) என்கிறது - லீலாவிபூதியை; ஆக, உபயவிபூதி யுக்தனென்றபடி. விபூதித்வயத்தையும் தனக்கு ப்ரகாரமாக உடையனாயிருந்துவைத்து என்னைப் பெறுகை தனக்குத் தேட்டமாக வந்தானாய்த்து. (வந்து வந்து) முன்பு அநாதிகாலம் இவரைப் பெறுகைக் குறுப்பாக வந்து, இவர்பக்கல் முகம் பெறாமையாலே போனமை யடையத் தோற்றி யிருக்கிறது. *எதிர்சூழல் புக்கிறே அவன் திரிந்தது. அன்றிக்கே, (வந்து உவந்து) என்னவுமாம்; அதாகிறது- *கலங்காப் பெரு

நகரத்தை இருப்பிடமாக வுடையவன், தனக்கென்ன ஒரு குடியிருப்பில்லாதாரைப் போலேயிருக்க வந்து, த்ருப்தனானாய்த்து. (௧) *ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்ட மிஹ கானனே - ஆவாஸந்த்வஹமிச்சாமி ப்ரதிஷ்ட மிஹகானனே போலேயாய்த்து. (௨) [லோகநாத: புராபூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி - லோகநாத: புராபூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி] ஸுக்ரீவ மஹாராஜனை நாதராகப் பெறுகைக்கு யோக்யதை ஸம்பாதித்தபடியாய்த்து லோகநாதரானது.[நாதமிச்சதி] இச்சைக்கு விதேயத்வமில்லை. பெறுவார், பெறுதொழிவார், மூன்று இச்சியாநின்றார். (௩) "ஸ ராமோ வானரேந்த்ரஸ்ய ப்ரஸாத மபிகாங்க்ஷதே- ஸ ராமோ வானரேந்த்ரஸ்ய ப்ரஸாத மபிகாங்க்ஷதே". (என்மனத்திருந்த) இன்னும் வரத்தும் போக்குமுண்டு என்று தோற்றுதபடி ஸ்த்தாவர ப்ரதிஷ்டையாக இருந்தானாய்த்து. (தேனே) தம்மைப் பெறுகைக்கு அவன் வருவது போவதாய்த்திரிந்த படியை அநுஸந்தித்தவாறே தமக்கினிதாயிருக்கிறபடி; (௪) "நிவேசிதாத்மா-நிவேசிதாத்மா" (௫) "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:- விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்கிறபடியே. (நின்னித்யாதி) அறுகாதப்பயணத்துக்குப் பொதிசோறு கொண்டு போம் விஷயம் இங்கே ஸங்க்ரஹிதமாய்த்து. ... ... ... (௩)

அரு.—மூன்றும்பாட்டு. (மானித்யாதி) "எய்த்தொழிந்தேன்" என்று நீர் க்லேசிப்பானென், (௬) * ஈஸ்வராய நிவேதிதும் - ஈஸ்வராய நிவேதிதும் அன்றோ உம்மை ஸ்ருஷ்டித்ததென்ன; அங்கனுதவாது என்கிறார் என்று ஸங்கதி.

நரகக்குழியிலும் ஏற்றமோ இது, "வயிற்றுக்குழியிலுழைக்கும்" என்று இத்தைப் போரப்பொலியச்சொல்லி க்லேசிக்கைக் கென்ன வருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி). "மானேய் நோக்கியர்தம்" என்று விசேஷித்ததுக்கு பாவ மருளிச்செய்கிறார் (தங்களுடைய வித்யாதி). முந்தின பாட்டுத்துக் கர்த்த மருளிச்செய்கிறார் (மாம்ஸேத்யாதி). இத்தால் பலிதம் (உள்ளுமித்யாதி). இரண்டாம்பாட்டில், "ஏர்" என்று - அழகாய், இப்படி விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (இதுக்கித்யாதி). "ஆக்கைதன்னை" என்றத்தையுங் கூட்டி "தன்னை" என்றத்தாலே மற்றொன்று உணராமை பலிக்கையால், உதவாமை உண்டாய்த்து என்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (காணகிறவித்யாதி). (பந்தகமே) என்றது- பந்தகமான

(௧) ரா-ஆர-௫-௩௩. (௨) ரா-கி-௪-௧௮. (௩) ரா-கி-௪-௨௧.
(௪) ஸ்தோ-௫-௨௭. (௫) ரு-ஸூ-௰. (௬) விஷ்ணுதத்வம்.

ஆகாரமேயென்றபடி. (தலைக்கட்டுவது) என்ற வனந்தரம், ஆகையாலே என்று சேஷம்.

மேல்பதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உபயேத்யாதி). ஸாமாநாதிகரண்யத்தாலே நிர்த்தேசித்ததின் கருத்தை அநுவதித்துக்கொண்டு, மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார் (விபூதித்வயத்தையு மித்யாதி). "உவந்து" என்றத்தை விவரிக்கிறது (அதாகிற தித்யாதி). இப்படி இடம் தேடிவந்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆவாஸமித்யாதி). உபயவிபூதி யுக்தன் இவனைப் பெறுகை பெருப்பேறு யிருந்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (லோகேத்யாதி). லோகநாதரானவர் இவரை நாதராக இச்சிக்கவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸுக்ரீவேத்யாதி). (விதேயத்வமில்லை) என்றது - கார்யமாகாது என்கிற நியமமில்லை என்றபடி. பெருமாளுடைய இச்சையை நிரூபித்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸராம இத்யாதி). அபிகம்ய காங்க்ஷதே என்று கருத்து. ப்ரமாணாந்தரமாகவுமாம். ... ... (௩)

மூ.—பிறிந்தேன் பெற்றமக்கள் பெண்டிரென்றிவர் பின்னுதவா
தறிந்தேன் நீபணித்தவருளென்னு மொள்வாளுருவி
எறிந்தேனைம்புலன்களிடர்தீர வெறிந்துவந்து
செறிந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர் மேயவனே. (ச)

| பதம். | உரை. |
|---|---|
| பெற்ற | ஔரஸரான |
| மக்கள் | பிள்ளைகள் |
| பெண்டிர் | மனைவிகள் [ட- |
| என்று | என்று சொல்லப்பட் |
| இவர் | இந்த பந்துக்கள் [கு |
| பின் | அந்த ( )காலத்துக் |
| உதவாது | துணை யாகாமையை |
| அறிந்தேன் | தெரிந்து கொண்டேன், (பின்பு) |
| பிறிந்தேன் | (அவர்களை) விட்டு விட்டேன், |
| நீ | ஆபத்ஸகனான நீ |
| பணித்த | (அர்ஜுநனுக்கு) அருளிச்செய்த |

| பதம். | உரை. |
|---|---|
| அருள் என்னும் | பகவதநுக்ரஹத்தையே ஸாதநமாக ப்ரதிபாதிக்கிற சரமஶ்லோகமாகிற |
| ஒள் | அழகிய |
| வாள் | கத்தியை [மூற்றி, |
| உருவி | உறையில் நின்றும் க |
| ஐம்புலன்கள் | சப்தாதி விஷயங்களாலும் அவற்றுக்கு ஸாதநங்களாலுமுண்டான |
| இடர்தீர | துயரம் நீங்கும்படி |
| எறிந்தேன் | வீசினேன், |
| எறிந்து | (இப்படி அவற்றை) நிரஸித்து |

| | |
|---|---|
| வந்து உன்னிடத்தில் வந்து<br>நின் அடிக்கே உன் திருவடிகளிலே | செறிந்தேன் இடையறப் பொருந்தினேன்<br>திருவிண்ணகர் மேயவனே!(ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (பிறிந்தேன்) ஸம்ஸாரத்திலே சிலரை பந்துக்களாக நினைத்துத் தானுபகரித்துப் போருகிறது - தனக்குத் தானுதவாதவன்று இவன் செவியிலே திருநாமத்தைச் சொல்லுதல், இவனுக்கு நல்வழி போகைக்கு விரகுபார்த்தல் செய்கைக்காகவிறே; அதில் அவர்கள் செய்வது - (க) "சோர்வினால் பொருள்வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லு" என்னுநிற்பர்களாய்த்து, இவன்றான், தனக்கு உணர்த்தி யுண்டானவன்றே தன்னுடைய ஸர்வஸ்வத்தையும் இவர்களிட்ட வழக்காக்கியாய்த்து வைப்பது. நீ மறந்து ஏதேனும் வைத்ததுண்டாகில் அத்தைச் சொல்லு என்னுநிற்பர்களாய்த்து; இவன்றனக்கும் அவர்களோபாதி புன்மை போருங்காணும். இவன் தன்னுடைய ஸர்வஸ்வத்தையும் அவர்களுக்கு ஆக்காநிற்கச் செய்தேயும், சிறிது இவன் பக்கலிலே உண்டென்று தோற்றவாய்த்து வர்த்திப்பது. [சுற்றமிருந்து] யமபடர் ஒருதிரளும், இவர்களொரு திரளுமாயாய்த்திருப்பது. இவர்கள் அலையாநின்றால் அவன் செய்வதென்னென்னில்; [ஆர்வினவிலும்,] தன்னுடைமையை அடைய எழுதிக்கொடுத்து ஸ்வீகரித்த இளையாளைக் கொடுவந்து முன்னேநிறுத்திலும்; வாய்திறவானாய்த்து.

(பெற்றவித்யாதி). வயிற்றிலேபிறந்த புத்ரன், பார்யை, இவர்களிறே அண்ணிய உறவாய்ப் போருவார்; அவர்களும், இவன்பக்கல் முன்பு உபகாரம் கொள்ளும்நாள் கொண்டு, பின்பு இவனுக்கு உதவவேண்டுமளவானவாறே போகாநிற்பர்கள். ஸ்வப்நத்தில் பதார்த்த தர்சநம் உணர்ந்தால் இன்றியே யிருக்கும்போலே யாய்த்து இவர்களோட்டை ஸம்பந்தமும். (அறிந்தேன் - பிறிந்தேன்) ஜ்ஞாநம் பிறக்கைக்கு ஒருகாலமும், த்யஜிக்கைக்கு ஒருகாலமும் வேண்டுகிறதில்லை.

இவ்வருகுண்டான பந்துக்கள் நமக்கு உபகாரகரல்லர்கள். இனி ‡இவ்வளவுக்குத் தஞ்சமாவாரார்? என்று நெஞ்சிலேபட்டவாறே, "என்னையே தஞ்சமாக நினைத்திரு" என்று அருளிச்செய்த தொரு வார்த்தை யுண்டிறே; அது இப்போது வாரா உதவிற்று. (நீபணித்த) அ

(க) பெரி-திரு-ச-கூ-ங.   ‡ (பா) அவ்வருகுக்கு.




வன் (க) "ம்ஹாமேகம் - மாமேகம்" என்றவார்த்தையாய்த்து. (அருள்) என்கிறதென்னென்றால்; என்னுடைய ப்ரஸாதத்தையே இவர்க்கு உஜ்ஜீவந ஹேதுவாக அத்யவஸி என்றானிறே. (ஒள்வாள்) ஸம்சயங்களையடையத் துணித்துப்பொகட்டு, (உ) "ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே - ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே" என்னப்பண்ண வற்றாயிருக்கை. (ங) "மருவலர்தமுடல் துணிய" என்றது - உபாய விஷயமாக உண்டாயிருக்கிறது. (ஐம்புலன்) ப்ராப்யாபாஸங்களாயும் ப்ராபகாபாஸங்களாயும் வருமவையடைய நினைக்கிறது - அஹங்கார மமகாரகர்ப்பமான க்ரியாகலாபங்கள் கிட்டாதபடியாகவும், தன் பக்கலிலே உத்தேஶ்யதா புத்தியைப் பிறப்பிக்கக் கடவதான விஷயங்கள் கிட்டாதபடியாகவும். (செறிந்தேன்) இனி அவன்றானே "நானல்லேன்" என்னிலும் அன்னத்தின் மூக்காலும் பிரிக்க வொண்ணாதபடி செறிந்தேன். (நின்னித்யாதி) இவர்க்கு இப்புத்தி விசேஷத்தைப் பண்ணுவித்தது திருவிண்ணகரிலே வந்து ஸந்நிதிபண்ணியாய்த்து. அர்ஜுநனுடைய தேர்த்தட்டுப்போலே யாய்த்துத் திருவிண்ணகர். அர்ஜுநனுக்கருளிச்செய்த வார்த்தை அவனோடொத்த ஸம்பந்தமுடையாரெல்லார்க்கு மாமிறே. ... ... ... ... ... (ச)

அரு.—காலாம்பாட்டு. (பிறிந்தேனித்யாதி) உமக்கு தர்மஸாதநமான தேஹம் உதவாமே போனால் உதவுகைக்கு பந்துவர்க்கமுண்டே; அவர்களாலே உஜ்ஜீவநம் ஸித்திக்கலாமே யென்ன; அது ஸித்தியாதாகையாலே விட்டேன் என்கிறார் என்று ஸங்கதி.

பந்துக்ருத்யமாவது-ஆபத்திலே உதவுமது, அது இல்லாமையாலே விட்டேனென்கைக்காக, பந்துக்ருத்யந்தன்னை யருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திலே யித்யாதி). இத்தால் - ஆத்மஹிதம் பண்ணுமவனே பந்து வென்றபடி. எல்லாம் இவர்களிட்ட வழக்காகில் இவனைக் கேட்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவன்றனக்கு மித்யாதி).

நீ பணித்தவார்த்தை என்னாமல், "அருள்" என்கிற தென்னென்று சங்காபிப்ராயம். அருளுக்கு ஒண்மை ஏதென்ன வருளிச்செய்கிறார் (ஸம்சயமித்யாதி). ஸம்சயமாவது-நீயோ புத்ராதிகளோ ரக்ஷகர் என்கிற ஸம்சயம். அருளை "வாள்" என்று சொல்லுகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (மருவலர்தமித்யாதி). சத்ருக்களைத் தம்முடைய வாளாலே துணிக்கு

(க) கீதை-கஅ-கூகூ. (உ) கீதை-கஅ-எங. (ங) ங-கூ-கo.

மாபோலே உபாய ஸம்சயங்களையும் அவனருளாகிற வாளைக்கொண்டு அணிப்பரென்றபடி. "ஒள்வாளுருவி - ஐம்புலன்கள் இடர்தீர-எறிந்தேன்." என்று அந்வயம். "எறிந்துவந்து" என்றது - அநுவாதம். "ஐம்புலன்கள்" என்று - ப்ராப்யாபாஸங்களைச் சொல்லுகையாலே, ப்ராபகாபாஸங்களும் அர்த்தாத் வந்தது. (அன்னத்தின் மூக்காலும்) என்றது-பிரிக்கப்போகாத பாலையும் நீரையும் பிரிக்கும் அன்னத்தின் மூக்காலுமென்கை. இத்தால்-அன்னம்போன்ற பிராட்டியாலும் சிதகுரைத்துப் பிரிக்கப்போகாதென்கை ஸூசிதமாய்த்து. அன்று சொன்னவார்த்தை இவர்க்கு இன்றாகிற படி எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (அர்ஜுநனுக் கித்யாதி). (௪)

மூ.—பாண்டேன் வண்டறையும் குழலார்கள் பல்லாண்டிசைப்ப
ஆண்டார் வையமெல்லா மரசாகி முன்னாண்டவரே
மாண்டாரென்று வந்தாரந்தோ மனைவாழ்க்கை தன்னை
வேண்டேன் நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே.(ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாண் | பாடாநின்றனவாய்க் கொண்டு | முன் ஆண்டவரே | (இப்படி) முன்பு ஆண்டுவந்த அவர்களே |
| தேன் | மதுபானம் பண்ணாநின்றுள்ள | மாண்டார் | மாண்டுபோனார்கள், |
| வண்டு | வண்டுகள் | என்று | என்ற சொல்லுக்கு விஷயராய்க்கொண்டு (இப்படி) |
| அறையும் | சப்தியாநின்ற | | |
| குழலார்கள் | மயிர்முடியை யுடைய ஸ்த்ரீகள் | வந்தார் | (அநாதிகாலமாக) வருகிறார்கள், (ஒருவர்க்கும்நிலையில்லை), |
| பல்லாண்டு இசைப்ப | உத்தரோத்தரம் மங்களங்களை ப்ரார்த்திக்க, (இவ்வுலகத்தார்) [ண்டு | அந்தோ | ஐயோ! ஐஶ்வர்யம் அஸ்த்திரம், (ஆகையால்) |
| அரசாகி | ராஜாக்களாய்க் கொ | மனைவாழ்க்கை தன்னை | ஸம்ஸாரஸுகத்தை [கொண்டு |
| வையம் எல்லாம் | ஸகலலோகங்களையும் [கள் | வேண்டேன் | விரும்பாதவனாய்க் |
| ஆண்டார் | பரிபாலநம் செய்தார் | நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே! | (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாண்டேன்) ஆனை, குதிரை, தேர், காலாள் கூட்டி, அவை கொண்டு ப்ரதிபக்ஷத்தை அழியச்செய்து, அவ்வழியாலே ஐஶ்வர்யத்தையும் தன்னதாக்கிக் கொள்ளவேண்டு மதன்றிக்கே ஸித்தமான ஐஶ்வர்யத்துக்கு மங்களாசாஸநம் பண்ணு

திரள்கோவையை) கண்டபோதே ஸ்ரமமெல்லாம் ஆறும்படி உடம் பிலே ஏறிட்டுக்கொண்டநுபவிக்கலாம்படி முத்தினுடைய திரண்ட மாலேபோலே யிருக்கிறவனே. (பத்தராவியை) தன்பக்கல் பரிவை யுடையார்க்குத் தன்னையொழிய ஜீவிக்கை அரிதாம்படியிருக்கிற வனே. (நித்திலத்தொத்தினை) மேன்மேலென நமக்குண்டென்று தேறியிருக்கலாம்படி முத்துக்குவைபோன்றிருக்கிறவனே. நித்திலம் முத்தும், அழகும். ஸௌந்தர்யத்தொத்தை.

(அரும்பினையலரை) இரண்டவஸ்த்தையும் ஒருகாலே சூழ்த்துக் கொடுக்கலாம்படியிருக்கிறவனே. (க) "யுவா குமார:- யுவா குமார:". (அடியேன் மனத்தாசையை) நான் நித்யாநுபவம் பண்ணுகிற்கச் செய்தேயும், இதுக்குமுன்பு அநுபவித்தறியாத தொன்றில் போலே பிறக்கிற ஆசையானவனே. (அமுதம் பொதியின் சுவைக்கரும்பினை) அம்ருதத்தை நீராகப்பாய்ச்சி வளர்த்தாப்போலே நிரதிசய போக்ய பூதமான கரும்புபோலே இனியனுயிருக்கிறவனே. (கனியை) அப் போதே நுகரலாம்படி பக்வபலமாயிருக்கிறவனே. (சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே) பசித்தவிடத்தே ஸ்வாது போஜநம்பண்ணப் பெறுவாரைப்போலே அபேக்ஷைபிறந்த விடத் தே கண்டநுபவிக்கப் பெற்றேன். ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. தாத்பர்யமருளிச்செய்து சப்தார்த்தம்காட்டு கிறார் (எல்லாக்கடலுக்குமித்யாதி). (எல்லாக்கடலுக்கும்) ஸப்தஸாகரத் துக்கும். அபூ(ர்வ)தோபமை என்று திருவுள்ளம். (முத்துக்குவை) முத் துக்குவியல். கீழ்முத்துமாலையைச் சொன்னது ப்ராப்யத்வாபிப்ராயேண; இங்கு முத்துக்குவியலைச் சொன்னது ப்ராபகத்வாபிப்ராயேண; வித்து ஜீவிக்கையாயிருக்கையாலே ரக்ஷகமாமென்றபடி.

(சூழ்த்துக்கொடுக்கலாம்படி) என்றது - வ்யாபித்திருக்கலாம்படி என்றபடி. "இன்சுவை" என்று விசேஷித்ததின் கருத்து (நிரதிசய போக்யபூதமான) என்றது. ... ... ... ... ... (க)

மூ. — மெய்ந்நலத்தவத்தை த்திவத்தைத்தரும்
மெய்யை பொய்யினைக் கையிலோர் சங்குடை
மைந்நிறக்கடலைக் கடல்வண்ணனை மாலை
ஆலிலைப்பள்ளிகொள் மாயனை

(க) ருக்வே-அஷ்ட-உ-அ-உரு.

நென்னலைப் பகலை யிற்றைநாளினை
நாளையாய்வரும் திங்களை யாண்டினைக்
கன்னலைக் கரும்பினிடைத் தேறலைக்
கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| மெய் | யதார்த்தமாய் (ஸ்வரூபாநுரூபமாய்) |
| நலம் | அழகியதான (ப்ரீதிரூபாபந்நமான) |
| தவத்தை | பக்தியோக ரூபமான தபஸ்ஸுக்கு விஷயபூதனாய், |
| திவத்தை | பரமபதத்தை |
| தரும் | கொடாநின்ற |
| மெய்யை | விஸ்வஸநீயமான ப்ரபத்திக்கு விஷயபூதனாய், |
| பொய்யினை | (அநாஸ்ரிதர்க்கு ஒரு ப்ரகாரத்தாலும்) இல்லாதவனாய் (காணப் படாதவனாய்), |
| கையில் | திருக்கையிலேநின்ற |
| ஓர் சங்கு உடை | ஒரு (அஸத்ருசமான) ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடைத்தாய் |
| மை நிறம் | அஞ்ஜநத்தின் வர்ணத்தையுடைத்தான |
| கடலை | (விஜாதீயமான) ஸமுத்ரம் போன்றவனாய், |
| கடல்வண்ணனை | ஸமுத்ரத்தின் (ரக்ஷகத்வ) ஸ்வபாவத்தையுடையனாய், |
| மாலை | ஸர்வாதிகனாய், |
| ஆலிலை | ஆலந்தளிரில் |
| பள்ளிகொள் | (ப்ரளயகாலத்தில்) கண்வளர்ந்தருளுகிற |

| பதம். | உரை. |
|---|---|
| மாயனை | ஆஸ்சர்யபூதனாய், |
| நென்னலைபகலை | நேற்றுப்பகலிலே அநுபவிக்கப் பட்டவன் போல் அநுபூதஸுக ஸ்மரண மாத்ரத்திலே ஸுகப்ரதனாய், |
| இற்றைநாளினை | இன்றையதினம் அநுபவிக்க ப்படுமவன் போல் தத்கால ஸுகஜநகனாய், |
| நாளையாய் | நாளையதினத்தில் அநுபவிக்கப்படுமவன் போல் பவிஷ்யத் காலத்தில் ஆநந்தஜநகனாய், |
| வரும் | (இப்படி அநேக நாள்கள் கூடி) வாராநின்ற |
| திங்களை | மாஸங்கள் தோறும், |
| ஆண்டினை | (அப்படியே அநேக மாஸங்கள் கூடின) வர்ஷங்கள்தோறும் ஆநந்திப்பிக்குமவனாய், |
| கன்னலை | சர்க்கரைபோல் இனியனாய், |
| கரும்பினிடை | கருப்பந்தடியிலே யுண்டான |
| தேறலை | ரஸம்போல் அப்போதே அநுபவிக்கலாம்படி யிருக்குமவனானவனை |

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (உ)






வ்யா. —இரண்டாம்பாட்டு. (மெய்ந்நலத்தவத்தை) ஸ்வரூபாநுரூபமாய், ஸ்நேஹரூபமாயிருக்கிற அபிமதஸாதநமான ப(க்)த்தியை. (திவத்தைத்தரும் மெய்யை) ப்ரபத்தியை. (பொய்யினை) இவ்விரண்டு மில்லாதார்க்குத் தன்படிகளொன்று மறியவொண்ணு திருக்குமவனை. (கையிலேரித்யாதி) கீழ்ச்சொன்ன இரண்டுமுடையார்க்குக் காட்சிகொடுக்கும் வடிவையுடையவனை. கண்டத்தை எல்லார்முடைய உள்ளேயிட்டுநோக்கும்கடல்போலன்றியே, ஓர்சங்குடைமைநிறக்கடலை. (கடல்வண்ணனை) ஸர்வபதார்த்தங்களையும் தன்னுள்ளே அடக்கி, சிறியதைப் பெரியது நலியாதபடி தன்திரைகளாகிற கையாலே நோக்கும் கடல்போலே யிருக்கும் ஸ்வபா(வ)வத்தையுடையவனை. (மாலை) ஸர்வாதிகனை. (ஆலிலையித்யாதி) அகடிதக(க)டநா ஸாமர்த்த்யத்தை யுடையவனை. ஒருசிறுவடிவாலே ஸகலலோகங்களையு மடக்கி ஒருபவனுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின ஆஸ்சர்ய பூ(ப)தனை.

(நென்னலைப்பகலை) அபிமதலாபமுண்டான பிற்றைநாளில் நிர்வ்ருதி போலே "நேற்றைப் பகலிலே அநுபவமிருந்தபடி என்" என்று ஸ்மரித்துத் தரிக்கலாம்படி யிருக்கிறவனை. (இற்றைநாளினை) அநுபூ(ப)யமான நாளானவனை. (நாளையாய்வரும் திங்களை) இவ்வநுபவத்துக்கு விச்சேதம் பிறவாமே, நாளையாயும் வரப்புகாநின்றதென்று அநுஸந்திக்கலாம்படியிருக்கிற நாளையாய், அதுதான் ஒருநாளுமேயாய்ப் போகாமே அப்படி என்றுமொக்கச் சொல்லலாம்படியான நாள்களையுடைய மாஸமானவனை. (ஆண்டினை) அப்படிப்பட்ட மாஸங்களையுடைய ஆண்டானவனை. இனி அவ்வாண்டுதன்னை அப்படியே இரட்டித்துக் கொள்ளுமத்தனை. (கன்னலை) நிரதிசயபோக்ய (ரஸ)னானவனை. (கரும்பினிடைத்தேறலை) நெருக்கிக்கார்யம்கொள்ள வேண்டாதே, அப்போதே பருகலாம்படியிருக்கிற கரும்பில் ஸாராம்சமானவனை. கண்ணமங்கையுள். ... ... ... (உ)

---

அரு —இரண்டாமபாட்டு. (மெய்ந்நலமித்யாதி) "சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே" என்னாநின்றீர்; எவ்வழியாலே உமக்குக்காட்டக்கண்டுகொண்டீர் என்ன; "ப(க்)த்திப்ரபத்திகளுக்கெல்லாம் அவனே நிர்வாஹகனுகையாலே அவ்வழியாலே" என்று நின்று கொண்டு நிரதிசயபோக்யதாப்ரகாரத்தைப்பேசி அநுபவிக்கிருரென்று ஸங்கதி.

(அபிமதஸாதநமான) என்றது—போஜநத்துக்கு க்ஷுத்து போலே ப்ராப்யத்துக்கு அவஶ்யாபேக்ஷிதமான என்றபடி. இங்ஙனன்றாகில், ஸ்வரூபவிருத்தமான ப(வ)க்தி ஸ்வரூபாநுரூபமாகாதிறே. (ப்ரபத்தியை) என்றது—ப்ரபத்தவ்யனானவனை யென்றபடி. “ ஓர் சங்கு ” என்று விசேஷிக்கையாலே, பலசங்குடைய கடலை வ்யாவர்த்திக்கிறது. பலிதார்த்தமருளிச்செய்து சப்தார்த்தமருளிச் செய்கிறார் (ஒரு சிறுவித்யாதி).

ஆண்டொழிய பின்னையும் காலமில்லையோ வென்ன வருளிச் செய்கிறார் (இனியித்யாதி). (இரட்டிக்கை)மேலுமிப்படிபெருக்கிக்கொள்ளுகை. எல்லாக்காலத்துக்கும் இப்படி நிர்வாஹகனென்கை. ... ... (உ)

மூ. — எங்களுக்கருள் செய்கின்றவீசனை
வாசவார்குழலாள் மலைமங்கைதன்
பங்கனைப்பங்கில் வைத்துகந்தான்றன்னைப்
பான்மையைப் பனிமாமதியந்தவழ்
மங்குலைச்சுடரை வடமாமலையுச்சியை
நச்சிநாம் வணங்கப்படும்
கங்குலைப் பகலைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| எங்களுக்கு | அநந்யகதிகளான எங்கள்விஷயத்தில் |
| அருள்செய்கின்ற | க்ருபைபண்ணுகின்ற |
| ஈசனை | ஸர்வேஶ்வரனாய், |
| வாசம் வார் | பரிமளம்வீசாநின்ற |
| குழலாள் | மயிர்முடியை யுடையவளாய் |
| மலைமங்கை | இமயமலைக்குப்பெண்ணான பார்வதியை |
| தன்பங்கனை | தன்னுடைய பார்ஶ்வத்திலே யுடையனான ருத்ரனை |
| பங்கில் | தன்திருமேனியிலோர் பாகத்தில் |
| வைத்து | இருத்தி |
| உகந்தான்தன்னை | ஸந்தோஷித்தவனாய், |
| பான்மையை | (இப்படிப்பட்ட சீர்மையை) ஸ்வபா(வ)வமாக வுடையனாய், |
| பனி | குளிர்ந்தும் |
| மா | பரந்துமிருக்கிற |
| மதி | சந்த்ரனுடைய |
| அம்தவழ் | அழகியஸஞ்சாரத்தை யுடைத்தாயிருக்கிற |
| மங்குலை | ஆகாசத்துக்கு நிர்வாஹகனாய் |
| சுடரை | ஸூர்யனுக்கு அந்தர்யாமியாய், |
| வட | வடதிசையிலுள்ள |
| மா | பெரிய |
| மலை | திருவேங்கட மலையினுடைய |
| உச்சியை | சிகரத்திலே (எழுந்தருளியிருக்குமவனாய்) |

| | |
|---|---|
| நச்சி | ஆசைப்பட்டு |
| நாம் | நம்மாலே |
| வணங்கப்படும் | ஆஶ்ரயிக்கப்படாநின்ற |
| கங்குலை | ராத்ரிக்கு நிர்வாஹகனாய், |
| பகலை | பகற்காலத்துக்குக்கடவனானவனை |

சென்றுநாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (௩)

வ்யா. — மூன்றாம்பாட்டு. (எங்களுக்கருள் செய்கின்றவீசனை) அநந்யகதிகளான எங்கள்பக்கலிலே நிர்ஹேதுகக்ருபையைப் பண்ணுகிற ஸர்வேஶ்வரனை. (வாசவார்த்யாதி) எங்களைப்போலன்றியே, தானுமொருஸ்த்ரீயுமாய், ஈஶ்வராபிமாநம் கொண்டாடியிருக்கிற ருத்ரனை, தன் திருமேனியில் ஒருபார்ஶ்வத்திலேவைத்து அதுதன்னைத் தன்பேறாகவைத்து உகந்திருக்கிறஶீலத்தையுடையவனை. (பான்மையை) இஶ்ஶீலந்தான் புழுக்குறித்து எழுத்தாமாபோலே ஒருகாலுண்டாய்ப்போமதன்றியே இதுவே ஸ்வபா(ஃ)வமாம்படி யிருக்கிறவனை.

(பனிமாமதியந்தவழ்மங்குலை) குளிர்ந்து நிறைந்திருக்கிற சந்த்ரனுடைய ஸஞ்சாரத்தையுடைய ஆகாசமானவனை. (சுடரை) நீர்க்களிப்பை அறுக்கைக்கீடான கிரணங்களையுடைய ஆதித்யனை. (வடமாமலையுச்சியை) இப்படி ஸாதாரணமான வடிவேயன்றியே அஸாதாரணமான விக்ரஹத்தோடே அத்திருமலையிலேகதேசமாய் நிற்கிறவனை. (நச்சிநாம் வணங்கப்படும் கங்குலை) நசையை யுடையோமாய்க்கொண்டு நம்மாலேஆஶ்ரயிக்கப்படுகிற போக(ஃ)போக்யமான காலமானவனை. (பகலை) அதுக்குறுப்பாக த்ரவ்யார்ஜநத்துக்கீடான காலமானவனை. சென்றுநாடி. ... ... ... (௩)

அரு — மூன்றாம்பாட்டு. (எங்களுக்கித்யாதி) கீழ்ப்பாட்டில், "மெய்ந்நலத்தவத்தை" என்றும், "திவத்தைத்தரும்மெய்யை" என்றும் இவ்விரண்டும் வ்யாஜமாக்கி ரக்ஷிப்பானென்றீர்; உமக்கிரண்டு கோடியிலும் வைத்துக்கொண்டு எத்காலே ரக்ஷித்தானென்ன; தன்னுடையநிர்ஹேதுக க்ருபையாலே என்றத்தை அநுஸந்தித்து அவன் ஶீலாதிகளையும் அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(ஸாதாரணம்) என்றது-ஜீவனுக்குந்தனக்கும்பொதுவானவென்றபடி.

மூ. — பேய்முலைத்தல நஞ்சுண்டபிள்ளையைத்
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை
மாயனை மதிள்கோவலிடைகழி
மைந்தனையன்றி யந்தணர் சிந்தையு

ளீசனையிலங்கும் சுடர்ச்சோதியை
எந்தையை யெனக்கெய்ப்பினில் வைப்பினை
காசினை மணியைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேய் | பூதனையினுடைய | அந்தணர் | ஶ்ரீ வைஷ்ணவர்களு டைய |
| முலைத்தடம் | முலையின் ஸ்தலத் திலே யுண்டான | சிந்தையுள் | மநஸ்ஸிலே (இருந்து) |
| நஞ்சு | விஷத்தை | ஈசனை | (அவர்களை) நியமிக்க வல்லனாய், |
| உண்ட | அமுதுசெய்த | இலங்கும் | (அவர்கள் தோஷம் தட்டாதபடி) விள ங்காநின்ற |
| பிள்ளையை | பாலனாய், | சுடர் | உஜ்ஜ்வலமான |
| தெள்ளியார் | ஜ்ஞாநாதிகராலே | சோதியை | தேஜோரூபியாய், |
| வணங்கப்படும் | ஆஶ்ரயிக்கப்படாநின் றவனாய், | எந்தையை | எனக்கு ஸ்வாமியாய் |
| தேவனை | (அத்தாலே) திவ்யமா னனாய், | எனக்கு எய்ப்பினில் வைப்பினை | எனக்கு [லத்தில் தளர்த்திமேலிடும் கா நிதிபோல் ரக்ஷகனாய், |
| மதின் | ப்ராகாரங்களினால் சூ ழப்பட்ட | காசினை | ஸுவர்ணம் போல் ஸ்ப்ருஹணீயனாய், |
| கோவல் | திருக்கோவலூரிலே | மணியை | ரத்நம்போல் அதிஸ லாக்யனா யுள்ள வனை |
| இடைகழி | திருவிடைகழியிலே (முதலாழ்வார்களு டனே நெருக்கியரு ளியிருக்கிற) | சென்றுநாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (ச) | |
| மைந்தனை | யுவாவாய் | | |
| அன்றி | அதுக்குமேலே | | |

வ்யா. —நாலாம்பாட்டு. (பேய்முலையித்யாதி) பூதனையுடைய முலை ஸ்தலத்திலுண்டான விஷத்தை அமுதுசெய்து, விழுக்காடறியாத முக்த(☓)னை. (தெள்ளியார் வணங்கப்படும்தேவனை) இப்படி முக்த(☓)ரன்றியே அறிவுடையராயிருப்பாராலே ஆஶ்ரயிக்கப்படுவானாய், அத்தாலே திவ்யமானனானவனை. (மாயனை) ஆஶ்சர்யபூதனை. (மதிட்கோவலிடைகழிமைந்தனை) இடமில்லாதிடத்தே ஆஶ்ரிதரோடே புகுந்து நெருக்கின நித்ய யௌவநஸ்வபாவனை. (அன்றி அந்தணர் சிந்தையுளீசனை) அதுக்குமேலே ஆஶ்ரிதருடைய ஹ்ருதயத்திலே புகுந்து, அவர்களைத்தன்வழியே நியமித்துக்கொண்டிருக்கிறவனை.

(இலங்கும் சுடர்ச்சோதியை) இவர்களுடைய சரீரத்திலும், ஆத்மாவிலும்வர்த்தியாநிற்கச்செய்தே அவற்றைப்பற்றிவரும்தோஷங்கள் தன்பக்கலிலே தட்டாதபடியிருக்கிறவனை. (எந்தையை) இஸ்ஸ்வபா(ஶ)வத்தைக்காட்டி என்னைஎழுதிக்கொண்டவனை. (எனக்கெய்ப்பினில் வைப்பினை) எனக்குக் கைம்முதலில்லாதவன்று அழித்துக் கெடுத்துஜீவிக்கலாம்படியானநிதியானவனை. (காசினை)பொன்போலே ஸ்ப்ருஹணீயனானவனை. (மணியை) அப்பொன்னை அழித்தும் ஸ்வீகரிக்கக்கடவ ரத்நம்போலே ஶ்லாக்யனானவனை. சென்றநாடி. (சு)

---

அரு.—நாலாம்பாட்டு. (பேய்முலையித்யாதி) இப்படி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தது உம்மைத்தானேயோ? மற்று யாரையாகிலும் இப்படி கடாக்ஷித்ததுண்டோவென்ன; முதலாழ்வார்களையும் கடாக்ஷித்தானென்னக்கேட்டு ஆயனுருடைய பிள்ளைச் சேவகம் தொடங்கி அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(அதுக்கு மேலே) என்றது-முதலாழ்வார்களைக் கடாக்ஷித்ததுக்கு மேலே யென்றபடி. "அந்தணர்" என்ற பதம் - திருமழிசைப்பிரான், பட்டர்பிரான், தொண்டரடிப் பொடியாழ்வார் இவர்களைச்சொல்லிற்றாய், இவர்களைச்சொன்னது உபலக்ஷணமாக்கி,மாறன், குலசேகரன், பாணன் என்கிற மூவரையும் திருவுள்ளம்பற்றி (ஆஶ்ரிதருடைய) என்றருளிச்செய்தது.

(இஸ்ஸ்வபாவத்தை)என்றது-ஆழ்வார்கள் ஒன்பது திருநாமங்களையும் மயர்வறமதி நலமருளிக் கடாக்ஷித்த ஸ்வபா(ஶ)வத்தை யென்றபடி. (சு)

மூ — ஏற்றினையிமயத்துளெம்மீசனை
இம்மையைமறுமைக்கு மருந்தினை
ஆற்றலை யண்டத்தப் புறத்துய்த்திடு
மையனைக் கையிலாழி யொன்றேந்திய
கூற்றினைக் குரு மாமணிக்குன்றினை
நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினைக்
காற்றினைப் புனலைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டு கொண்டேனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏற்றினை | ருஷபம்போல் செருக்கனாய், | எம்மீசனை | நம்முடைய ஸ்வாமியாய், |
| இமயத்துள் | ஹிமவானில் (திருப்பிரிதியில்) எழுந்தருளியிருக்கிற | இம்மையை மறுமைக்கு | ஐஹிகபலப்ரதனாய் ஆமுஷ்மிக பலங்களுக்கு |

| | |
|---|---|
| மருந்தினை | ஔஷதம்போல் ஸாதகபூதனாய் |
| ஆற்றலை | மிடுக்கனாய், |
| அண்டத்து அப்புறத்து | அண்டத்துக்கு வெளியிலே (பரமபதத்தளவும்) |
| உய்த்திடும் | (ஆச்ரிதரை) நடத்த வல்லவனை |
| ஐயனை | நிருபாதிக பந்துவாய் |
| கையில் | திருக்கையில் |
| ஒன்று ஆழி | அத்விதீயமான ஸுதர்சநாழ்வானை |
| ஏந்திய | தரித்துக்கொண்டு |
| கூற்றினை | ம்ருத்யு போலே (அநாச்ரிதர்க்கு) பயங்கரனாய், |
| குரு | ச்லாக்யமாய் |
| மா மணி | நீலமணிமயமான |
| குன்றினை | மலைபோல் அதிஸுந்தரனாய் |
| நின்றவூர் | திருநின்றவூரில் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| நித்திலம் தொத்தினை | முத்துக்குவியல் போல்குளிர்ந்தவடிவை யுடையனாய், |
| காற்றினை | காற்றுபோல் ஸுககரனாய் |
| புனலை | ஜலம்போல் தாரகனாயுள்ளவனை |
| | சென்றுநாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (ஙி) |

வ்யா. — அஞ்சாம்பாட்டு (ஏற்றினை) ஸ்வாநந்தாநுபவத்தால் வந்த செருக்கையுடையவனை. (இமயத்துளெம்மீசனை) ஹிமவானில் திருப்பிரிதியிலிருக்கு மிருப்பைக்காட்டி என்னை வசீகரித்தவனை. (இம்மையை மறுமைக்கு மருந்தினை) ஐஹிகமாயும் ஆமுஷ்மிகமாயு முள்ள ப(ஃ)லங்களுக்கு ஸாதநபூதனானவனை. (ஆற்றலை) ஒருவஸ்துவே எல்லாவற்றையும் தரவற்றோவென்னில்; அக்கண்ணழிவுசொல்ல வொண்ணாதபடி ஸர்வசக்தியுக்தனானவனை. (அண்டத்தப் புறத்துய்த்திடுமையனை) இஸ்ஸர்வசக்தித்வம்கொண்டு கொள்ளவிருக்கிற கார்யமென்னென்னில்; இவற்றைப்பரமபதத்தளவும் செல்லநடத்துகை. அது தானவனுக்கு வேண்டுகிறதென்னென்னில்; (ஐயனை) நிருபாதிக பந்து(பந்து)வாகை.

(கையிலாழியொன்றேந்திய கூற்றினை) ஆதிவாஹிகர் கையிலே காட்டிக்கொடுத்துக் கொடுபோகாநின்றால், ஆரேனும் சிலர்விலக்கிலருண்டாகில் இருதுண்டமாக்குகைக் கீடான பரிகரத்தையுடையனாய், சத்ருக்களுக்கு ம்ருத்யுபோலேயானவனை. (குருமாமணிக் குன்றினை) ச்லாக்யமானநீலரத்ந பர்வதம்போன்ற வடிவையுடையவனை. அங்கேகொடுபோனால் காட்சிகொடுக்கும்படியான வடிவிருக்கிறபடி. (நின்றவூர்நின்றநித்திலத்தொத்தினை) அவ்வளவும்போகப்பட்டாறாதார்க்குக் காட்சிகொடுக்கைக்காக திருநின்றவூரிலேநிற்கிற முத்துத்திரள்

போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனை. (காற்றினை) ஸ்வஸ்பர்ஶத்தால் வரும் ஸுகமாயிருக்கிறவனை. (புனலை) தா(ஹ)ரகனானவனை சென்றுநாடி. ... ... ... ... (௫)

---

அ௫.—அஞ்சாம்பாட்டு- (ஏற்றினையித்யாதி) இப்பாட்டில் தம்மை விஷயீகரித்தமையை ஸத்ருஷ்டாந்தமாக அநுஸந்தித்தார். இப்படி ஆழ்வார்களையெல்லாம் விஷயீகரித்துப்பெற்ற மேன்மையின்புகளெல்லாம் தோற்ற எழுந்தருளியிருக்கும் திருப்பிரிதி தொடங்கி அநுபவித்து த்ருஷ்டரானவளவிலே அவனுடைய ஐஹிகாமுஷ்மிகாதி ப(ஃ)லப்ரதத்வம், மோக்ஷப்ரதத்வம் முதலானவற்றையு மநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"மருந்து" என்பது தீர்க்குமதாகையாலே உபயவித ப(ஃ)லஸாதநபூதனென்றபோதே அவை இல்லாமையால் வரும் துக்கத்தைப்போக்குமவனென்றுமென்று திருவுள்ளம்பற்றியருளிச் செய்கிறார் (ஐஹிகமாயுமித்யாதி) "இம்மையை" என்கிற விடத்தில் ஐகாரம் அவ்யயம்.

(அவ்வளவும் போக) சரீராவஸாந ஸமகந்தரத்தளவும் செல்ல (பற்றுதார்க்கு) பொறுக்கமாட்டாதார்க்கு. ... ... ... ... (௬)

மூ. — துப்பனைத் துரங்கம் படச்சீறிய தோன்றலைச்
சுடர்வான்கலன் பெய்ததோர்
செப்பினைத் திருமங்கைமணாளனைத்
தேவனைத் திகழும் பவளத்தொளி
யொப்பனை யுலகேழினை யூழியை
ஆழியேந்திய கையனை யந்தணர்
கற்பினைக் கழுநீர்மலரும் வயல்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துப்பனை | ஸமர்த்த (பலிஷ்ட்ட)னாய், | பெய்தது | இட்டுவைக்கும் படியான |
| துரங்கம் | கேஶியென்னும் அஸுரனானவன் | ஓர் | விலக்ஷணமான |
| | | செப்பினை | செப்பு (பாத்ரம்)போன்றவனாய், |
| பட | அழியும்படியாக | | |
| சீறிய | (அவனை) கோபித்தருளின | திருமங்கை | பெரிய பிராட்டியார்க்கு |
| தோன்றலை | ஸுந்தரனாய், | மணாளனை | வல்லபனாய், |
| சுடர் | உஜ்ஜ்வலமாய் | தேவனை | (அத்தால்) விளங்குமவனாய், |
| வான் | பெருவிலையனான | | |
| கலன் | ஆபரணங்களை | திகழும் | ஒளிவிடாநின்ற |

| | | | |
|---|---|---|---|
| பவளத்து | பவழத்தினுடைய | கையனை | திருக்கையை யுடைய |
| ஒளி ஒப்பனை | காந்தியோடொத்தவ (ஸ்ப்ரு ஹ ணீ ய) னாய், | அந்தணர் | ப்ராஹ்மணராலே |
| உலகுஏழினை | ஸப்தலோகங்களுக்கு நிர்வாஹகனாய், | கற்பினை | ஓதப்படுமவனானவனை |
| ஊழியை | காலத்துக்கு நிர்வா ஹகனாய், | கழுநீர் | செங்கழுநீர்ப் பூவா |
| ஆழி ஏந்திய | திருவாழியைத்தரியா நின்ற [வனாய், | மலரும் | அலராநின்ற [னது |
| | | வயல் | கழனிகளையுடைய |
| | | கண்ணமங்கையுள் கண்டுகொண் டேன். (கூ) | |

வ்யா. —ஆறும்பாட்டு. (துப்பனை) தான்நினைத்தவை செய்து தலைக்கட்டுகைக்கீடானஸாமர்த்த்யத்தையுடையவனை. (தூங்கம்படச் சிறியதோன்றலை) கேசியுடைய வாய்கிழியும்படி சிறியமுக்த(ᳵ) னை. (சுடர்வான்கலன் பெய்ததோர் செப்பினை) ஒளியையுடைத்தாய், பெருவிலையனாயிருந்துள்ள ஆபரணங்களை இட்டுவைக்கும் செப்பானவனை. "சுடர்வான்கலன்" ஆகிறது தானேதென்னில்; (திருமங்கைமணாளனைத் தேவனை) பிராட்டியும் தானுமான சேர்த்தியிலே யுண்டான ஒத்துமஞ்சளும், செம்பஞ்சிக்குழம்பும், மாளிகைச்சாந்தின் நாற்றமுமாய்க்கொண்டு திருமேனியில் புகர்தோன்றநின்றநிலை.

(திகழும் பவளத்தொளியொப்பனை) ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயனானவனை. (உலகேழினை) போக்ய (ᳵ) போகோ (ᳵ) பகரண போக (ᳵ) ஸ்தாநங்களாயுள்ளவனை. (ஊழியை) காலமே சேஷித்தவன்று காலமாய்நின்றவனை. (ஆழியேந்தியகையனை) நித்யமான திவ்யாயுதங்களை ஏந்தும் திருக்கையை யுடையவனை. நித்யமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனை யென்றபடி. (அந்தணர் கற்பினை) ப்ராஹ்மணருடைய மர்யாதைபோலே யிருக்கிற ஸங்கல்பத்தையுடையவனை, ப்ராஹ்மணராலே அத்யயநம் பண்ணப்படுகிறவனை யென்றுமாம். (கழுநீர்மலரும் வயல்) செங்கழுநீர் தொடக்கமான புஷ்பங்கள் அலராநின்றவயலையுடைத்தானது. ... ... ... (கூ)

---

அரு. —ஆறும்பாட்டு. (துப்பனையித்யாதி) கீழ்ச்சொன்ன ப(ᳵ)லப்ரதத்வோபயுக்தமான ஸாமர்த்த்யத்தையும், தத்கார்யமான விரோதிநிரஸநத்தையும், அதுக்கடியான ஸ்ரிய:பதித்வத்தையும், இவையெல்லா மநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"தோன்றல்" என்றது-அழகுக்குவாசகமாகையாலே,(மூர்த்த(ர்)னை) என்றது; ஸுந்தரனையென்றபடி.

"ஏந்திய" என்றது- ஏந்துமென்றாய், அத்தால் பலித்தது (நித்யமான) என்றது. (மர்யாதைபோலே) என்றது-சாபாநுக்ரஹஸங்கல்பம்போலே யென்கை. "கற்பினை" என்றதுக்கு - கற்கப்படுமவனை யென்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (ப்ராஹ்மணராலேயித்யாதி). ... ... ... (சு)

மூ. — திருத்தனைத் திசைநான்முகன் தந்தையைத்
தேவதேவனை மூவரில்முன்னிய
விருத்தனை விளங்கும் சுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக் கண்ணுதல்கூடிய
அருத்தனை யரியைப் பரிகீறிய
அப்பனை யப்பிலா ரழலாய்நின்ற
கருத்தனைக் களிவண்டறையும்பொழில்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| திருத்தனை | (ஆகந்தத்தினால்) திருப்தனாய், (பரிபூர்ணனாய்), |
| திசை | திக்கிலுள்ளவர்களுக்கு நிர்வாஹகனை, |
| நான்முகன் | ப்ரஹ்மாவுக்கு |
| தந்தையை | பிதாவாய், |
| தேவதேவனை | தேவர்களாலே ஆஶ்ரயிக்கப்படும் தேவனாய், |
| மூவரில் | ப்ரஹ்ம விஷ்ணுருத்ரரான மூவர்களுக்குள் (மற்ற இருவர்க்கும்) |
| முன்னிய | ப்ரதா(ன)னானை |
| விருத்தனை | நாயகனாய் (நியாமகனாய்) |
| விளங்கும் | ப்ரகாசியாநின்ற |
| சுடர் | உஜ்ஜ்வலமான |
| சோதியை | தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தை யுடையனாய், |
| விண்ணை | ஸ்வர்க்கத்துக்கு நியாமகனாய் |
| மண்ணினை | பூமிக்கு நியாமகனாய், |
| கண்ணுதல் | நெற்றிக் கண்ணனான ருத்ரனானவன் |
| கூடிய | சேர்ந்திருக்கிற |
| அருத்தனை | அர்த்த (அர்த்) பாக(த்)த்தை யுடையவனாய், |
| அரியை | ஸிம்ஹம்போல் மிடுக்கனாய், |
| பரிகீறிய | கேசியைக் கிழித்துப் போகட்ட |
| அப்பனை | உபகாரகனாய், |
| அப்பில் ஆர் | ஜலத்திலே இருக்கிற |
| அழலாய்நின்ற | படபாக்நி போல்(எல்லா பதார்த்தங்களுக்கும் லயஸ்தானமாய்) இருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| கருத்தனை | ஸர்வஸ்வாமியாயுள்ள ஸர்வேச்வரனை, | அறையும் | சப்தியாநின்ற |
| களி | மதித்திருக்கிற | பொழில் | சோலைகளையுடைய |
| வண்டு | வண்டுகளானவை | கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். | (எ) |

வ்யா.—எழாம்பாட்டு. (திருத்தனை) ஸ்வாநந்தா(நு)நுபவத்தாலே நித்யத்ருப்தனானவனை. (திசைநான்முகன் தநைதயை) இவ்வருகுள்ளாரில்காட்டில் அதிகனாயிருக்கிறசதுர்முகனுக்கு ஜநகனானவனை. (தேவதேவனை) அவனொருவனுக்குமன்றிக்கே, தேவர்களானாரெல்லாராலும் ஆச்ரயிக்கப்படுமவனை. (மூவரில்முன்னியவிருத்தனை) மூவருமான நிலையில் மற்றை இருவர்க்குத் தானே நியாமகனாய், தானானநிலையில் வந்தால் சேஷித்வத்தால்வந்த உறைப்புத்தோற்ற விருக்கிறவனை. (விருத்தனை) தலைமகனை. (விளங்கும் சுடர்ச்சோதியை) த்ரிமூர்த்தி மத்யஸ்த்தனான நிலையொழிய அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையனானவனை. (விண்ணை) போக (भोग) பூமியான ஸ்வர்க்காதிகளானவனை. (மண்ணினை) அதுக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணும் கர்மபூமியானவனை.

(கண்ணுதல்கூடிய வருத்தனை) லலாடநேத்ரனான ருத்ரனையுடைத்தான அர்த்த (र्ध) பாக(भाग)த்தை யுடையவனை. (அருத்தன்) அர்த்த (र्ध) பாகன். (அரியை) விரோதிகளைப் போக்குமவனை. (பரிதிறிய வப்பனை) விரோதிநிரஸநத்தை சீலமாகவுடைய உபகாரகனை (அப்பிலாரழலாய்நின்ற கருத்தனை) படபா (बडबा)முகாக்நி ஜலாம்சமடையத் தன்பக்கலிலே வந்து சுவறும்படி யிருக்குமாபோலே ஸர்வபதார்த்தங்களும் தன்பக்கலிலேவந்து லயிக்கும்படியிருக்கிறசக்தியை யுடையவனை. களிவண்டறையும். ... ... ... ... (எ)

அரு.—எழாம்பாட்டு. (திருத்தனையித்யாதி) இப்பாட்டில் ஸர்வப(த)ப்ரதத்தேவாபயுக்தமான ஸர்வசக்தித்வத்தை யநுஸந்தித்தார்; அதுக்குறுப்பாக விரோதிநிரஸநத்தைப் பலபடியாக அநுஸந்திக்கக்கோலி ப்ரபேக்ஷதையை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(தலைமகனை) நாயகனை. மூவரிலித்யாதியான பதங்களில் குணங்களெல்லாம் ஸர்வஸமாச்ரயணீயத்வத்துக்குறுப்பாக வநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம். ... ... ... ... ... ... (எ)

மூ. — வெஞ்சினக்களிற்றை விளங்காய்வீழக்
கன்றுவீசிய வீசனைபேய்மகள் துஞ்ச
நஞ்சுசுவைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன் கெடத்தோன்றிய
நஞ்சினையமுதத்தினை நாதனை
நச்சுவாருச்சிமேல் நிற்கும்நம்பியைக்
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்த வஞ்சனைக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெம்சினம் | அதிக்ரூரமான கோபத்தையுடைய | கெட | முடியும்படி |
| களிற்றை | யானைபோல் அழகியனாய், | தோன்றிய | திருவவதரித்த |
| விளங்காய் | விளாம்பழமான அஸுரனவன் | நஞ்சினை | விஷம்போன்றவனாய் |
| வீழ | விழுந்து முடியும்படி | அமுதத்தினை | (ஆஸ்ரிதர்க்கு) அம்ருதம்போல் போக்யபூதனாய், |
| கன்று | கன்றாய்வந்த அஸுர | நாதனை | ஸர்வசேஷியாய், |
| வீசிய | னைத்தூக்கியெறிந்த | நச்சுவார் | (தன்னை) ஆசைப்படுமவர்களுடைய |
| ஈசனை | ஸ்வாமியாய், | உச்சிமேல் | சிரஸ்ஸில் |
| பேய்மகள் | பூதனையானவள் | நிற்கும் | எழுந்தருளியிருக்கிற |
| துஞ்ச | முடியும்படி | நம்பியை | பூர்ணனாய், |
| நஞ்சு | (அவள் முலையிலுள்ள) விஷத்தை | கஞ்சனை | கம்ஸனை |
| சுவைத்து | உறிஞ்சி | துஞ்ச | (அவன்) முடியும்படி |
| உண்ட | அமுதுசெய்த | வஞ்சித்த | மோசம் செய்த (கொன்ற) |
| தோன்றலை | பாலகனாய், | வஞ்சனை | க்ருத்ரிமனாயுள்ளவனை |
| தோன்றல் | (சத்ருவாக)ப்ரஸித்தனான | கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். | (அ) |
| வாள் அரக்கன் | வாளாயுதத்தையுடைய ராவணாஸுரன் | | |

வ்யா. —எட்டாம்பாட்டு. (வெஞ்சினக்களிற்றை) வெவ்விய சினத்தையுடைய மதஹஸ்திபோலே தர்ஶநீயனானவனை. (விளங்காயித்யாதி) கன்றாயும் விளாவாயும் வந்த அஸுரர்களிருவரையும் தன்னைக் கொண்டு தன்னையே மாய்த்துத்தர தான்நினைத்தது தலைக்கட்டவல்லவனை (பேய்மகளித்யாதி) பூதனைமுடியும்படி அவளுடைய விஷத்தை போக்யமாகக் கொண்டமுதுசெய்த முக்த(ஞ)னை. (தோன்றலித்

யாதி) சத்ருவாக ஸர்வலோகங்களிலும் ப்ரஸித்தனாய் ஸாயுதனுமா யிருக்கிற ராவணன்முடியும்படி தோன்றின ம்ருத்யுவை.

(அமுதத்தினை) அவ்விருப்புத்தானே அநுகூலர்க்கு போக்யமா யிருக்கிறவனை. (நாதனை) நிருபாதிகசேஷியை. (நச்சுவார்ச்சிமேல் நிற்கும் நம்பியை) தன் பக்கலாசையுடையார் தலைமேலே நிற்குமவனாய், அதுதான் பெருப்பேறாக நினைத்து பூர்ணனாயிருக்கிறவனை (கஞ்சனையித்யாதி) கம்ஸனுடைய துரபிஸந்தியை அவன்தன்னோடே போக்கி உகவாதாரோடு செவ்வையழியப் பரிமாறுமவனை. கண்ணமங்கையுள். ... ... ... ... ... ... ... (அ)

---

அரு —எட்டாம்பாட்டு. (வெஞ்சினக்களிறித்யாதி) இப்பாட்டில் ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தை யநுஸந்தித்தார்; அதுக்குறுப்பாக விரோதிநிரஸநத்தைப் பலபடியாக அநுஸந்திக்கக்கோலி அப்ரதிஹதத்வத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(நிருபாதிகசேஷியை) என்றது - விரோதிநிரஸநத்துக்கு உறுப்பான ப்ராப்தியைச் சொல்லுகிறது. (தன்பக்கலாசையுடையார்தலைமேலே) என்றது- விரோதிநிரஸநத்துக்காக் தன்னிடத்தில் ஆசைப்பட்டவருடைய ஆசையின்தலைமேலென்றபடி. இத்தால் ஆற்றாமையுடைய ஸமகாலமே வந்துநிற்கிறவனென்று விரோதிநிரஸநத்தில் விளம்பராஹித்யம் ஸூசிதமாயிற்று. ... ... ... ... ... ... ... ... (அ)

௯. — பண்ணினைப்பண்ணில் நின்றதோர் பான்மையை
பாலுள் நெய்யினை மாலுருவாய் நின்ற
விண்ணினைவிளங்கும் சுடர்ச்சோதியை
வேள்வியை விளக்கினொளிதன்னை
மண்ணினைமலையை யலைநீரினை மாலை
மாமதியை மறையோர்தங்கள்
கண்ணினைக் கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்ணினை | பாட்டுப்போலினியனாய் | பான்மையை | ஸ்வபாவம் போலே நிரதிசய போக்யபூதனாய், |
| பண்ணில் நின்றது | (அந்த) கானத்திலே ஸாரபூதமா யிருக்கிற அதிவிலக்ஷணமான | பாலுள் | பால்போலவும் அதிலுள்ளேயிருக்கிற |

| | |
|---|---|
| செய்யினை | செய்போலுமிருக்குமவனாய், |
| மால்உருவாய் நின்ற | அதிவிசாலமான ஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கிற |
| விண்ணினை | பரமபதத்துக்கு நிர்வாஹகனாய் |
| விளங்கும் சுடர் | மிகவுமுஜ்ஜ்வலமாய் |
| சோதியை | தேஜோமயமான விக்ரஹத்தை யுடையவனாய், |
| வேள்வியை | யாகங்களுக்கு நிர்வாஹகனாய் |
| விளக்கின் ஒளி தன்னை | தீபத்தின் தேஜஸ்ஸு போலே ஸ்வயம் ப்ரகாசனாய், |
| மண்ணினை | பூமிபோல் ஸர்வாதாரபூதனாய், |
| மலையை | மலைபோல்அவிசால்யனாய்; |
| அலை நீரினை | அலைமோதா நின்ற ஜலம்போலே இஷ்ட விநியோகார்ஹனாய், |
| மாலை | ஆஸ்ரிதவ்யாமுக்தனாய் |
| மாமதியை | பெரிய ஜ்ஞானத்தைக் கொடுக்குமவனும், |
| மறையோர் தங்கள் கண்ணினை | வேதாத்யயநசீலரான ப்ராஹ்மணர்க்கு நேத்ரம்போல் அர்த்தப்ரகாசகனாயிருக்குமவனை, |
| கண்கள் ஆரளவும் நின்று | கண்கள்(விடாய் தீர்ந்து) நிறையுமளவும் ஒரு படிப்பட்டிருந்து |
| கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். | (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பண்ணினை) (க) "[illegible] யஆத்யஸ் ஸ்வாதுநாம்" என்கிறபடியே, பண்போலினியனானவனை. (பண்ணில்நின்ற தோர்பான்மையை) இன்னாரினையாரென்றன்றியே, எல்லாரையுமொக்க வருத்தக்கடவதாயிருக்கிற அந்த பண்ணினிசைபோலே நிரதிசயபோக்யனானவனை. (பாலுள் நெய்யினை) ஸாராம்சத்தோடு ருஜீஷாம்சத்தோடு வாசியற இரண்டிலுமுண்டான உபாதேயாம்சமானவனை. (மாலுருவாய்நின்ற விண்ணினை) "த்ரிபாத்விபூதி" என்னலாம்படியான பரப்பையுடைய நித்யவிபூதியுக்தனானவனை. விளங்கும் சுடர்ச்சோதியை) அங்கே நிரவதிகதேஜோரூபமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய் நிற்கிறவனை. (வேள்வியை அத்தேசத்தை ப்ராபிக்கைக்கு ஸாதநமான கர்மங்களாய் நிற்கிறவனை. (விளக்கினொளிதன்னை) ஸ்வாயத்தமான தேஜஸ்ஸை யுடையவனை.

(மண்ணினை) செய்தார் செய்தகுற்றங்களையடைய மறக்குமவனாய் குற்றம் செய்வார்க்கு தன்னைப்பற்றி நிற்கும்படி இடம்கொடுக்கு

மவனை. (மலையை) இப்படிப்பட்ட தன்ஸ்வபாவத்தை ஒருவரால் சலிப்பிக்க அரிதாம்படியிருக்கிறவனை. (அலைநீரினை) நினைத்தவிடமெங்கும் ஏற்றிப்பாய்ச்சிக்கொள்ளலாம்படி யிருக்கிறவனை. (மாலை) ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாயிருக்கிறவனை. (மாமதியை) (க) "ददामि बुद्धियोगं तं" "ததாமி புத்தியோகம் தம்" என்கிறபடியே தன்னைப்ராப்திக்கைக்கீடான புத்தியோகத்தைக் கொடுக்குமவனை (மறையோர் தங்கள் கண்ணினை) வேதத்தை எங்குமொக்க அதிகரித்திருப்பார்க்கு, கண்ணைபொழிய பதார்த்ததர்ஶநம் பண்ணவொண்ணாதபடி அவர்களுக்கு "த்ருஷ்டிபூதனுயுள்ளவனை. (கண்களாரளவும் நின்று) காணப்பெறுமையால் உறுவினகண்களின் ஊறுவுதல தீரும்படி நின்று கண்டநுபவிக்கப் பெற்றேன். ... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (பண்ணினையித்யாதி) விரோதிநிரஸநத்துக்காக ஒப்பனையை நச்சுகிறதென்; அவ்வளவன்று, நிரதிசய போக்யனுயிருக்குமவனென்று கொண்டு ஸர்வப்ரகார வைலக்ஷண்யத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"ஓர்" என்றத்தால் பலித்த வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (இன்னரித்யாதி). (வருத்த) என்றது-ஈடுபடுத்த என்றபடி. "பண்ணினைப்பண்ணில் நின்றதோர் பான்மையை" என்று உபக்ரமிக்கையாலே "பாலிநெய்யினை" என்று பாலில் நெய்யினையென்று விவக்ஷிதமென்று திருவுள்ளம் பற்றி, "பண்ணினை" என்றும், "பாலி நெய்யினை" என்றுமிவற்றையுமருளிச்செய்வானென், ஸாராம்சமான பண்ணிலிசையையும் பாலில் நெய்யையுமருளிச்செய்தால் அமையாதோ என்னுமதிசங்கையைப் பரிஹரிக்கிறார் (ஸாராம்சத்தோடித்யாதி). உத்கர்ஷாபகர்ஷங்கள் பரஸ்பரமுண்டாகிலும், எல்லாவற்றிலு முண்டான போக்யதாமாத்ரம் சொல்லவேண்டுவதாகையாலே அங்ஙனருளிச் செய்தாரென்று கருத்து. பண்போலன்றிதே பாலும்நெய்யுமிருப்பது, அஸாராம்சமும் மிஶ்ரமாயிதேயிருப்பது, இவற்றோடே அபேதவ்யபதேசம் கூடுமோவென்ன வருளிச்செய்கிறாராகவுமாம்; இப்போது (வாசியற) என்றது. "வாசியற்றிருக்கிற" என்றும், விவேகிக்கவொண்ணாதபடி ஒன்றாயிருக்கிற யென்றபடி. (இரண்டிலும்) பால்நெய் இரண்டிலு மென்றபடி. "மால்" என்று பெருமையாய், பேருருவுடைத்தாய் நின்ற நித்யமான விண்ணினை யென்றர்த்தமருளிச் செய்கிறார் (த்ரிபாத்விபூதித்யாதி). "சுடர்ச்சோதி" என்றத்தால் விக்ரஹத்தினுடைய தேஜோரூபத்வம் சொன்னபடியாலே, விக்ரஹத்தில் ப்ரபை(ஒளி)யைச்சொல்லிற்றாக்கியருளிச் செய்கிறார் (ஸ்வாயத்தேத்யாதி).

(க) கீ-௧௦-௧௦.

"மா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ததாமி இத்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

அ. — கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால் கலிகன்றியுரைசெய்த
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார் மதியந்தவழ்
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ண! நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே. (க௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—∘∘—

| பதம். | உரை. |
|---|---|
| கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையில் |
| கண்டுகொண்டேனென்று | காணப்பெற்றேனென்று |
| கலிகன்றி | ஆழ்வார் |
| காதலால் | ப்ரீதியுடன் |
| உரைசெய்த | அருளிச் செய்ததாய், |
| வண்ணம் | காநத்தின் ஸ்வபாவமான இசையையுடைத்தாய், |
| ஒண்தமிழ் | அழகிய தமிழ்பாஷையிலேயுண்டான |
| ஒன்பதோடு ஒன்று | ஒன்பது பாசுரங்களோடுகூடிய ஒரு பாசுரமான [ளையும் |
| இவை | இப்பத்துப்பாசுரங்க |
| வல்லராய் | அப்யஸிக்க ஸமர்த்தராய்க்கொண்டு |
| உரைப்பார் | அநுஸந்திக்குமவர்கள் |
| மதி தவழ் | சந்த்ரன் ஸஞ்சரியாநின்ற |
| அம்விண்ணில் | அழகிய (போகப்ரசுரமான) ஸ்வர்க்கத்தில் போய் |
| விண்ணவராய் | தேவர்களாயிருந்து |
| மகிழ்வு எய்துவர் | ஸந்தோஷிப்பர்கள்; |
| மெய்ம்மை சொல்லில் | இதினுடைய உண்மையான ப(ஃ)லத்தைச்சொல்லப்புகில் |
| வெண்சங்கம் ஒன்று | வெண்மையாய் அத்விதீயமாயிருக்கிற ஸ்ரீ பாஞ்சஜந்யத் |
| ஏந்திய | தரியாநின்ற [தை |
| கண்ண | ஸர்வாதிகனே! |
| குறிப்பாகில் | திருவுள்ளமானால் |
| கவியின்பொருள் | இப்பாசுரங்களினர்த்தங்களை [கும்கூட |
| நின்றனக்கும் | ஸர்வஜ்ஞனை உனக் |
| கற்கலாம் | அப்யஸிக்கத் தகுந்ததாயிருக்கும். (க௦) |

வ்யா. — பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று) ஒருதேச விசேஷத்திலேபோய் காணும் வஸ்துவை ஸம்ஸாரத்திலே திருக்கண்ணமங்கையிலே காணப்பெற்றேனென்று. (காதலால் கலிகன்றியுரைசெய்த) அபிநிவேசத்தாலே ஆழ்வாரருளிச்

செய்த. (வண்ண வொண்டமிழொன்பதோடொன்றிவை) இசையை யுடைத்தாய் அழகிதாயிருக்கிற இவைபத்தையும். (வல்லராயுரைப்பார்) அநுஸந்திப்பார்க்கு அடைவுபடச் சொல்லுகையாலுண்டான அருமையாலே வல்லராய் என்கிறார்.

(மதியந்தவழ் விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்) உபரிதநலோகங்களில் போக (ங்க) பூமிகளெல்லாம் புக்கு அங்குண்டான போக(ங்க)ங்களை புஜிப்பர்கள். (மெய்மைசொல்லில்) அர்த்ததத்வமிருந்தபடி சொல்லில். (வெண்சங்கமித்யாதி) ஐஶ்வர்யஸூசகமான ஶ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலேயுடைய ஸர்வாதிகனே! உனக்கும் இதிலே ஆதரமுண்டாகில் எனக்கு சிஷ்யனாய் உனக்கும் அதிகரிக்க வேண்டும்படியாயிற்று இதினுள்ளீட்டின் கனமிருக்கிறபடி. (குறிப்பாகில்) திருவுள்ளமாகில். (கற்கலாம்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் இருமாந்திருந்தால் போகாது; என்னோடே அதிகரிக்கில் அறியலாம். ஒரு வஸிஷ்டனோடே ஸாந்தீபனியோடே தாழநின்று அதிகரிக்கக் கடவ அவனுக்குத் திருமங்கையாழ்வாரோடே அதிகரிக்கைத் தாழ்வோ?. (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையித்யாதி) "கண்டேன்" என்றுபத்த "கண்டுகொண்டேன்" என்று ஒருகால் சொன்னாப்போலே, ஒன்பதின்கால் சொன்னத்தால் கரைபுரண்ட காதலாய் தோற்றுகையாலே இப்படியாகைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (ஒருதேசவிசேஷேத்யாதி). (க) "ஸதா பஶ்யந்தி" என்னக்கடவ வஸ்துவை, இங்கேகண்டால் காதல்விளையக்குறையில்லை யென்றுகருத்து. (அநுஸந்திப்பார்க்கு) என்றவநந்தரம் "போக்யதாதிசயத்தாலே" என்றுகூட்டுவது.

நிரதிசயபோக்யபூதனான எம்பெருமானுடைய போக்யதாப்ரகர்ஷத்தை ப்ரதிபாதிக்கிற இத்திருமொழிக்கு க்ஷுத்ரமான ஸ்வர்க்காதி போகங்களை ப(ஃ)லமாகச் சொல்லக்கூடுமோ வென்னும் சங்கையிலே "மெய்மைசொல்லில்யாதி அருளிச்செய்கிறார்" என்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (அர்த்ததத்வமித்யாதி); அர்த்ததத்வம்) புருஷார்த்த தத்வம். லோகத்திலே தஸாரத்தை அறியச்சக்காரில்லாமையாலே, எம்பெருமானையே முன்னிட்டு இத்திருமொழியின் பொருளின் போக்ய(ங்க)தை உணர்க்கும்படியிருக்குமென்கிற வழியாலே எல்லார்க்கு மித்திருமொழியைக்கற்கை பரமபுருஷார்த்தமென்று ப(ஃ)லம் சொல்லிற்றாயிற்று என்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி ஏழாம்பத்தில் பத்தாந்திருமொழி முற்றிற்று.

---

(க) ஸாம-உ, ந்தர-க அ-உ-ச.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி எட்டாம்பத்து முதல் திருமொழி

## சிலையிலங்குப்ரவேசம்.

கீழ்த்திருமொழியிலே தன்னுடைய படிகளெல்லாம் காட்டிக் கொடுக்க, அநுபவித்து பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷிறந்து, அது கிடையாத படியாலே ஒரு பிராட்டி தசையை ப(ஃ)ஜித்து பிராட்டியுடைய அவஸ்த்தையைப் பார்த்து திருத்தாயார், தன் பெண் பிள்ளையுடைய பாசுரமிருக்கிறபடியாலும், தன்பக்கல் விரக்தியாலும், ஆசைப்பட்ட விஷயத்தில் ப்ரேமத்தாலும், பிரிந்த விஷயத்தின் வைலக்ஷண்யத்துக்கு அநுரூபமாக எதிர்த்தலையை அழிக்க வல்ல குணங்கள் எவ்வளவாகவுடைத்தாயிருக்கும்; அவற்றிலே கால்தாழ்ந்தமைதோற்ற அவனுடைய ஸௌந்தர்யாதிகளையும், சேஷ்டிதாதிகளையும், ஆண்பிள்ளைத்தனத்தையும் 'வாய்வெருவாநின்றாள். என்னுடைய ஹிதவசநமும் கேட்கிறிலள், தன் ஸ்த்ரீத்வமும் பார்க்கிறிலள், அவன் ஸ்வரூபமும் பார்க்கிறிலள், அதுதானும் பரத்வத்திலாதல் விபவத்திலாதலன்றிக்கே,அவ்விடங்களெல்லாவற்றிலும்சொல்லுகிற ஏற்றங்களெல்லாவற்றையு முடைத்தாயிருக்கிற திருக்கண்ணபுரத்திலேபுக்கு அங்கேஎழுந்தருளியிருக்கிற சவரிப்பெருமாளை ஸாக்ஷாத்கரித்து அந்நீர்மையிலே அகப்பட்டாள்போலேயிராநின்றதென்று வினவவந்தவர்களைக் குறித்துச்சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது.

அரு.—சிலையிலங்குப்ரவேசம்.—கீழ்த் திருமொழியிலே, திருக்கண்ணமங்கையில் எம்பெருமானுடைய போக்ய(ஃ)தையிலே ஈடுபட்டிருந்தவர் திருக்கண்ணபுரத்தானைப் பிரிந்த பிராட்டிபடியைத் திருத்தாயார்சொல்லுகிற படியாகப் பேசுகைக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் (கீழித்யாதி). (கொடுக்க) என்றவநந்தரம், "அப்போது சவரிப்பெருமாள் படியும் கண்டு" என்று கூட்டுவது. (பஜித்து) என்றவநந்தரம் "பிரிந்திருக்கிற" என்று கூட்டுவது. (ப்ரேமத்தாலும்) என்றவளவுக்கும் (தோற்ற) என்றத்தோடே ஸம்பந்தம்.

சில ஆசார்யர்கள் பக்கலிலேசென்று சிலஅர்த்தங்களைக்கேட்டு, சரீரபேதத்தளவன்றிக்கே, ஜீவர்களுக்கும் பரஸ்பரபேத (ഭേദ) முண்டென்று அறிந்தஏகதேசஜ்ஞாநமாத்ரத்திலே “ஸர்வேஶ்வரனுடைய ஜகத் வைசித்ரியிருந்தபடியென்” என்றுகொண்டு ஆஶ்சர்யப்பட்டு எல்லாமறிந்தாரைப்போலே பூர்ணனாய் ஶ்வேதகேதுவானவன்பிதாவினருகே வந்திருக்க, பிதாவும் இவனை வடிவில் வேறுபாடுகண்டு “ஜ்ஞாதவ்யாம்சம் இன்னும்அநேக முண்டாயிருக்க, எல்லாமறிந்தாரைப்போலேயிராநின்றான், அவற்றையும் இவனுக்கு அறிவிக்க வேணும்” என்று பார்த்து, (௧) [സ്തബ്ധോഽസി - ஸ்தப்தோஸி] பரிபூர்ணரைப்போலே எல்லாமறிந்தாயா யிராநின்றாய். [തമാദേശമപ്രാക്ഷ്യഃ പരിപൂർണ്ണ ഇവ ലക്ഷ്യസേ - தமாதேசமப்ராக்ஷ்யஃ பரிபூர்ண இவ லக்ஷ்யஸே] அந்த ஆதேசத்தைக் கேட்டாயோ? ஆதேஶஃ - ப்ரஶாஸநம். (௨) “പ്രശാസിതാരം സർവേഷാം - ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம்” என்று ஒன்றை அறியவே எல்லாவற்றையுமறிந்ததாய், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களையும் ப்ரஶாஸிதாவாய் நியமிக்கக்கடவ ஸர்வேஶ்வரனையும் அறிந்தாயோ நீ என்ன; [കോന്വാദേശഃ - கோந்வாதேஶஃ] ஆதேஶமாவதென்னென்ன; அவன் வேதத்தில் பூர்வபாக (ഭാഗ) த்திலே சிலவற்றையாதல், ந்யாயாதிகளிலே சிலவற்றையாதல் கேட்டவனாய், வேதாந்தஜ்ஞாநமின்றிக்கே ஸர்வேஶ்வரனொருவனைக்கொண்டு “குலாலாதிகளுக்கு தண்டசக்ராதிகள்மாத்ரம்நிமித்தமும், ஸஹகாரியுமாமளவேஈஶ்வரன்” என்கிறநையாயிகபக்ஷத்தினளவன்றிக்கே “உபாதாநமும் தானேயாய், (௩) ‘ബഹു സ്യാം - பஹு

பிள்ளையின்படி கண்டு இப்படி அநுபவித்தாருண்டோ வென்ன; வேதாந்தங்களிலேயுமுண்டென்கிறார் (சிலஆசார்யர்களித்யாதி). (இவன்) என்றது - அருணபௌத்ரனை ஶ்வேதகேதுவை. (பிதா) என்றது- உத்தாலகனை. (ப்ரஶாஸநம்)என்றது-ப்ரக்ருத்யர்த்தமாய், ஶ்ருதியில் “தம்ஆதேசம்” என்ற க(ഘ)ஞந்தமான சப்தம் ப்ரஶாஸநம்பண்ணுமவனைச்சொல்லுமென்று கருத்து. ப்ரமாண பூர்வகம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ப்ரஶாஸிதாரமித்யாதி). (வேதாந்தஜ்ஞாநமின்றிக்கே) என்றவநந்தரம், “இருக்க, இவனுக்குப் பிதாவானவன்” என்று சேஷம். (ஸர்வேஶ்வரனொருவனைக் கொண்டு) என்றது - ஶ்ரியஃபதியையுட்கொண்டு யென்றபடி. இதுக்கு (என்றான்)

(௧) சாந்தோ.௬-௧-௩. (௨) (௩) தை-ஆ-௬.

ஸ்யாம்' என்கிறகார்யமும்ப்ரஹ்மமேயாய், 'சித(ஃ) சித்துக்களிரண்டும் விசேஷணம்' என்றுகொண்டு வேதாந்திகள் போனவழியையும் அறியவேண்டுங்காண்'' என்றான். அங்குஅவனறியாதஅம்ஸம் அறிவிப்பிக்கைக்காக பிதாகேட்டான்; இங்கு தன் பெண்பிள்ளையுடைய படிகளாலும், பேச்சாலும் ''இவள் ஸர்வாதிகனை ஸர்வேஸ்வரனை மறுபாடுருவ அறிந்தாள்'' என்று அத்தைத்தானறிந்தமை தோற்றச் சொல்லுகிறாள். ராஜேந்த்ர சோழனிலே ஒருப்ராஹ்மணன்மகன், புத்த (ஃ) ரோடே ஸம்ப்ரதாயமுண்டாய், பூணநூலையும் குடுமியையும் அறுத்துப்போகட்டான்; கூரத்தாழ்வான் அங்கே நடந்தவளவிலே, ஶிகா(ஃ)யஜ்ஞோப வீதங்களைத் தரித்துக்கொண்டுவந்து புகுந்தான்; பிதாவானவன் ''கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?'' என்றுகேட்டான்; புறம்புள்ளார், ''நீ இதறிந்தபடி எங்ஙனே'' என்றுகேட்க, ''ஆழ்வான் ஸந்நிதியில் தமோபி பூதரும் ஸத்வஸ்த்த(ஃ)ராவர்கள்காண்'' என்கின்றான் .... .... .... .... *

(ப).— சிலையிலங்குபொன்னாழி திண்படைத்
தண்டொண்சங்கமென்கின்றாளால்
மலையிலங்கு தோள்நான்கே மற்ற
வனுக்கெற்றேகாணென்கின்றாளால்
முலையிலங்கு பூம்பயலை முன்போட
அன்போடியிருக்கின்றாளால்
கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரத்
தம்மானைக் கண்டாள்கொலோ. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிலை | (என்பெண்ணானவள்) திருச்சார்ங்கம்(என் | திண் | பலிஷ்ட்டமான |
| | | படை | திருவாள் (என்றும்) |
| இலங்கு | ப்ரகாசியாநின்ற [றும்) | தண்டு | க(ஃ)தை (என்றும்) |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான | ஒண் | அழகியதான |
| ஆழி | திருவாழி (என்றும்) | சங்கம் | ஶ்ரீபாஞ்சஜந்யம் |

வன்றத்தோடே அன்வயம். உத்தாலகன் ஶ்வேதகேதுவுக்கு அறிவிக்க வன்றோ ஜ்ஞாநத்தை அநுபவித்தது; இங்கு திருத்தாயார் அறிவிக்கவிறே அநுபவித்தது; இதுத்ருஷ்டாந்தமாகக் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அந்யாதி). அநுமித்த மாத்ரதிலே த்ருஷ்டாந்தமாகலாமென்று கருத்து. நேரான த்ருஷ்டாந்தந்தன்னை ஐதிஹ்யமுகேந வருளிச்செய்கிறார் (ராஜேந்த்ர சோழனித்யாதி). ... ... ... ... ... ... (*)

| | | | |
|---|---|---|---|
| என்கின்றான் | என்றும் சொல்லாநின்றான்; | முன்பு | முன்னே |
| ஆல் | கஷ்டம்; | ஓட | செல்ல (அதன்பின்னே) |
| அவனுக்கு | அந்த எம்பெருமானுக்கு | அன்பு | அபி(ஃ)நிவேசம் |
| மற்று | மேலும் (ஆபரணமாய்) | ஓடி | செல்லும்படி |
| மலை | மலைபோல் | இருக்கின்றான் | இருக்கின்றான்; |
| இலங்கு | (அபே(த்)த்யமாய்) விளங்காநின்ற | கலை | சாஸ்த்ரங்கள் |
| நான்குதோளே | நாலுதிருத்தோள்களுமுண்டு | இலங்கு | விளங்காநின்ற |
| என்கின்றாளால்; | | மொழியாளர் | வார்த்தையையுடையவர்கள்(வர்த்திக்கிற) |
| எற்றே | இதோர் ஆச்சர்யமிருந்தபடி, | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற [ராஜனை |
| காண் | (இதை) பாரீர்; | அம்மானை | ஸ்வாமியான சவரி |
| முலை | முலையிலே | கண்டாள்கொலோ | கண்ணாரக்கண்டு ஸேவித்தாளோ? |
| இலங்கு | விளங்காநின்ற | | |
| பூ | அழகியதான | | |
| பயலை | (பிரிவினாலுண்டான) வைவர்ண்யமானது | இதில் "ஆல்" | என்பது - விஷாதத்யோதகம். |

அவ.—முதற்பாட்டு. தன்பெண்பிள்ளை சொல்லக்கேட்ட இது தனக்கு ரஸித்தபடியாலே அப்பாசுரத்தைத் தன் வாயாலேயும் ஒருகால் பேசி அநுபவிக்கப்பார்க்கிறாள்.

வ்யா.— (சிலையிலங்கித்யாதி) திவ்யாயுதங்களைத் தரித்தால் அவை ப்ரதிபக்ஷ நிரஸநத்துக்கு உறுப்பாயிருக்கு மதுவேயன்றிக்கே, ஆபரணங்களுக்கும் அழகுக்கும் முதல் விரலாயாயிற்

அந.—முதற்பாட்டு, (சிலையித்யாதி) "என்கின்றாள்" என்கிற வர்த்தமாநத்தாலே, பெண்பிள்ளை சொலவையும், வினவவந்தவர்கள் கேட்க ப்ரஸக்தியுண்டாயிருக்க திருத்தாயார் அநுவதிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (தன்பெண்பிள்ளையித்யாதி).

விரஹதசையில் வாய்வெருவும்போது ஸௌந்தர்யமன்றோ சொல்லவேண்டுவது, திவ்யாயுதங்களைச் சொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (திவ்யாயுதங்களையித்யாதி). (முதல் விரல்) முதலெண்ணலாயிருக்கை. ஆயுதத்வாகாரம் - புரஸ்ஃபூர்த்திகரமாயிருக்க, ஆபரணத்வாகாரம் இவளுக்

திருப்பது. திவ்யாயுதங்களை "இவை-ஆபரணங்கள்" என்றறியுந்தனை யும் உள்புக்காளாகையாலே "இவை ஆயுதம்" என்றிருக்கு மள வன்றிக்கே பூஷணமென்றிராநின்றாள். ஆயுதமென்றிருப்பார்-எதிரி கள்; இங்ஙனேயிருக்கவிறே ப்ரணயிநியாமவள் இத்தைச் சொல்லி வாய் வெருவுகிறது. முன்பு இவனை அநுபவித்தவர்கள் காணவேணு மென்று ஆசைப்படும்போது (க)"கூராராழி வெண்சங்கேந்திக் கொடி யேன்பால்வாராய்" என்றிறே ஆசைப்படுவது.

திவ்யாயுதங்களானவை, காந்தனுடைய இடைச்சரி, கடைச் சரி, அறுகாழிபோலே ஆபரணகோடியிலேயுமாயிராநின்றது. (உ) "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடையவடிகளை யின்னாரென்றறி யேன்" என்று வெடிவிளக்கெரித்துக்கொண்டிருந்து அநுபவித்து, காந்தன்போன வநந்தரம் "இன்னாரென்றறியேன்" என்கிறாளிறே. வ்ருத்த கீர்த்தநம் பண்ணுகிறபோது சொல்லுகிறவார்த்தையிறே. "ஆழியொடும் பொன்னார் சார்ங்கம்" என்று அடையாளம் சொல்லச் செய்தேயிறே, "இன்னாரென்றறியேன்" என்று கலங்குகிறது. பிரிந் திருந்து தூதுவிடுகிற விடத்திலும், (௩) "செருவொண் சக்கரம் சங்கு" என்றிறே அடையாளம் சொல்லிவிட்டது. "இன்னாரென்றறி

குந் தோற்றுகைக்கு நியாமகமேதென்ன வருளிச்செய்கிறார் (திவ்யாயுதேத் யாதிவாக்யத்ரயத்தாலே). இவளைப்போலே ஆபரணகோடியாக்கி ஆசைப் பட்டாருண்டோ வென்னவருளிச் செய்கிறார் (முன்பித்யாதி).

எத்தனை சொன்னாலும் கோடித்வய ஸாதாரணமானவற்றைச் சொல்லு வானென்; இடைச்சரி முதலானவை இல்லையோ வென்னவருளிச் செய்கிறார் (திவ்யேத்யாதி). "இடைச்சரிபோலே" என்கைக்கு ப்ரணயிநிகளாய் ஈடு பட்டதுண்டோவென்ன( ஆழியொடுமித்யாதி). ஆசையால் இடைச்சரியைப் போலே ப்ரணயிநிகளையும் ஈடுபடுத்தும்படியான ஆபரணத்வம் இவற்றுக்குண் டென்று கருத்து. திவ்யாயுதச் சேர்த்தியிலே ஈடுபட்டாளென்கைக்கு நியா மகமென்னென்ன வருளிச்செய்கிறார்) வ்ருத்தேத்யாதிவாக்யத்வயத்தாலே). திவ்யாயுதச்சேர்த்தியிலே ஈடுபட்டிருக்கைக்குநியாமகாந்தரமருளிச் செய்கிறார் (பிரிந்தித்யாதி). தூதுவிடும்போதும்இவற்றையே அடையாளமாகச்சொல்லுவா னென்னென்னவருளிச்செய்கிறார்(இன்னாரித்யாதி).வ்ருத்தகீர்த்தநதசையில் ஈடுபட்டவளாகையாலே அத்தையே அடையாளமாகச்சொல்லித் தூதுவிட்

(க) தி-வாய்-௯-௧-௧. (உ) தி-மொ-௧௦-௧௦-௧௦. (௩) தி-வாய்-௬-௧-௭.

யேன்'' என்று ஈடுபடுவதுதான் அழகிலேயிறே, அதுக்கு மூனபு திவ்யாயுதங்களாயிருக்குமே. ஸர்வேஸ்வரன்றனக்கு மங்களாசாஸநம் பண்ணப் புகுந்தவர்களும் (க) "சுடராழியும் பல்லாண்டு" "அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டு" என்று திவ்யாயுதங்களுக்கு மங்களாசாஸநம் பண்ணவேண்டியிறேயிருப்பது.

(சிலை) (உ) [शक्रचापनिभे चापे प्रगृह्य शत्रुनाशने-ஶக்ரசாபநிபே சாபே க்ருஹ்த்வா சத்ருநாசநே] என்று எங்களைத் தோற்பிக்கைக்கும் பரிகரமாயிருந்தது; இக்ரதநுஸ்ஸு போலே எங்களுக்கு தர்ஶநீயமுமாய், எங்களுக்கு ஶத்ருவான வாலியை நிரஸிக்கைக்குப் பரிகரமுமாயிருந்தது. அநுகூலர்க்கு வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படியாய், ப்ரதிகூலர் பிடித்த பிடியிலே மண்ணுண்ணும்படி யாயிருக்கும். அதன்றிக்கே, [சாபே] வில்வலிக்கும்படியை நினைத்தால் (ங) "स्मरन् राघवबाणानां विव्यथे - ஸ்மரந்ராகவபாணாநாம் விவ்யதே" என்னும்படியா யிருக்கும். அழகுக்கு உறுப்பாயிருக்கும் அநுகூலர்க்கு. [ஸ்மரந் ராகவபாணாநாம்] பெருமாள் திருநாமத்தாலெழுத்துவெட்டின அக்ஷரங்களையும், திரு

டானென்று கருத்து. ஆனல்இவளுக்கு ஒருகாலும் ஆயுதத்வாகாரம் நெஞ்சில் படாதோ வென்ன (அதுக்கித்யாதி). (அதுக்கு) - ஸம்ஶ்லேஷத்துக்கு. அதிசங்கைதீர்க்கைக்காக ஆயுதச் சேர்த்தியைக் காட்டச்செய்தேயும் அதுக்கும் பரியவேண்டும்படி அழகாயிருக்கையாலே, நாயகி ஈடுபடச்சொல்லவேணுமோ என்னும் பா (ஶ) வத்தாலே அருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனுக்கித்யாதி).

இதெல்லாம் ஆக்ஷேபஸமாதாநரூபேண ஸமுதாய தாத்பர்ய மருளிச்செய்து ப்ரதிபதம் தாத்பர்யமருளிச்செய்யக் கோலி ஆழி முதலானவையிருக்க, முந்துற "சிலை" என்று ஒரு விசேஷணமிடாமல் சொல்லுமதுக்கு நிரதிசயஸௌந்தர்யத்தில் ஈடுபாடென்று விவக்ஷித்து, இப்படி ஈடுபடுத்தின விடமுண்டோ வென்ன வருளிச் செய்கிறார் (சக்ரசாபேத்யாதி). எடுத்த ப்ரமாணத்துக்குத் தாத்பர்யமருளிச் செய்து வாக்யார்த்தமருளிச் செய்கிறார் (இந்த்ரேத்யாதி). கேவலம் வில்லும் கையுமாயிருக்கையே அழகாயிருக்கும்படியாக ஒரு தாத்பர்யமருளிச் செய்து, வில்லேபிட்டுப் பிடித்தபிடியாகத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (அநுகூலர்க்கித்யாதி). ஸ்மரணமாத்ரத்தாலே வ்யதை(ஶ) வரக்கூடுமோ, கண்டாலன்றோ வ்யதை வருவது என்ன; ப்ரத்

(க) தி-பல்லா-க. (உ) ரா. (ங) ரா-யு-சுo-ங.

சாரங்களினுடைய ஸந்நிவேசத்தையும் ஸ்மரியா நின்றுகொண்டு. [வ்யதே] அவரொருகால் முன்னே நின்றுபோகச் செய்தேயும் எப்போது மொக்கமுன்னே நிற்கக் கண்டாப்போலே வ்யதி(த)த்தான். [ராக்ஷஸேஸ்வர:- வ்யதே] இவன் ஆண்டபரிகரமடங்கலும் விளைக்கு உடலாயிற்றதில்லை; எடுத்தெடுத்துக் குலைக்கிறபோது சுளைப்பிடாமிட்டு அழுக்குகைக்கு உடலாயித்தனை. (சிலை) ஒன்றையிட்டு விசேஷிக்க வேண்டாதே தன்னையே சொல்ல அமைந்திருக்கிற ஸ்ரீசார்ங்கம்.

(இலங்குபொன்னாழி)மேகத்திலேமின்னினாப்போலே ஸ்யாமளமான திருமேனிக்குப் பரபாக (ஈ॰X)மாய்க்கொண்டு எல்லா ஆயுதங்களுக்கும் தலையாயிருக்கிற புகர்தோற்றும்படியாய் ஸ்ப்ருஹணீயமாயிருக்கிற திருவாழி. (திண்படை) எதிரிகள் மேலிட்டாலும் பிற்காலிக்கவேண்டாதபடி திண்மையையுடைத்தான திருவாள்; அன்றிக்கே எதிரிகள் மேலே அழுந்தப்படச் செய்தேயும் தனக்கொரு விகாரமின்றிக்கே யிருக்கிறவாள். (படை) என்று ஆயுதஸாமாந்யத்தைச்சொல்லக்கடவது; வாளையும் சொல்லக்கடவது. (தண்டு) அத்தோடொருகோவையானகதை. இப்படி ஒருவிசேஷணமிட்டுச் சொல்லவேண்டாதகதை(X ஜ)யென்னுதல்; இதுக்குச்சொன்னவிசேஷணம் தன்னையே சொல்லிற்றும்படி யிருக்கிற தண்டென்னுதல்.

(ஒண்சங்கம்) (க) "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ"

---

யக்ஷஸ்யாகாரமான ஸ்மரணம் அது என்றருளிச்செய்கிறார் (அவரொருகாலித்யாதி)- (சுளைப்பிடாம்) கம்பளி.

"அத்தோடு" என்றதுக்கு விவரணம் (இதக்கித்யாதி). இவ்விரண்டுக்கும் திண்மை சொன்னது-திண்மையால் தோற்றின ஆகாரஸௌஷ்டவத்திலே தாத்பர்யமென்று திருவுள்ளம். இங்ஙனன்றாகில் ஆபரணத்வஸமாதிக்குச் சேராதிறே.

சங்குக்கு ஒண்மை - பகவத்ப்ரத்யாஸத்தி விசேஷமென்று விவக்ஷித்து நாலுவகையாக அவற்றை யருளிச்செய்கிறார் (கருப்பூரமென்று துடங்கி, நிற்கவமையுமிறே) என்னுமளவும். அதாவது ரஸஜ்ஞதையும், ஸாகஜீவநமும், ஐஸ்வர்யச்செருக்கும், அந்தரங்கதையும். அதில் ரஸஜ்ஞதையைக் காட்டுகிறார் (கருப்பூரமித்யாதி வாக்யத்வயத்தாலே). (படியிறே) என்றவநந்தரம் "ரஸ

---

(க) நா-தி-எ-க.

என்று தேசிகராயிருந்துவைத்து, ரஸவிசேஷங்கள் இவர்களுக்கும் தன்னைக் கேட்டறிய வேண்டும்படியாயிருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யம். ப்ரணயிநிகளிறே வாக(X)ம்ருதத்துக்குதேசிகராயிருப்பார், அவர்களும் தன்னைக்கேட்டறியவேண்டும்படியிறே. (க) [உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம் கண்படை கொள்ளில் கடல் வண்ணன்கைத்தலத்தே] ஸ்த்ரீஜாதியாக ஸ்பர்த்தை (ஃ)பண்ணும்படியாக பக(ஃX)வதநுபவத்தில் வாஸநை பண்ணிப்போரும் ஸ்ரீபாஞ்சஜந்யம். (உ) [மாதவன்றன்வாயமுதம் பொதுவாக வுண்பதனைப் புக்கு நீயுண்டக்கால் சிதையாரோவுன்னோடு] பகவத்ப்ரத்யாஸந்நையான அவள் அங்கீகாரங்கொண்டு ஜீவிக்கவிருக்கிறஸர்வஸாதாரணமான ஜீவநத்தை நீ ஒருவனுமே ஜீவித்தால், அவர்கள் உன்னோடு சீறு பாறென்னரோ? [செல்வப்பெரும் சங்கே] உன்னுடைய ஐஶ்வர்யச் செருக்கிறே - இங்ஙன் முன்னடி தோற்ற வேண்டாதொழிகிறது. அல்லாத ஆயுதத்துக்கு விரோதிகளிருந்த விடத்தே சென்று நிரஸிக்கவேணும்; இவனுக்குள்ளே அணுகநிற்கவமையுமிறே. (ங) "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும்" என்று உகப்பாரும் இச்சேர்த்தியைக் காணவேணுமென்றிறே ஆசைப்படுவது.

(என்கின்றாளால்) அப்பாசுரத்தைத் தானொருகால் அநுஸந்திக்கையாகிறது - அதுக்கு அவத்யத்தை விளைவிக்கையிறே என்றாளாயிற்று; தான்சொன்னது அவள் சொன்னதுபோலிராமையாலே.

---

ஜ்ஞதை" என்றுசேஷம். ஸாகஜீவநந்தன்னை யருளிச் செய்கிறார் (உண்பதித்யாதி). ஐஶ்வர்யச் செருக்கைக்காட்டுகிறார் (மாதவனித்யாதி). அந்தரங்கதையை உபபாதிக்கிறார் (அல்லாதவித்யாதி). இந்த ஒண்மை அநுகூலர்க்கு ஆசைப்படும்படி யிருக்குமென்னுமத்தை ஸப்ரமாணமாக வருளிச்செய்கிறார் (பூங்கொளித்யாதி).

"ஒண்சங்கு" என்று வாய்வெருவினளென்னலாயிருக்க "என்கின்றாள்" என்று - பெண்பிள்ளை சொன்னளென்று சொல்லுகைக்கு உட்கருத்தருளிச் செய்கிறார் (அப்பாசுரத்தையித்யாதி). தான் சொன்னது அவத்யமாவானென்னென்ன வருளிச்செய்கிறார்(தானித்யாதி). அவளுடைய பா(ஃ)வபந்தம்தனக்கில்லையென்று கருத்து. "என்றாள்" என்னாதே "என்கின்றாள்" என்றவர்த்த

---

(க) நா-தி-எ-அ. (உ) நா-தி-எ-க. (ங) நா-தி-கூ-க.

ஒருகால் கண்டுவிட்டால் பின்னை ப்ராதிகூல்யத்தினெல்லையிலே நின்றாரோடு, ஆநுகூல்யத்தினெல்லையிலே நின்றாரோடு வாசியறத் துடிக்கும்படியாயிற்றிருப்பது. (என்கின்றாளால்) தலைமகளுக்கு திவ்யாயுதங்கள் ஆகர்ஷகமாயிருக்கிறாப்போலேயாயிற்று இவனுக்கு மிருக்கிறபடி. இவள் சொல்லுகிறதுதன்னையே தானும் சொல்லச்செய்தே, இவள் சொல்லக் கேட்டாப்போலிருக்கிறதில்லை யாயிற்றுத் திருத்தாயார்க்கு. "(க) [நாந்ருக்வேதவிநீதஸ்ய- நாந்ருக்வேத விநீதஸ்ய] அநுஷ்ட்டேயார்த்தப்ரகாசகமான ருக்வேதம் சிக்ஷிதனானவனுக்கல்லது இப்படி வார்த்தைசொல்ல வொண்ணாது. [நாயஜுர்வேததாரிணঃ- நாயஜுர்வேததாரிணঃ] யஜுர்வேதம் பாட(஠)தாரணம்தானேஅரிது; அத்தைத்தரித்தவனுக்கல்லது இவ்வார்த்தைசொல்லவொண்ணாது. [நாஸாமவேதவிதுஷঃ-நாஸாமவேத விதுஷঃ] ஸாமவேதம் கா(கா)னவிசேஷங்களறிய அரிது, அதறிந்தவனுக்கல்லது இப்படிவார்த்தை சொல்லமுடியாது. [சக்யமேவம் ப்ரபாஷிதும் -சக்யமேவம் ப்ரபாஷிதும்] இத்தை எல்லாவற்றையும் அதிகரித்தவனுக்கல்லது நம்முன்னே இப்படி வார்த்தைசொல்லலாமோ" என்றாரிறே பெருமாள். (என்கின்றாளால்) அடிதோறும் உளுக்கினமை தோற்றியிருக்கிறது. ஆருக்கு நிலமானதிலே இவள் வார்த்தை சொல்லுகிறது. (சிலையித்யாதி)(என்கின்றாளால்)பைசல்கைசு, நோய்முக்கைசு என்னுமாபோலே இவளை பாதி(ஷ)க்கைக்கு இதெல்லாம் வேணுமோ?.

இவையேயோ இவனுக்காபரணம், மற்றுமுண்டோவென்ன; (சிலையிலங்குதோள்நான்கே மற்றவனுக்கு) மற்றுஅவனுக்காபரணம்

---

மான தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஒருகாலித்யாதி). "ஆல்" என்றதுக்கு பாவகருத்தருளிச் செய்கிறார் (தலைமகளுக்கித்யாதி). இப்படி சொல்லி சுடு பட்டாருண்டோவென்ன வருளிச்செய்கிறார் (நாந்ருக்வேதேத்யாதி). மேலே "என்கின்றாள்" என்றதே அமையாதோ, இங்கும் "என்கின்றாள்" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அடிதோறுமித்யாதி). உளுக்கினபடி தன்னை விவரிக்கிறார் (ஆருக்கித்யாதி). நித்யஸூரிகளுக்கு விஷயமானவற்றை இவள் சொல்லுவதே என்றீடுபாடு. "ஆல்" என்றது - விஷாதத்திலேயாக்கி வெறுப்பாகத் தார்த்பர்யாந்தரம் (பைசலித்யாதி). (பைசல்) நாட்டி. (கைசு) சிறுங்கை. (முக்கைசு) மூன்றுசிறுங்கை.

---

(க) ரா-கி-௩-உஅ.

ஆபரணத்துக்கு ஆபரணமாயிருப்பன தோள் நாலுமென்று நின்றாள்; திவ்யாயுதங்களை அநுஸந்தித்தஇது, அவ்வாயுதங்களின் வழியே அவற்றைத் தரித்திருக்கும் திருத்தோள்களளவும் கொண்டு போய் மூட்டிற்று. புறம்போரிடத்திலும் போகவேண்டாதபடியிறே விஷயந்தானிருப்பது. (க) [ஸர்வபூஷணபூஷார்ஹா:- ஸர்வபூஷணபூஷார்ஹா:] என்று ஆபரணங்களுக்கும் ஆபரணமாகைக்கு அர்ஹமாயிறே தோள்தானிருப்பது. ஆயுதங்களை ஆபரணமாகச் சொல்விற்றிறே. ஆயுதங்கள் அபாஸ்ரயமுமாய், ஆகர்ஷகமு மாயிருக்குமா போலே தோள்களும் அபாஸ்ரயங்களுமாய் ஆகர்ஷகமுமாயிருக்கிறபடி. (மலையிலங்கு) மலைபோலே விளங்காநிற்பதாய் கல்பகதருபணைத்தாப்போலேயிருப்பன நாலு திருத்தோள்களென்றுநின்றாள். மலைபோலே எதிரிகளால் பேதி (பேத) க்கவொண்ணாதபடியிருக்கை. (மற்றவனுக்கு) ஆயுதங்களே போந்திருக்கச்செய்தே அழகுக்கு வேண்டுவது, அதுக்குமேலே நாலுதிருத்தோளையுமுடையனென்று நின்றாள். "மற்று" என்பது துல்யவிகல்பங்களையிறே.

கீழ் திவ்யாபரணங்களைச் சொல்லி, இங்கே "மற்று" என்கையாலே தோள்களும் ஆபரணமாயிருக்கவேணுமிறே. திவ்யாத்மகுணங்களிலும் திவ்யாத்மஸ்வரூபத்திலுங்காட்டில் அநுபா(ப)வ்யமா

மற்றும் ஆபரணங்களைச் சொல்லவேண்டிறல் ஹாராதிகளைச் சொல்லாமை தோள்களைச் சொல்லுவானென்னென்ன வருளிச் செய்கிறார் (திவ்யேத்யாதி). அவை மூட்டிற்றென்பானென், தானே போய் அநுஸந்திக்கிறாளென்ன வொண்ணாதோ வென்ன (புறம்பித்யாதி). ஆபரணங்களுக்கும் ஆபரணங்களானபடி யெங்ஙனே யென்ன (ஸர்வேத்யாதி). எடுத்த ப்ரமாணத்தில் பூஷணபதம் ஆயுதங்களுக்கு வாசகமன்றே யென்ன; கீழே ஆபரணத்வம் சொல்லப்பட்டதிறே யென்கிறார் (ஆயுதங்களையித்யாதி). ஆயுதகோடிகடித்வமும் ஆபரண கோடிகடிதத்வமும் இரண்டும் அவற்றுக்குண்டானவோபாதி, திருத்தோள்களுக்கும் இரண்டாகாரமுண்டோ ஆபரண கோடியாக ஓதுக்குகைக்கென்ன (ஆயுதங்களித்யாதி). அபாஸ்ரயமுமாய், விரோதிநிரஸநமுகத்தாலேபுகலாயிருக்கை, சப்தார்த்தம் (மலைபோலேயித்யாதி). "அவனுக்கு" என்று விசேஷித்ததுக்குத்தாத்பர்யம் (ஆயுதங்களேயித்யாதி).

"நான்கே" என்ற அவதாரணத்துக்குத் தாத்பர்யம்(திவ்யாத்ம குணங்

(க) ரா-கிஷ்கி-ஙு-கச.

யிருப்பது திவ்யவிக்ரஹமிறே. ஶுபாஶ்ரய ப்ரகரணங்களில் த்யேய மாகச் சொல்லுகிறதும் அதுதன்னையிறே. திவ்யவிக்ரஹத்துக்கும், திவ்யாத்ம குணங்களுக்குமுள்ளே ஒன்றை உபாஸ்யமென்று சொல் லிற்று. இத்தைவிட்டு அவ்வருகேபோகச் சொல்லுகிறதன்று; அவ் வருகேயும் அநுபாவ்யமுண்டென்கைக்காகச் சொன்னதத்தனை. அங்ஙனன்றாகில் (க) "ஸதா பஶ்யந்தி - ஸதாபஶ்யந்தி" என்னக்கூடா திறே. தந்தாமுடைய தபஸ்ஸாலே க்ஷீணபாபரான ருஷிகளைப் போலன்றிக்கே, பகவத்ப்ரஸாதமடியாக ஜ்ஞாநம் பிறந்த ஆழ்வார் கள் திவ்யவிக்ரஹமல்லதறியார்களிறே. நிலாத்துக்குறிபகவர், பட்ட ரை ஸ்ரீவைகுண்டத்திலே சதுர்ப்புஜனாயிருக்கைக்கு ப்ரமாண மென்னென்றுகேட்க; அவர்சொல்லி வாய்மாறுவதற்குமுன்பே (உ) "தமஸ: பரமோ தாதா ஶங்கசக்ரகதாதர:- தமஸ: பரமோதாதா சங்க சக்ர கதாதர:" என்னுநின்றதேயென்ன; போக்கடி காணாமையாலே கோபத்தாலே கண்சிவக்க, ப்ரமாணகதிகள் இவையாயிருந்தது, பொறுக்குமத்தனையிறே என்றருளிச்செய்தார்.

(எற்றே) என்கிறது- "மலையிலங்கு தோள்நான்கே" என்று, "இருந்தபடியென்" என்று தலைமகள்தான் ஆஶ்சர்யப் படுகிறாளாகவு மாம்; அதிமாத்ர ப்ராவண்யமாகாதென்று மீட்கப் பார்த்தவிடத்தி லும் மீட்கவொண்ணாதபடி "இவ்விஷயத்திலே அவகாஹித்தபடி யென்" என்று திருத்தாயார் ஆஶ்சர்யப்படுகிறாளாகவுமாம். என்னே காண் என்கிறாள் - இதோர் ஆஶ்சர்யமிருந்தபடியென்; நீங்களுமித் தைப் பாரிகொளென்று நின்றாள். (காணென்கின்றாளால்) நான் அதிமாத்ர ப்ராவண்யமாகாதென்ன, மூத்தார்க்குமூத்து, என்னு டைய ஹிதத்துக்காக இப்பேற்றை இழக்கிறதென்னென்று விலக்க

---

களிலுமித்யாதி-என்றருளிச்செய்தாரித்யந்தம்).

"எற்றேகாண்" என்றதுக்கு இரண்டர்த்தமருளிச் செய்கிறார் (எற்றே யென்கிறதித்யாதி). திருத்தாயார் ஆஶ்சர்யப்படுகிறபோது "என்கின்றாள்" என்றதுக்குப்பின்பு "எற்றேகாண்" என்றது அநுஸந்திப்பது. சப்தார்த்தம் (என்னேகாணித்யாதி). "காண்" என்றது- உபதேசபரமாகத் தாத்பர்யம் (நீங்களுமித்யாதி). "காண்" என்றது ஜாத்யபிப்ராயமாக வருளிச்செய்து, தாயின் விஷயமான உபதேசமாகக்கருத்து (காணித்யாதி). இங்கே "ஆல்"

---

(க) ஸாம-உத்தர-கஅ-உச. (உ) ரா-யு-ககச-கடு.

ப்பார்க்கிற என்னையும் தன்படியாக்கப் பாராநின்றாள். நான் தன்னை என்படியாக்கநினைக்க, தான் என்னைத் தன்படியாக்கப் பாராநின்றாள். இவ்விஷயத்தில் ப்ராவண்யந்தான், திருத்தாயார்க்கு அபிமதமாயிருக்கச்செய்தே அதிமாத்ரப்ராவண்யமாகாதென்று நிஷேதிக்கிறாளித்தனையிறே. (என்கின்றாளால்) இத்திவ்யாயுதங்களைச் சொன்னபோதுபோலன்றாய்த்துத் திருத்தோள்களைச் சொன்னபோதிருக்கிறபடி. இவளுக்கு திவ்யாயுதங்கள் அழகுக்கு உடலாமளவேயிறே. அணைக்கைக்குப் பரிகரமிறே தோள்கள். (என்கின்றாளால்) நாமும் எல்லாமிவற்றைச் சொல்லுகிறோமிறே, இவள் சொல்லுகிறபோதிருக்கிறபடி பாரிகோள். நாமும்எல்லாம் சொல்லிக் குமியழியாதே இராநின்றோம்; திருத்தாயாரை, இவள் "காண்" என்னப்பெறுமோ என்ன; பெறும்; (க)"குடத்தில் விளக்கே போல்கொம்பனார்காமம்புறப்படா, புறப்படில் ஆபுகுமாலையணிமலைமேல்பிடியேபோல நாடறியக்கவ்வைதரும்" இவள்அறிவுக்கு முன்பு மறைக்குமத்தனைபோக்கி, அறிந்தபின்பு மறைக்கைக் களவாமிறே.

(முலையிலங்கித்யாதி) இதர விஷயத்தில் ஸ்நேஹிக்கும் க்ரமமில்லையாகாதே பக(ஜ)வத்விஷயத்தில் தான்காட்டக்காணுமவர்களுக்கும், கதிர்பெருக்கி ஆர்ஜித்து கர்மத்தாலே க்ஷீணபாபராய் ஸ்நே

---

என்றதுக்கு பா(வ)வம்(நான் தன்னையித்யாதி).இத்தால் ஆஶ்சர்யத்தில் தாத்பர்யம் சொல்லிற்றாயிற்று. ஹர்ஷத்தில்தானே "ஆல்" என்கிறாளென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (இவ்விஷயத்திலித்யாதி). சிலையிலங்கித்யாதியில் ஓரடைவுபடச் சொன்னவள் இங்கே அவனுக்கு "மற்று மலையிலங்கு தோள் நான்கே" என்னுமல் அடைவுகெடக் குளிர்ச்சொன்னபடியைத்திருவுள்ளம்பற்றி யருளிச் செய்கிறார் (இத்திவ்யாயுதங்களை யித்யாதி). இப்படி அடைவுகெடச் சொல்லுகைக்கு மூலமென்னென்ன (இவளுக்கித்யாதி). "காண்" என்றது - திருத்தாயார் உபதேசிக்கிறதாகக்கருதி, "என்கின்றாள்" என்றதுக்குத் தாத்பர்யம் (நாமுமெல்லாமித்யாதி). "காண்" என்று திருத்தாயார்க்குப் பெண்பிள்ளை சொல்லுகை - காம்பீர்யஹாநியன்றோவென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் (திருத்தாயாரையித்யாதி).

அன்பின்கார்யமான வைவர்ண்யம் முன்பாகவும், அன்பைப்பின்பாகவும் அருளிச்செய்தது - விஷயவைலக்ஷண்யத்தாலும், ஹேதுவிசேஷத்தாலும் கூடுமென்கிறார் (இதரேத்யாதி வாக்யத்வயத்தாலே). (கதிர்பெருக்கி)

---

(க)

[illegible] - நாதாதும் தேவாவரமர்ஹந்தி] என்கிறபடியே மநுஷ்யர்களுக்கு ப்ரத்யக்ஷத்ருஷ்டராஞல் வரங்கொடுத்தல்லது போகாரிறே. அத்தேவதைகள் தாங்கள் மநுஷ்யஸ்த்தாநீயரென்னும்படியிறே நித்யஸூரிகள்படி யிருப்பது. (க) "యత్ర పూర్వే సాధ్యా -யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:" என்னக்கடவதிறே. அவர்களுக்கும் அபேக்ஷிதப(ஃ)லங்களைக்கொடுக்கக்கடவீராயிறே தேவரிருப்பது. அந்தக்ஷுத்ர தேவதைகளுடையபடி இதுவாஞல் உமக்குக் கொடுக்கத்தகுமோ? கொள்ளத்தகுமோ வென்கிருள். பெருமாள் திருவயோத்யையில் நின்றும்போந்து ஶ்ருங்கிபேரபுரத்திலே எழுந்தருளி, ஶ்ரீகுஹப்பெருமாள் மலைத்தேனையும் காட்டுப்பழமும் கொண்டு சென்று உபஹாரமாகக்கொடுக்க, "நாம் கொள்ளப் பிறந்தோமல்லோம்காணும், கொடுக்கப் பிறந்தவர்காணும்" என்றருளிச் செய்தாரிறே; ஆஞல் பிறருடைமை கொள்ளத் தகுமோ? கொடுக்கத்தகுமோ வென்கிருள். உம்முடைய மேன்மை கிடக்கிடும். (திருத்தக்கீர்) (உ) "అస్యేశానా జగతో విష్ణుపత్నీ- அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (ங) "ఈశ్వరీం సర్వభూతానాం-ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்" என்று சொல்லுகிறபிராட்டிக்குத்தகுதியாயன்றோ தேவரிருப்பது. லோகத்தில் சேதநர் மூன்றுகோடியாயிறே யிருப்பது;—நித்யரும், முக்தரும், முமுக்ஷுக்களும், என்று த்ரிவிதமாயிறேயிருப்பது. ஸம்ஸாரிகள் (ச) "అసన్నేవ - அஸந்நேவ" யிறே. அதில் நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாய் தேவரோடே ஒப்புச் சொல்லலாம்படியிறேபிராட்டியிருப்பது. (ரு) "அலர்மேல் மங்கை" என்னும், (சு) "తుల్యశీలవయోవృత్తాం తుల్యాభిజనలక్షణాం। రాఘవోऽర్హతి- துல்யஶீலவயோ வ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணம் ராகவோऽர்

தப்பிப்பிக்கிருர் (பெருமாளித்யாதி). நம்முடைய மேன்மைக்குக்குறையென்? நாம் கொடுக்கவே பிறந்தோமாகிலும், * நாரீணாமுத்தமையான இவளைப் பிரியமாட்டாமையொழிந்தோமித்தனையன்றோ வென்னுமவர் கருத்தையுட் கொண்டு மேலும் சொல்லுகிறுளென்னுமிடத்தை ஸூசிப்பிக்கிருர் (உம்முடையவித்யாதி). தகுதியைஉபபாதிக்கிருர்(லோகத்திலித்யாதி). பத்த(బద్ధ)ருடையென்ன (ஸம்ஸாரிகளித்யாதி) நீர் அவளையும் பிரியாதேயிருக்கிற

(க) புருஷஸூ. (உ) யஜுர்-ச-ச-ஙஎ. (ங) ஶ்ரீஸூ.
(ச) தை-ஆ-சு-க. (ரு) தி-வாய்-சு-கய-கய. (சு) ரா-ஸு-கசு-ரு.

ஹந்தி " என்றும் சொல்லுகிறபடியே தகுதியாயிறே யிருப்பது ஆனால் உம்முடைய ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரம். ஒரு பெண் பெண்டாட்டியை மார்விலே வைத்துப் பார்த்துக்கொண்டிருக்கிறீர் ஓர் அப(ப)லைகையில்வளையை அபஹரிக்கைத் தகுதியோவென்கிறாள்.

(வெள்ளியீர்) உம்முடைய ப்ரணயித்வம் கிடக்கிடும். நீர்தாம் ஹேயப்ரதிப (ட)டரன்றோ? ஒருத்திகையில்வளையை அபஹரிக்கை உமக்கு ஹேயமன்றோ. அதவா-நீர்தாம் சுத்த(த)ஸ்வபாவரே, பரத்ரவ்யாபஹாரம்பண்ணுகை உம்முடைய சுத்திக்குப்போருமோ? (க) "[ஸர்வேஷாமேவ சௌசாநாமர்த்தசௌசம் பரம் ஸ்ம்ருதம்] - யோர்த்தே சுசிஸ்ஸ ஹி சுசிர்ந ம்ருத்வாரி சுசிஶ் சுசி:" என்கிறபடியே த்ரவ்யசுத்தியே சுத்தியென்றும், மண்ணாலும் நீராலும்பிறக்கும் சுத்தி, சுத்தியல்லவென்றதிறே. அதவா "வெண்மை" என்று ஆர்ஜவமாயிருக்கிறது. மநோவாக்காயங்களினுடைய ஸத்யதை வருகிறபோது, "பிரியேன், பிரியில் தரியேன்" என்றுசொன்ன சொலவுக்கும் பொகட்டுப்போகைக்கும் என்னசேர்த்தியுண்டு. (வெய்யவிழுநிதிவண்ணர்) "உம்முடையஸ்வரூபம்கிடக்கிடும். இவ்வடிவைப்படைக்கவும் கொடாதிருக்கவும்தகுமோ?, இவ்வடிவை அபேக்ஷித்தார்க்குக் கொடுக்கவன்றோதகுவது" என்கிறாள். வெய்ய-காய்ச்சின, விழுநிதி-நல்லபொன்; இத்தால் (உ) "சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனி" என்கிறாள். "வெய்ய" என்கையால் - சுட்டுரைத்தவென்

தறிவோம், அதுக்கு நமஸ்காரமென்னுமுட்கருத்தையருளிச்செய்கிறார் (ஆனல் இத்யாதி). முன்பு ப்ரமாணத்தைப் பண்ணுவித்துக்கொண்டு, ஜநக குலஸுந்தரியைக் காட்டிலே விட்டதறியோமோவென்று கருத்து.நாம் (ங) "நஜீவேயம் க்ஷணமபி - நஜீவேயம்க்ஷணமபி" என்றிருக்குமவனன்றோ? மார்விலே வைத்துக்கொண்டே யிருக்கிறோம், லோகாபவாத பீதியால்அனுப்பினதைக் கொண்டு ப்ரணயித்வத்துக்கு நமஸ்காரமென்கிறதென் னென்ன சொல்லுகிறாளென்கிறார் (ஒருவித்யாதி).

"நமக்குப்ரணயித்வம்போகவேணுமோ ? நம்முடைய ஸ்வரூபம் ஸ்வதந்த்ரமன்றோ? வேண்டினபோதுவேண்டினர் கைவந்திருப்போமோ" என்னும் அபிப்ராயத்தின்மேலே உன்ஸ்வரூபத்துக்குத் தான்சேருமோ வென்கிறாளென்றத்தை யருளிச்செய்கிறார்(உம்முடையவித்யாதி). ஸ்வரூபக (ஃ) த

(க) (உ) தி-வாய்-ங-க-உ. (ங) ரா-ஸு-கரு-கo.

தது. "விழுநிதி" என்கையாலே நன்பொன்னென்கிறது. அதவா-"வண்ணம்" என்று-ஸ்வபாவமாய், நிதியானஸ்வபாவத்தைச்சொல்லுகிறது. அப்போது, பிறர்க்கு உடைமையாமத்தனைபோக்கி, பிறருடைமையை அபஹரிக்குமோவென்கிறாள். இவன்படியைநேராகப்பேசினாள்; தன்மகள்படியை முன்னுருக்கொண்டாள்; இவன்படி இதுவாவதாம்; இவள்படிஇதுவாவதாம்; இதென்ன அந்யாயமென்கிறாள்.

இப்படி இவள் கூப்பிட்டவாறே*அயர்வறுமமரர்களதிபதியான பெரியமேன்மையோடேயிருக்கிற சவரிப்பெருமாள், "ஒரு பெண் பெண்டாட்டி கூப்பிடாநின்றாள், அதுக்கடியென்" என்று விட்ட வாசலாலேபுறப்பட்டு எதிரேவந்து "வாரீர் எம்மைநீர் கூப்பிடுகிறதென்" என்ன; "கைவளைகொள்வது தக்கதே" என்கிறாள். நீயே சொன்னாயிறே "திருத்தக்கீர்"என்று; அத்திருவின்ஸ்வபாவம் இவளுக்குண்டானபோதன்றோ கையில்வளையைக்கொள்ளத்தகாதொழிவது. அவளுக்குஸ்வபாவமேதென்னில்?ஸ்வலாபத்துக்கு (க)"[illegible] - தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்" என்றன்றோ அவளிருப்பது. இவள்ஸ்வபாவம் ஸ்வலாபம் "ஸ்வயத்நலாத்யம்" என்றிருந்

ஹேயப்ரதிபடதை- "வெண்மை" என்று திழருளிச்செய்து, குணகதமான ஹேயப்ரதிபடதையாக விவக்ஷித்து அத்தை இரண்டுவகையாகவருளிச்செய்கிறார் (அதவேத்யாதி). (ஸத்யதை,) ஏகரூபதை. "உம்முடைய பெண்ணைக் கையில் வளையை நான் கையாலே கழற்றிக்கொண்டதுக்கு ப்ரமாணமில்லாமையாலே சுசித்வத்துக்குக்குறையில்லை, (உ) "[illegible] தேனேதம் பூர்ணம் புருஷேண" என்கிற ப்ரமாணமுண்டாகையாலே நான் பிரிந்தவனுமல்லன், அத்தால் ஆர்ஜவத்துக்குக் குறையில்லை; அதவா என் ஸ்வரூபத்துக்கும் ஹேயப்ரஸக்தியில்லையென்று சொல்லவல்லனென்று கருதி "பாரார்த்தமான வடிவைப்படைத்தும்பிரிந்தாய்" என்கிறானென்றருளிச்செய்கிறார் (உம்முடையவித்யாதி). ஸ்வரூபமென்றது-குணங்களுக்கு முபலக்ஷணம். நிம்பதங்களையும் தொழுதாளென்றத்தையும் கடாக்ஷித்தது, "ஓ" என்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இவன்படியித்யாதி). நேராகஸ்வரூபரூபகுணவிபூதிகளெல்லாம் மின்னிமுன்னே தோற்றுகையாலே கூப்பிடும்.

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி-உறைக்க நின்றீரென்னுமளவும்).

(க) ரா-ஸு-ருக-ருo. (உ) ப்வே-ரு-க.

தாளே; இன்னமும் "விழிநிதிவண்ணர்" என்று ஸ்வபாவம் சொன்ஞயே. "அந்நிதியுடையவன் கொடுக்கக் கொள்ளுமதொழிய மேல் விழுந்துகொள்ளுகை ஆத்மாபஹாரிகள்க்ருத்யமன்றோ? ஆனபின்பு இவ்வளையைக்கொள்ளத்தகுங்காண்" என்று சவரிப்பெருமாள் இதுக்கும் உறைக்க நின்றார். (துள்ளுநீர் கண்ணபுரம்தொழுதாளிவள் கள்வியோ?ஓ)படுகுலை படுகுலையென்கிறாள். தாபஹாரமானதேசமாகையாலே அத்தேசஸ்வபாவத்தாலே ஓரஞ்ஜலிபண்ணிஞளென்ன, இவளை ஆனேக்கிடவேணுமோ? (துள்ளுநீர்) அசேதநமான ஜலமும் தன்னபிமதம்பெற்று களித்து வர்த்திக்கிற தேசத்திலே தன்சைதந்யம் தோற்ற ஓரஞ்ஜலிபண்ணிஞளென்ன, இதுகுறையாகவேணுமோ?. (கண்ணபுரம்தொழுதாள்) பராவஸ்த்தையைத் தொழுதாளோ? வ்யூஹங்களைத் தொழுதாளோ? அவதாரங்களைத்தொழுதாளோ? அர்ச்சாவதாரத்தில் நீர் நின்ற ஊரையன்றோ இவள் தொழுதது. (தொழுதாள்) ஆத்மாபஹாரியென்றிறே நீர் சொல்விற்று. தொழுகை- ஆத்மாபஹாரிக்ருத்யமோ? (க) "ந நமேயம் - நமேயம்" என்றிருக்கையன்றோ தொழாதவர்கள் க்ருத்யம். (உ) "யஸ்யாஸ்மி - யஸ்யாஸ்மி" என்றன்றோஇவள்ஸ்வரூபம்.(ங)"[illegible]

(உறைக்க நிற்கை) இவள் வார்த்தைக்குச் சலியாதிருக்கை. (இதுக்கும்) என்கிறச(ஞ)காரத்தாலே ப்ரதிபதமும் கல்பித்தப்ரத்யுக்திகள்சொல்லிக்கொள்வது என்னுமர்த்தத்தை ஸூசிப்பித்தார். இவ்வவதாரிகைக்குத்தாத்பர்யம்-அவன் புறப்பட்டவளவிலே முறைப்படுவாரைப்போலே "கைவளைகொள்வது தக்கதே" என்று அவன்பேரில் களவை ஏற்ற, அவன் இவள்பேரில்தானே களவைச்சுமத்த, "தொழுத விவள்கள்வியோ" என்கிறுவென்று - தொழுகை ஸாதகமாய், அத்தாலே ஸ்வாதந்த்ர்யம் ஸூசிதமாய், அத்தாலே ஆத்மாபஹாரத்தையும், விழுநிதிவண்ணஞய்ஆசைப்படுகையாலே பரத்ரவ்யாபஹாரத்தையும் சுமத்திஞளென்கை. (ஆனேக்கிடவேணுமோ) என்றது - அபராதிகளை ஆனையின்காலில் இடுவாரைப்போலே அந்தஃபுரபரிகரத்தை ஆனைக்கிடவேணுமோவென்கை. நீர்மாத்ரத்தைச் சொல்லுகைக்குக் கருத்து (அசேதநேத்யாதி). (ச) "அர்ச்யஸ்ஸர்வஸஹிஷ்ணு: - அர்ச்சயஸ்ஸர்வஸஹிஷ்ணு:" என்கிறபடியேயிருக்கிற உன்னுடைய ஊரைத் தொழுதால் நீர் இத்தைக் குறையாக்கப்போமோ வென்னுமத்தைவ்யாவர்த்திபூர்வகமருளிச்செய்கிறார் (பரேத்

(க) ரா-யு-ஙக-கக. (உ) (ங) ஜிதந்தா-க-ரு. (ச) ர-ஸ்த-உ-கூச.

ஸ்வரூபம்-பக்தாநாம்-நதேரூபம்'' என்றன்றோ உன்ஸ்வரூபம். உன்னுடைமையான துதோற்றஅஞ்ஜலிபண்ணினாளே. இவளுடைமையைக் கொண்டுகிடக்கிற நீயன்றோ ஆத்மாபஹாரி. அவ்வளவேயோ ஸ்வர்ணாபஹாரமும் ஆத்மாபஹாரமும், பரமாத்மாபஹாரமும்மூன்றும் பண்ணினாய் நீயன்றோ வென்கிறாள். (இவள்கள்வியோ) இவளோ கள்வி, நீயன்றோவென்கிறாள்.

(கைவளைகொள்வது தக்கதே) பிள்ளாய், தொழத்தொழ வெட்டுவாரைப்போலே தொழுதகையிலாபரணத்தைக் கழற்றுவாருண்டோ? கீழ்ச்சொன்ன "சிலையிலங்கு பொன்னாழி" என்கிறதன் கையில் வளைகளைக்கழற்றி இவள்கையிலிட்டுப் பார்த்துக்கொண்டிருக்கவன்றோ தகுவது. (தக்கதே) நாட்டில்க்ஷுத்ரப்ரணயிகளும் ப்ரணயிநிகளாயிருப்பார்க்குச் சிலஉபஹாரங்களைக் கொடுத்துக் கொடுபோரக் கடவதாயிருக்கும். பரமப்ரணயியாயிருக்கிற உனக்

---

யாதி). பூ(ஸ்ரீ)தநிர்தேசதாத்பர்யம் (உன்னுடைமையானதித்யாதி). "கள்வியோ" என்னவே இவளொன்னுமது ஸித்தமாயிருக்க, மீளவும் "இவள்" என்கையாலே, இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளித்யாதி). "வண்ணம்" என்றது- திருமேனியானபக்ஷத்திலே ஒருதாத்பர்யமருளிச்செய்து, வண்ணம்- ஸ்வபாவமென்றபக்ஷத்திலே திருவுள்ளமாய், விழுநிதிவண்ணர் தெள்ளியீர் தேவர்க்கும் தேவராயிருந்துவைத்து இவள்கைவளை கொள்ளுகையாலே, நிதியான ஸ்வபாவமும் தெளிவுடையராயிருக்கிறபடியும் மேன்மையோடிருக்கிறபடியும் போய்விடுகையாலே ஸ்வர்ணாபஹாராதிகள் நீரேபண்ணினீரென்கிறாளென்றருளிச்செய்கிறார் (அவ்வளவேயோவித்யாதி). தெளிவு - ஆத்மதர்மமாகையாலே அதில்லாமை தத(ஆத்ம)பஹாரமன்றோவென்றுகருத்து.

"கை" என்றுவிசேஷித்ததுக்கு "தொழுதாள்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (பிள்ளாயித்யாதி). "தெள்ளியீர்" இத்யாதியாலே பூஜித்துச் சொல்லச்செய்தேயும் கைவளைகொள்ளுகையாலே * நின்பிள்ளை தானே இல்லம்புகுந்தென்மகளைக் கூவிக்கையில் வளையைக்கழற்றிக்கொண்டமைக்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகையாலே, "பிள்ளாய்" என்றுஸம்போதித்தாளென்றுகருத்து. "கொள்வது- தக்கதே" என்றால், இனி எதுதான் தக்கதென்னவருளிச்செய்கிறார் (கீழித்யாதி). "தக்கதே" என்கிற ஏகாரத்தாலே நிர்த்தாரணம் தோற்றுகையாலே லோகத்தில் ப்ரஸித்தமோ நிர்த்தரிக்கைக்கென்ன (நாட்டிலித்யாதி). திருத்தக்கீரென்றத்தைக் கடாக்ஷித்து உட்கருத்து (சங்கித்

-குக் கொடுபோகைதகுமோ?, (க)"சங்குதங்குமுன்கை நங்கை" என்கிற அவளைப்போலே யிருக்கையன்றோதகுவது; தக்கதல்ல. (உ) "ஸ்ரீரூபம்- நதேரூபம்," என்கிறாள். .... .... .... .... (க)

மூ.—நீணிலாமுற்றத்து நின்றிவள்நோக்கினாள்
காணுமோ கண்ணபுரமென்றுகாட்டினாள்
பாணனார் திண்ணமிருக்க வினியிவள்
நாணுமோ நன்றுநன்று நறையூரர்க்கே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இவள் | இந்தப்பெண்ணானவள் | திண்ணம் | த்ருடமாக |
| நீணிலாமுற்றத்து | மூன்றும் ப்ராஸாதத்தில் | இருக்க | இருக்கும்போது, |
| நின்று | இருந்து | இனி | இப்படி இடைவிடாமல் ப்ரிக்ஷிக்கச் செய்தேயும் |
| நோக்கினாள் | லோகதர்சனம் பண்ணினாள் (பிறகு) | | |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை | இவள் | இந்தப்பெண் |
| காணுமோ | பாருங்கோள் | நாணுமோ | மீளக்கூடுமோ? [மே |
| என்று | என்று | நறையூரர்க்கே | அந்நறையூரர்கார்ய |
| காட்டினாள் | காட்டாநின்றாள்; | நன்று நன்று | நன்றாய்த்தலைக்கட்டிற்று. (உ) |
| பாணனார் | பாடுமவர்களான ஆசார்யர்கள் | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (நீணிலாவித்யாதி). (ந) "ஸகலம்- நமேயம்" என்கிற ப்ரதிஜ்ஞைகுலைந்து (ச) "க்ஷிப்ரம்தேவப்ரஸாதிநீ- க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ" என்கிறபடியே அவிவாதம்தோற்ற ஓரஞ்ஜலி பண்ணினாளாகில் இதுகுறையோ என்றிறே கீழ்ச்சொல்லிற்று. இத்தைக்கேட்ட சவரிப்பெருமாள் "நீநம்மைக்குறை சொல்லக் கடவையோ? உன்மகளை நியமித்துக்கொள்ளமாட்டாயோ; ஸ்த்ரீகளுக்கு "நாண்மடம் அச்சம் பயிர்ப்பு" என்கிறஆத்மகுணங்களில் ப்ரதாநகுணமன்றோலஜ்ஜை; அதுஉன்மகளுக்கில்லையானபின்பு அவளை நிய

யாதி). "தொழுதாள்" என்றத்தைக் கடாக்ஷித்து * புராணைகதாகாம் பராபவம் உனக்குத் தகாதென்று சொல்லுகிறாளென்கிறார் (தக்கதித்யாதி). (க)

அரு.—இரண்டாம்பாட்டு. (நீணிலாவித்யாதி) (ஸம்ஸர்க்கதோஷம்)என்

(க) தி-ச-வி-நுள. (உ) ஜிதந்தா-க-ரு.
(ந)-ரா யு-நகூ-கக. (ச)-காருட-பு-பூர்வ-கக-உச,

மிக்கவன்றோ அடுப்பது'' என்ன; அவளுடைய உக்திவ்யாபாரங்களிருந்தபடியாலும், ஸம்ஸர்க்கதோஷமிருந்தபடியாலும், அவளைநிய மிக்க வென்பதொன்றுண்டோ? இவளைஅடியிலே அலேவலேயாக்கிப் புறப்படவிட்ட இவர்கார்யமே தலைக்கட்டிற்றேயென்கிறாள்.

(நீணிலாமுற்றத்து நின்றிவள் நோக்கினாள்) "மநுஷ்ய ஸஞ்சாரமில்லாதப்ரதேசத்திலே இவளைக்கொடுபோய் இட்டுவைக்கவேமீளக்கூடும்''என்றுநினைத்து நீணிலாமுற்றத்தே கொடுபோய்வைத்தாள். (நீணிலாமுற்றம்) அம்மநுஷ்யர்களுடைய வார்த்தையுங்கூடச் செவிப்படாதபடி ஒக்கத்தையுடைத்தான நிலாமுற்றம். முமுக்ஷுவானவனுக்கு சரீரஸம்பந்தாதிகளுள்ள விடத்து குத்ஸையும்பயமும் வர்த்திக்கச்செய்தேயும், பதார்த்தங்களினுடைய ஸந்நிதியில் கால் தாழ்கைக்கு யோக்யதையுண்டாமிறே, சரீரஸம்பந்தம் கிடக்கையாலே. தத்பரிஹாரார்த்தமாக விவிக்தஸேவியாய் வர்த்திப்பானென்று சொல்லிற்றிறே. அப்படியேதானும் பூர்வார்த்த(ஷ்)நிஷ்டையாகையாலே, தன்மகளுக்கு இந்த அபிப்ராவண்யமுண்டாகைக்கடி ஸம்ஸர்க்கதோஷமிறே என்றுநினைத்து, நிர்மாநுஷ்யமான நீணிலாமுற்றத்திலே வைத்தாள். (நின்றிவள்நோக்கினாள்) அந்நிலாமுற்றத்தைக்கண்டவாறே * கொற்றப்புள்ளொன்றேறி மன்றூடே

---

றது-"பாணனார்'' என்று சொல்லப்பட்ட திருநறையூர் நம்பியாகிற ஆசார்ய ஸம்ஸர்க்கத்தை. (இவர்) என்றது-திருநறையூர் நம்பியை. (கார்யம்) என்றது -நாணமறப்பண்ணுகை.

அரு. — கைவளை கழலும்படியான தசைபிறக்க, இவள் நீண்ட நிலாமுற்றத்திலே போகக்கூடுமோவென்ன (மநுஷ்யேத்யாதி). (மீளக்கூடும்)பகவதலாப க்லேசத்தில் நின்றும் மீளக்கூடும். நீணிலாமுற்றமாவது-தளத்தின்மேல் தளமாக விருக்குமிதில், மூன்றும் தளமான ப்ராஸாதம். அந்யாபதேசத்தை யருளிச்செய்து, "ப்ரஜ்ஞாப்ராஸாதம்''என்றுசொல்லப்பட்ட பகவதேகோபாயத்வஜ்ஞாந ஸஹிதமான நிலேயில் நின்றும் பாகவத விஷயத்தில் மூட்டினாள் என்னும் ஸ்வாபதேசத்தை யருளிச்செய்கிறார் (முமுக்ஷுவானவித்யாதி). (பதார்த்தங்கள்) விஷயங்கள். (நீணிலாமுற்றத்திலே) பாகவத நிஷ்டையிலே. பாகவதாலாப க்லேசத்தாலே இட்டகாலிட்டகைகளாயிருந்த இவளை, "பாகவதரே உபாயம்''என்கிற ஜ்ஞாநமாகிறப்ராஸாதத்திலேற்றிவிட்டால், எங்ஙனே நிற்கும்படி என்ன; பகவத்விஷயம்போலே இது பயஹேதுவாகாமையாலே நின்றுளென்கிறார் (அந்நிலாவித்யாதி). பகவத்விஷயக்

வந்து அநந்யார்ஹமாக்கி ப்ரதமஸம்ஶ்லேஷம் பண்ணினவிடம் போலே யிருந்ததீ என்று * இட்டகாலிட்ட கைகளாயிருந்த இவள் எழுந்திருந்து தரித்துநின்றாள். இதுபோலேகாணும் ஆசார்யோப திஷ்டமான யதார்த்தஜ்ஞாநம் பிறப்பதற்குமுன்பு விஷயாந்தரங்களால் படும் கண்கலக்கமும், பின்புவகுத்த விஷயத்தில் புகுந்தால் (க) "ஶ்ரீ ... - அதஸோ஽பயம் கதோபவதி" என்று நிர்ப்பயனாய் தரித்துநிற்கும் நிலையும். (இவள்நோக்கினாள்) அவ்வளவேயன்றிக்கே லோகதர்ஶநமும் பண்ண க்ஷமையானாள்.

(காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள்) சுற்றும்கண்ணை யோட்டிப் பார்த்தவாறே திருக்கண்ணபுரம் கண்ணுக்கு விஷயமாயிற்று ; அல்லாத ப்ரதேசங்கள் கிடக்க, திருக்கண்ணபுரம் கண்ணுக்கு விஷயமாக வேண்டுவானென்னென்னில் ; இவளுக்கு அபிமதம் சவரிப்பெருமாள்பக்கலிலே யாகையாலும், இவள்தான் லக்ஷ்யத்தை யுடையளாகையாலும், திருக்கண்ணபுரம் கண்ணுக்குவிஷயமாயிற்று. த்ரௌபதியை ஸ்வயம்வரிக்கவந்த ராஜாக்களுக்கு லக்ஷ்யத்தைக்காட்டி, அதின்கழுத்தற எய்யவல்லார்க்கு இவளைக் கொடுக்கக் கடவேனென்ன; அவர்களும் "அதின்கால் கண்டேன், வயிறுகண்டேன்" என்றாப்போலே சொன்னார்கள் ; அர்ஜுநன் "அதின் கழுத்தைக் கண்டேன்" என்றானிறே. லக்ஷ்யமுடையனாகையாலும், இவளுடைய ஸ்வயம்வரத்திலே மிகவும் ஶ்ரத்தையை யுடையனாகையாலும். (காணுமோகண்ணபுரமென்று காட்டினாள்) (உ) "தொண்

தானே பயஹேதுவானபடி எங்ஙனேயென்ன ; (இதித்யாதி). "இது" என்றது - பாகவதநிஷ்டையை. (லோகதர்சநம்) என்றதுக்கு ஸ்வாபதேசம், பாகவதருடைய ப்ராப்யத்வ ப்ரதிபாதக விசேஷசாஸ்த்ர பரிசீலநம்.

(லக்ஷ்யத்தையுடையளாகை) இலக்குப்படநோக்கவல்லளாகை. விசேஷஶாஸ்த்ரவிசாரத்தாலே பாகவதர் ப்ராப்யரானால் எங்குமுண்டாயிருக்க, இவளுக்குத்திருக்கண்ணபுரத்திலே கண்படுகைக்கு த்ருஷ்டாந்தம். (த்ரௌபதீத்யாதி). (லக்ஷ்யத்தை) மத்ஸ்யயந்த்ரத்தை. "காணும்" என்று பஹுவசநத்துக்குக் கருத்தை வெளியிடாநின்றுகொண்டு, "ஓ" என்றது - போக்யதையால்வந்த ஹர்ஷஸூசகமென்றும், காட்டுகை - தனக்குப்ரக்ருதியென்றும் விவக்ஷித்துத் தாத்பர்யம் (தொண்டரித்யாதி). மநுஷ்யர்வார்த்தை

(க) தை-ஆ-எ. (உ) தி-வாய்-ரு-உ-உ.

டிரெல்லீரும் வாரீர்'' என்றாப்போலே கண்ணால் கண்டவர்களையடங்க நீங்கள் கண்ணபுரத்தைக் காணிகோளென்னாநின்றாள். "உனக்கு இவ்வதிமாத்ரப்ராவண்யமாகாதுகாண்'' என்றுநிஷேதிக்கிறதாயையுங்கூடத் திருக்கண்ணபுரத்தைப் பாராய் என்றாள். நல்லது கண்டால் தனியே அநுபவிக்கும் ப்ரக்ருதியன்றே. (கண்ணபுரமென்று காட்டினாள்) (க) "பிரானிருந்தமை காட்டினீர்'' என்று அவனைக் காட்டினாள் தாயார்; அவனிருந்தவூரைக் காட்டுகிறாளிறே இவள். இதுபோலேகாணும் ஸதாசார்யனிற்காட்டில் ஸச்சிஷ்யனுக்கு உண்டானவாசி. "உனக்குப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஈஶ்வரன்திருவடிகளே''என்றுகாட்டிக்கொடுக்கும் ஆசார்யன்; "அவ்விரண்டர்த்தத்தையும்என்நெஞ்சிலேப்ரதிஷ்டிப்பித்தஉன்திருவடிகளன்றோஎனக்குப் புருஷார்த்தம்'' என்றிறேஸச்சிஷ்யனிருப்பது. அதவா (காணுமோ கண்ணபுரமென்றுகாட்டினாள்) "திருக்கண்ணபுரத்தைக்காணிகோள், அஞ்ஜலியைப்பண்ணிகோள்'' என்று சொல்லப்புக்கு முடியச் சொல்லமாட்டாதே குறையும் ஹஸ்தமுத்ரையாலே காட்டினாள். அதவா (காணுமோ) என்கிறாள். "இக்கண்ணால் கொள்ளும்

கேளாத நீணிலாமுற்றத்தில் நின்றும் உபதேசிக்கையாலே, "ஓ'' என்று எல்லாரும் கேட்கும்படி கூப்பிட்டும், அதுகேளாதார்க்கும் கையாலே காட்டினாளென்று கருத்தாகவுமாம். "காணும்'' என்று பூஜாவசநமாய் "ஓ'' என்னுமது ரஸ்யதையை ஸூசிப்பிக்கிறதாக்கி திருத்தாயார்க்கே காட்டினாளென்று தாத்பர்யாந்தரம்(உனக்கித்யாதி). கண்டவர்களுக்கெல்லாம்காட்டப்போமோ? நிஷேதிக்கிற திருத்தாயார் அருகேயிருக்கவென்ன (உனக்கித்யாதி). இதுக்கு ஸ்வாபதேசம் (இதுபோலேயித்யாதி). "பகவானாகிற ப்ராப்யம் ஸித்திக்கைக்கு பாகவதாபிமாநமென்று இரு'' என்று திருத்தாயாருபதேசிக்கத் தரித்து நின்று, விசேஷசாஸ்த்ரதர்ஶநத்தாலே இவ்வர்த்தத்தை அறிவிப்பித்த ஆசார்யனே ப்ராப்யனென்னுமர்த்தத்தைத்தானே விண்ணப்பம் செய்வளென்று கருத்து. "காட்டினாள்'' என்றதுக்கு, தான் அஞ்ஜலிபண்ணி இவளுக்குக் காட்டினாளென்றர்த்தாந்தரம் (அதவேத்யாதி). "காணுமோ - நமக்குக் காணப்பெறுமோ'' என்றுக்தி, "காட்டினாள்'' என்றதுக்கு இப்படித்ரஷ்டவ்யத்தை நிஷேதிக்கையாலுண்டான க்லேசத்தாலே இரண்டுகையையும் மறித்துக் காட்டினாளென்று மூன்றும்யோஜநையை யருளிச்செய்கிறார் (அத

(க) தி-வாய்-க-ரு-ரு.

ப்ரயோஜநம் திருக்கண்ணபுரத்தைக் காண்கையன்றோ? இத்தை நிஷேதிப்பாரும் சிலருண்டாவதே '' என்றுவிஷண்ணையாகிறு ளென்றுமாம். வடமதுரைப்பிறந்தான்மகன், கோயிலாழ்வார் ஸந்நிதியிலே கண்ணைச் செம்பிளித்துக் கொண்டிருந்து ஜபித்தான். பட்டர் திருவடிதொழவெழுந்தருளினவர் இத்தைக்கண்டு "கோயி லாழ்வார் கண்ணுக்கு விஷயமாயிருக்க கண்ணைச் செம்பிளித்திருப் பதே; இவன்கண்ணால் ப்ரயோஜநம் கொள்ளமாட்டானாகாதே'' என்று வெறுத்தெழுந்தருளினார். அவனுக்கு ஒன்றிரண்டுமாஸத் துக்குள்ளே கண்கெட்டதிறே. இது இவளுடைய உக்திவ்யாபார மிருந்தபடி.

(பாணனாரித்யாதி) ஸம்ஸர்க்கஜப்ராவண்யம் சொல்லுகிறாள். (பாணனார்)தலைமகன் பிரிந்தால் எதிர்த்தலையிலுண்டான மறத்தைப் போக்கி சேரவிடுகைக்காக பாணனைக் கொடுத்துவரவிடும்; அவர் களும் இன்சொற்களாலே அவர்கள் நெஞ்சிலே மறத்தைப்போக்கி சேரவிடுவர்கள். இங்கு பாணனாராகிறார் - சேதநர்க்கு ஸ்வாதந்த்ர் யத்தால் வந்த மறத்தைப்போக்கி சேஷத்வஜ்ஞாநத்தைஉணர்த்திச் சேரவிடுமாசார்யனிறே. "பாணனார்'' என்கிறாள்காணுமிவள். (க) "பேராளன்பேரோதும் பெரியோர்'' என்று தன்மகள் சொல்லக் கேட்டவளாகையாலே, இன்னார் இன்னார்க்குச் சொல்ல வென்ப தில்லையாகாதே, (உ) "ஸமித்பாணிஃ ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் - ஸமித்பாணிஶ் ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் '' என்கிறபடியே தந்நிஷ்டனு

---

வேத்யாதி). "பாகவதவிஷயமே த்ரஷ்டவ்யம்'' என்கைக்கு ஸம்வாதம் காட்டு கிறார் (வடமதுரையித்யாதி). (கோயிலாழ்வார்) ஶ்ரீரங்கவிமாநம்.

"பாணனார்"-பாடுமவர்கள். "திண்ண"'த்ருடமாக. இனிஇவள்காணுமோ என்கைக்குப் பாணனார் செய்ததென்னென்ன; (தலைமகளித்யாதி). ப்ராப்ய வைலக்ஷண்யத்தை உபதேசிக்கும் ஆசார்யன். ஸ்வாபதேசம் (இங்கித்யாதி). "பாணன்"என்றுதுாதுவந்தவனைச்சொல்லவடுப்பதாயிருக்க,உபசரித்து"பாண னார்'' என்கிறதென்னென்ன; (பாணனாரித்யாதி). மகள்சொல்ல, தாய் அத் தைக்கேட்கக்கூடுமோவென்ன (இன்னாரித்யாதி வாக்யத்வயத்தாலே). அவ தாரிகையிலே சவரிப்பெருமாள், "உன்பெண்பிள்ளையை நீ அடக்கி ஆளப் போகாதோ'' என்னுமதுக்கு உத்தரம்இப்பதமென்னுமத்தையருளிச்செய்கிறார்

---

(க) தி-மொ-எ-சு-சு. (உ) முண்ட-க-க-கஉ.

பிதுவே யாகாதே வேண்டுவது. (திண்ணமிருக்க) அவர்கள் அச(ஃ) ஸப்ரதிஷ்ட்டராயிருக்க. (இனி இவள்நாணுமோ) இப்படி இடை விடாமலிருந்து துஸ்ஸிக்ஷை பண்ணச்செய்தேயும், இவள் மீள வென்பதொன்றுண்டோ?. (இனி இவள்நாணுமோ) ஸம்ஸர்க்கஜ ப்ராவண்யத்தாலும் மீளமாட்டாள். ஸ்வக(ஃ)தப்ராவண்யத்தாலும் மீளமாட்டாள். "உனக்கு இதுவாகாதுகாண்" என்றுசொல்லுகிற நான் லஜ்ஜித்து மீளுமித்தனைபோக்கி, இவள்மீளுமோவென்கிறாள். ஆசார்யனும் பசையில்லையிறே. தான்ஸத்ப்ரக்ருதியன்றாகில் இரண்டும் வேண்டியிறேயிருப்பது.

(நன்றுநன்று நறையூரர்க்கே) இவள்கார்யமும் கிடக்கிடும், அச்சவரிப்பெருமாள் கார்யமும் கிடக்கிடும். அடியிலே இவள் கையில் மடலைக்கொடுத்துக் கொல்லையாக்கிப் புறப்படவிட்ட அந் நறையூரர்கார்யமே நன்றாய்த் தலைக்கட்டிற்றிறே என்கிறாள். (உ)

மூ.—அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்
வெருவினாள் மெய்யம் வினவியிருக்கின்றாள்
பெருகுசீர்க் கண்ணபுரமென்று பேசினாள்
உருகினாள்மெலிந்தாளிது வென்கொலோ. (ஙு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அருவி | மலையருவியானது | மெய்யம் | திருமெய்யமென்றும் |
| சோர் | ப்ரவஹியாநின்ற [ம், | வினவி | கேட்டு |
| வேங்கடம் | திருவேங்கடமென்று | இருக்கின்றாள் | இராநின்றாள் ; |
| நீர்மலை | திருநீர்மலை | பெருகு | (ஆறுபோலே) பெருகாநின்ற |
| என்று | என்றும், | சீர் | (குணபூர்த்தியாகிற) ஐஶ்வர்யத்தை யுடைய |
| வாய்வெருவினாள் | அஸம்ருதயோக்திகளைப் பண்ணினாள் ; | | |

(இப்படியித்யாதி). "இனி" என்றதுக்கு அர்த்தம் (ஸம்ஸர்க்கேத்யாதி). ஸ்வகதப்ராவண்யம், "கண்ணபுரம்" என்று காட்டுகையாலே ஸூசிதம். "இவள்" என்றதுக்குக்கருத்து (உனக்கித்யாதி). "இவள்" என்றதுக்கு-ஸத் ப்ரக்ருதியான இவள் என்று விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் (ஆசார்யனுமித்யாதி).

"நறையூரர்க்கே" என்ற அவதாரண வ்யாவர்த்த்யகதநபூர்வகம், "நன்று நன்று" என்கிற வீப்ஸைக்குத் தாத்பர்யம் (இவளித்யாதி). அடியிலே மடலைக் கொடுத்ததில்லையேயாகிலும், மடலெடுக்கும்படியான ஸ்வவைலக்ஷண்ய ஜ்ஞாநத்தைக் கொடுத்தானென்று தாத்பர்யம். ... ... ... (உ)

| | | | |
|---|---|---|---|
| கண்ணபுரம் என்று பேசினள் | திருக்கண்ணபுரமென்றும் பேசாநின்றாள்; (உடனே | உள் மெலிந்தாள் | ஹ்ருதயத்திலேயே வாடினள், |
| உருகினள் | (நீராய்)உருகாநின்றாள்; | இது என் கொலோ | இதென்னகஷ்டம். (௩) |

அவ.—மூன்றாம்பாட்டு. "இனிஇவள்நாணுமோ" என்றிறே கீழ்சொல்லிற்று. அந்தலஜ்ஜைதானுண்டாவது- ஸத்தையுண்டாணுலிறே; "தான்பண்ணுகிற சிசிரோபசாரங்கள் கார்யமாய்த்தலைக்கட்டக் காண்கிறிலோம், என்னாய் முடியப்புகுகிறதோ" என்கிறாள். தாபார்த்தராயிருப்பார், தாபஹரணை ஜலநிலயனையிறேபற்றுவது; அவனைப் பற்றுமவளல்லளே இவள். அவனைப்பற்றுவார் முக்தப்ராயரானஸநகாதிகளிறே; இவள் பற்றுவது அர்ச்சாவதாரரூபத்திலேயிறே. அதில்தனக்குத் தாபஹரமான திருப்பதிகளிலேசிலவற்றைச் சொல்லுகிறாள்.

வ்யா.—(அருவிசோர்வேங்கடம்) இதுக்கடியானஸஹ்யம் மாறாமையாலே ப்ரவாஹமும் மாறாதேசெல்லும். (க) "தெண்ணீர்பாய் வேங்கடம்" என்கிறபடியே ஶ்ரமஹரமான தேசமிறே. (நீர்மலை) அந்த அருவிவிழுந்தால் போக்குண்டாயிறேயிருப்பது. அங்ஙனன்

அரு.—மூன்றாம்பாட்டு. (அருவியித்யாதி) கீழ்ப்பாட்டிலே கண்ணபுரத்தம்மானைக்குற்றம் சொல்லுகிறதென், உன்பெண்ணையடக்கிக் கொள்ளவொண்ணாதோவென்ன; திருநறையூர்நம்பி நாணறப்பண்ணினரென்ன; ஆகில் என்மேலே குற்றமில்லையென்றுவிட, திருத்தாயார் தன்னிலே தானே நொந்து தன்பெண்பிள்ளை படிகளைப்பார்த்து வினவ வந்தவர்களை நோக்கிப் புலம்புகிறாளென்று க(ஷ)ட்டஸங்கதி திருவுள்ளம்பற்றி, கீழ்ப்பாட்டோடே ஸங்கதியருளிச்செய்கிறார் (இனியித்யாதி). "ஸத்தையுண்டானால் லஜ்ஜையுண்டாக்கலாம், அதுதானும் என்னாய்முடியுமோ" என்றுசொல்லுகிறாளென்று கருத்து. (தான்) என்றது- மகளை. (சிசிரோபசாரம்) வேங்கடத்தையும் நீர்மலையையும் நினைக்கை. தாபார்த்ஸ்யாஞல் (உ) "[illegible]- தாபார்த்தோஜலஶாயிநம்" என்று க்ஷீராப்திநாதனையன்றோ ஏத்தவடுப்பது, அர்ச்சாவதாரத்தைப்பற்றுவானென்னென்ன; (தாபார்த்தனித்யாதி).

(ஸஹ்யம்) என்றது-ஜலம் பொசியும் மலை.

(க) நா-தி-அ-க. (உ) விஷ்ணு-தர்ம-ச-௩0.

நீயே சுற்றும்நீராய் அதினடுவே திருமலையாய், அதில் நடுவேயிறே கண்வளர்ந்தருளுவது. (என்றுவாய் வெருவினாள்) அபஹ்ருத ஹ்ருதயையாகையாலே அஹ்ருதயோக்திகளைப் பண்ணுநின்றாள். (மெய்யம் வினவியிருக்கின்றாள்) "ஆஸ்ரிதர்க்கு மெய்யேநின்று கார்யம் செய்தவிட மென்றன்றோ திருமெய்யமென்று பேராயிற்று" என்று கேட்கும். மறுமாற்றம்சொல்லுவாரில்லை. (க) ஸ்தப்தோஸி - ஸ்தப் தோஸி" என்றிராநின்றாள்.

(பெருகுசீர்கண்ணபுரமென்று பேசினாள்) இவ்வோதிருப்பதிகள்போலேயுள்ளவளவும் ஸம்பத்தாயிருக்கையன்றிக்கே, ஆற்றுப் பெருக்குபோலே மேன்மேலெனவரையிட்டுக் காட்டும் ஐஸ்வர்யத்தையுடைத்தான திருக்கண்ணபுரத்தை வாய்விட்டுப் பேசாநின்றாள். (கண்ணபுரமென்று பேசினாளுருகினாள்) பேசுவதோரவஸ்த்தையும், உருகுவதோரவஸ்த்தையுமின்றிக்கே, பேசினவாயோடே நீர்ப்பண்டமாகாநின்றாள். (உள்மெலிந்தாள்) (உ) "அச்சேத்யோயமதாஹ்யோயம் - அச்சேத்யோயமதாஹ்யோயம்" என்கிறஆத்மவஸ்து நின்றநிலையிலே வாடிற்றென்கிறாள். அதவா, சரீரம் உருகுவது அந்தஃகரணம் உருகினாளிறே; நெஞ்சமுருகிற்றென்கிறாள். (இது வென்கொலோ) இவ்வாற்றாமைகளுக்கடி பாபமிறே. (ங) [மதுராநாமநகரீ புண்யாபாபஹரீசுபா - மதுராநாமநகரீ புண்யாபாபஹரீசுபா] என்று அநவத்யம் நின்றதேசத்தைப் பேசவே பாபங்களும்போம், போக (போக) ங்களுமுண்டாம் என்றதிறே ஶாஸ்த்ரம்; அது இவளளவும் காணுதொழிகிறது என்பாபமிறே என்கிறாள். .... (ங)

மூ.—உண்ணும்நாளில்லை யுறக்கமும் தானில்லைப்
பெண்மையும் சாலநிறைந்திலள் பேதைதான்
கண்ணனூர் கண்ணபுரம் தொழுங்கார்க்கடல்
வண்ணர்மேலெண்ண மிவட்கிதுவென்கொலோ. (ச)

---

(வரையிட்டு) என்றதுக்கு-அந்தந்த மலைகளையிட்டு என்றாய், திருமலை, நீர்மலை, மெய்யமலை இவற்றையிட்டுப் பெருகுமென்று கருத்து; அதாவது- அங்குள்ள கல்யாணகுணங்கள் இங்கே ஸம்ருத்தமாய் தோற்றுகிறதென்கை. (ஐஸ்வர்யத்தை) என்றது-ஈஸ்வரஸம்பந்தியான குணபூர்த்தியை. இது பூர்வவாக்ய விவரணம். ... ... ... ... ... ... ... (ங)

---

(க) சாந்தோ-சு-க-ங. (உ) கீதை-உ-உச. (ங)

| பதம். | உரை. |
|---|---|
| உண்ணும்நாள் | (இவளுக்கு) புஜிக்கும் நாள் |
| இல்லை | இல்லை ; |
| உறக்கமும்தான் | நித்ரையும் |
| இல்லை | இல்லை; |
| பெண்மையும் | (இவள்) ஸ்த்ரீத்வத்தால் |
| சால | மிகவும் |
| நிறைந்திலள் | நிறைந்தவளன்று ; |
| பேதைதான் | (இன்னமும்) இளம்பெண்தான் ; |
| கண்ணன் | கண்ணனெழுந்தருளியிருக்கிற |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரமென் |
| ஊர் | திவ்யதேசத்தை |
| தொழும் | தொழாநின்றாள்; |
| இவட்கு | இவளுக்கு |
| கார் | கறுத்த |
| கடல் | ஸமுத்ரம்போன்ற |
| வண்ணர்மேல் | வடிவழகையுடையரான கண்ணன் மேல் |
| எண்ணம் | எண்ணமிருக்கிறது; |
| இதுவென்கொலோ | இதென்ன ஆச்சர்யம்தான் (௪) |

அவ.—நாலாம்பாட்டு. "வாய்வெருவினாள், வினவியிருக்கின்றாள், பேசினாள், உருகினாள்" என்கிற இவ்வாற்றாமைதானுண்டாவது தா(ஓ)ரகமுண்டானாலிறே; அது இருந்தபடி யென்னென்ன; அதுதானே இல்லையென்கிறாள்.

வ்யா.— (உண்ணும் நாளில்லை யுறக்கமும்தானில்லை) கீழுண்டான தசைகள் ஸ்வஸ்த்த தசைகளென்னும்படி யிருந்ததீ யென்கிறாள். ஊணுமுறக்கமு முண்டானாலிறே கீழ்பிறந்த அவஸ்த்தைகளுக்கு அவகாசமுள்ளது. (உண்ணுநாளில்லை) உபவாஸக்ருசையாயிராநின்றாள். "ஊணில்லை" என்கையன்றிக்கே "உண்ணும்நாளில்லை" என்கிறாள். பிராட்டி பெருமாளைப்பிரிந்து பத்துமாஸம் உபவாஸக்ருசையாயிருந்தபோது, தேவேந்த்ரன் அம்ருதமயமான அந்நத்தைக் கொடுவந்து ராக்ஷஸரும் ராக்ஷஸிகளும் காணுமே கொடுக்க, அத்தை அமுதுசெய்தாளென்று ருஷி எழுதினான். இவளுக்கு அங்ஙனிருப்பது ஒருநாளுமில்லை யென்கிறாள். (உறக்கமும்தானில்லை) அஹோராத்ரம்கூடியிறே ஒருநாளாவது; அதில்பகலுக்கு க்ருத்யமானஊணில்லையாகில், ராத்ரிக்கு க்ருத்யமான உறக்கமுண்டோவென்னில், அதுவுமில்லையென்கிறாள். உறக்கமில்லைஎன்கையன்றிக்கே

அரு.-நாலாம்பாட்டு. (உண்ணுமித்யாதி). "உறக்கமும்" என்றதுக்கு "ஊண்" என்றத்தோடே ஸமுச்சயமாகத் தாத்பர்யம் ( அஹோராத்ரமித்யாதி ). "தான்" என்ற தானுன தன்மைக்குக்கருத்து (உறக்கமித்யாதி). "உறக்கமும்,

உறக்கமுந்தானில்லை என்கிறது, உறங்குகைதான் வேணுமிறே; அதுதானே இல்லையென்கிறுள். பெருமாள் காட்டிலே எழுந்தருளினபோது, கண்வளர்ந்தருளப்புக்கதசையிலே இளையபெருமாளைப் பார்த்து "மைதிலியான குழைச்சரக்குக் கூடப்போந்தாள்; உம்முடைய உறக்கத்தையும் சோம்பலையும் வழிநடந்தத்தால் வந்த ஶ்ரமத்தையும் பொகட்டுக் காவல்சோர்வுபடாமல் நோக்குங்கிடீர்" என்று பெருமாளருளிச்செய்ய. (க) "𑌜𑌹𑍌𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌞𑍍𑌚 𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑍀𑌞𑍍𑌚 𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌞𑍍𑌚 𑌪𑌥𑌿𑌶𑍍𑌰𑌮𑌮𑍍- ஜஹௌநித்ராஞ்ச தந்த்ரீஞ்ச ப்ரஸக்தஞ்ச பதிஶ்ரமம்" என்கிறபடியே அவற்றையெல்லாவற்றையும் பொகட்டாரிறே, அவரைப் போலே உண்டாய்விட்டவளன்றிறே இவள்.

(பெண்மையும் சாலநிறைந்திலள் பேதைதான்) பர்த்ருஸம்ஶ்லேஷத்தில் அவகாஹநமுண்டாகில் ஊணுமுறக்கமும்தவிரலாமிறே. அப்பருவமல்ல கிடீரென்கிறுள். (பெண்மை) ஸ்த்ரீத்வம்; ஸ்த்ரீத்வத்தில் ஏகதேசமும் புதியதுண்டிலள். அதவா (பெண்மையும் சாலநிறைந்திலள்) பர்த்ருஸம்ஶ்லேஷ ரஸஜ்ஞாநமுண்டித்தனை, அதில்தலைநிரம்பிற்றிலள் என்கிறுள். பேரிளம் பெண்ணுன அந்நிரப்பமில்லையாகிலும், மங்கையான பருவந்தானுண்டோ வென்ன; (பேதைதான்) அதிமுக்த்தை (𑌧) யென்கிறுள்.

---

தானற்றுள்" என்னுதே, "இல்லை" என்றதுக்கு வ்யாவ்ருத்திபூர்வகம் தாத்பர்யம் (பெருமாளித்யாதி). நித்ரைதானே போயிற்றென்றுகருத்து.

ஊணும் உறக்கமும் இல்லையாகைக்கு ஸம்ஶ்லேஷாஸாநுசிந்தநமிறே ஹேது. அதுவே தா(𑌧)ரகமாகாதோவென்ன ; அதுவுமில்லை என்கிறுரென்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறுர் (பர்த்ருஸம்ஶ்லேஷத்திலித்யாதி). "பெண்மையும்" என்ற ச(𑌚)காரத்தால் இதுவும் தா(𑌧)ரககோடி கடிதமாக வேணுமென்றுகருத்து. (ஸ்த்ரீத்வம்) என்றது- தத்ப்ரயுக்தமான ஸம்ஶ்லேஷமென்றபடி. "சால" என்றதுக்கு நிறைந்திலாமையில் மிகுதியாகக்கிழருளிச்செய்து, நிறையிலே மிகுதியாக வருளிச்செய்கிறுர் (அதவேத்யாதி). "பேதை" என்றதுக்கு முந்தினபக்ஷத்தில் ஹேதுவாகை ஸ்பஷ்டமென்று திருவுள்ளம்பற்றி இரண்டாம்பக்ஷத்துக்குச்சேர அவதாரிகை (பேரிளமித்யாதி). "பேதை, பெதும்பை, தெரிவை, அரிவை, மடந்தை, மங்கை, பேரிளம்பெண்" என்கிற எழும் பருவத்திலும் முற்றுப்பருவமென்றுகருத்து.

---

(க) ரா-அயோ-ருகூ-ந.

(கண்ணனூரித்யாதி) இப்பருவமாயிருக்கிற இவளுக்கு தா (ர)ரக போஷகங்கள் வேண்டாவோ, இவையிருந்தபடி யென்னென்ன; (கண்ணபுரந்தொழும்) இது இவளுடைய தா (ர) ரகம். அது என்னம்புது, ஒருவரைத்தொழுதாளென்றால் தா (ர) ரகமாமோவென்ன; (கண்ணனூர்) (க) "எல்லாம் கண்ணன்" என்கிற க்ருஷ்ணனன்றோஉள்ளேநின்றான்; (உ) [பத்தாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:-பத்தாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:] என்றிறே ஶ்வேதத்வீபவாஸிகள் இருப்பது (ங)"தோற்றோம்" என்றும், (ச)"ஜிதம்"என்றும்,அஞ்ஜலிமாறுதே இவர்களிருப்பது. அஞ்ஜலிமாறுவது ஸந்நிதிமாறிலிறே, அஞ்ஜலியாலேஸர்வாவயவங்களும் புஷ்டமாயிறே அவர்களுக்கிருப்பது;

(கார்க்கடல்வண்ணர்மேலெண்ணம்) அவ்வூருக்குள்ளே ஒரு கடல் தேங்கினாப்போலே நிற்கிற க்ருஷ்ணனுடைய வடிவையணைக்கவேணுமென்று மநோரதியாநின்றாள். அவனூரைத் தொழுகையாலே ஊண்போயிற்று. அவன்வடிவை மநோரதிக்கையாலே உறக்கமும்போயிற்றுஇவளுக்கு. (பெண்மையும்சாலநிறைந்திலள்,பேதைதான், எண்ணமிவட்கிது) - ஆரூடயோகராயிருப்பார்க்குப் பிற

பேரிளம்பெண்ணாகில்வ்ருத்தஸம்ஶ்லேஷரஸாநுஸந்தநம்-தாரகமாகலாம்; அதுவன்றாகில் பேதைத்தனத்துக்கு அடுத்ததாரகாதிகள் வேண்டியிருக்க, அதுவுமில்லை, இதுவுமில்லை என்றால், உல்லோகமாயன்றோ யிருக்கிறதென்னுமபிப்ராயேணப்ரஸ்நத்தைக்கிளப்புகிறார் (இப்பருவமித்யாதி). தொழுகைதாரமாகக் கண்டவிடமுணடோவென்ன (பத்தாஞ்ஜலிபுடா இத்யாதி).

ஸந்நிதியுண்டாகில் தொழுகை தாரகமாகலாம், பிரிவில் தாரகமானவழி யென்னென்னும் ப்ரஸ்நத்தில், "கார்க்கடலித்யாதி" என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறார் ( அவ்வூருக்குள்ளேயித்யாதி ). இத்தால் மாநஸாநுபவத்தாலே ஸந்நிதியுண்டானாப்போலேயிருக்குமென்றுகருத்து. "பேதைதான்" என்னாநின்றாய்; எண்ணம் அவன்மேலேயாய், உறக்கமற்றாளென்னாநின்றாய் ; இது பேரிளம்பிள்ளை; இப்படியன்றோ, இவைசேரும்படியென்னென்னும் ப்ரஸ்நத்திலே "இவட்கிதுவென்கொலோ" என்கிறாளென்று விவக்ஷித்துத்தாத்பர்யம் (பெண்மையுமித்யாதி). (ரு)"நும்மடியாரெல்லாரோடுமொக்கவெண்ணியிருந்தீர்" என்கிறபாசுரத்தையுட்கொண்டு "இவளுக்கு" என்று வ்யாவர்த்த்யங்களைக் காட்டாநின்றுகொண்டு மேல்வாக்யத்தை விவரிக்கிறார் (ஆரூடயோகரா

(க) தி-வாய்-கூ-எ-க. (உ) பாரத- (ங) தி-வாய்-உ-க-எ.
(ச) ஜித-க-க. (ரு) தி-மொ-ச-கூ-கூ.

க்குமளவும் இவளுக்குப்பிறந்தபடியென். இதென்ன ஆச்சர்யமென்கிறாள். (என்கொலோ) ஆரூடயோகிகளான ருஷிகள்பக்கல் கண்டிலோம். ஸாக்ஷாத்கரித்து அநுபவித்த ஆழ்வார்பக்கல் கண்டிலோம். இருபத்தைந்து ஸம்வத்ஸரம் பகலோடு இரவோடுவாசியற அறுபது நாழிகையுங்கூடவிருந்து அநுபவித்து, பின்பு பத்துமாஸம் பிரிய க்ஷமையானாளிறே பிராட்டியும். அவளுக்கும் இதுகண்டிலோம், பருவமிதுவாவதாம்; தா (ஞ) ரகபோஷகங்கள் இவையாவதாம். இதென்ன ஆச்சர்யமிருந்தபடி யென்கிறாள். .... .... .... (ச)

மூ.—கண்ணனூர் கண்ணபுரம் தொழுங்காரிகை
பெண்மையும்தன்னுடையுண்மை யுரைக்கின்றாள்
வெண்ணெயுண்டாப்புண்டவண்ணம் விளம்பினால்
வண்ணமும் பொன்னிறமாவதொழியுமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ணன் | க்ருஷ்ணனுக்கு | வெண்ணெய் | வெண்ணெயை |
| ஊர் | வாஸஸ்தாநமான | உண்டு | (களவாய்) அமுது செய்து |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை | ஆப்புண்ட | கட்டப்பட்ட |
| தொழும் | தொழுதத்தால்(வந்த) | வண்ணம் | (அவன்)ஸ்வபாவத்தை |
| காரிகை | அழகுடைய (பெண்) | விளம்பினால் | சொன்னால், |
| தன்னுடை | தன்னுடைய | பொன்நிறமாது | பொன்னிறமாயிருக்கிற |
| பெண்மையும் | பெண்மையையும் | வண்ணமும் | தேஹசோபையும் |
| உண்மை | வாஸ்தவத்தையும் | ஒழியுமே | போய்விடுகிறது. (ரு) |
| உரைக்கின்றாள் | சொல்லாநின்றாள்; | | |

அவ.—அஞ்சாம்பாட்டு. "பெண்மையும் சாலநிறைந்திலள்"

யித்யாதி). ஆழ்வாருக்குக் கண்ணன் தா (ஞ) ரகாதிகளானனித்தனே. கண்ணனிருந்தவூரைத்தொழுகையே தா(ஞ)ரகாதிகளாகையாலே வ்யாவ்ருத்தி சொல்லலாமென்று திருவுள்ளம். ... ... ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (கண்ணனூரித்யாதி) "சிலையிலங்கு" இத்யாதிகளாலே நாம் இவளை அடக்கி எம்பெருமானோடேசேர்த்து ஸம்ஶ்லேஷத்தை வர்த்தி(ர்)ப்பித்துவிடலாம். "பெண்மையும் சாலநிறைந்திலள்" என்றுசொல்லுகையாலே ஸம்பாவிதமான ஸம்ஶ்லேஷரஸங்களை வெளியிடாதே அடக்கத்தோடேயிருக்கிறாளோ என்று இவர்கள் கேட்க; என்னோடேதானே அவற்றின் படிகளை வாய்விடுகிறாள், இவளுக்கு இனிஅடக்கமுண்டோவென்கிறாளென்று ஸங்கதியை ஸ்ப்புரிப்பிக்கிறாள் (பெண்மையுமித்யாதி). "பெண்மை" என்

என்றிறே கீழ்ப்பாட்டில் சொல்லிற்று. அதுகாலாந்தரேண உண்டாகிறது. அதுக்கடியான பெண்மைதானுண்டோவென்ன; அதுதானே யில்லையென்கிறாள். நீ எதுகொண்டறிந்தாயென்ன; கரணத்ரயங்களும் அவனைநினைத்தமாத்ரத்திலே விக்ருதமாகாநின்றன; இவளுக்கு என்ன பெண்மையென்கிறாள்.

வ்யா.—(கண்ணனூர் கண்ணபுரம்தொழும்) உக்தத்தை அநுபாஷிக்கிறாள். முன்பே சொன்னேனிறே. அவனைத்தொழுமளவேயன்றியே அவனூரைத்தொழுகிற இவளுக்கு என்ன பெண்மையென்கிறாள். (கண்ணனூர் கண்ணபுரம்) ஶ்ரீமதுரை, திருவாய்ப்பாடி, ஶ்ரீமத் த்வாரகை யென்கிறஇவையெல்லாம் "கண்ணன்விண்ணூர்" என்கிற ப்ரமபதத்தோபாதி கலவிருக்கையிறே. தா(ஞ)ரகியதியோபோதி, பிறந்ததும் ஓரிடத்திலேயாய் வளர்ந்ததும் அங்கேயாயிறே சக்கரவர்த்தித் திருமகனிருப்பது. அதுக்கு ப்ரதிசிரஸ்ஸாயிறே இவனுக்கிருப்பது; பிறந்தவன்றே போரவேண்டும்படியிறே ஊர்களின் ஸ்வபாவமிருப்பது; அவற்றை விட்டுத் திருக்கண்ணபுரத்தே புகுந்த பின்பு இத்தையேயாயிற்று ஊராகநினைத்திருப்பது. (தொழும்) அவனுக்கு அவ்வூர் நிரூபகமானாப்போலேயாயிற்று, இவளுக்கும் தொழுகையே நிரூபகமாயிருக்கிறபடி. (க) "प्राञ्जलिं प्रह्वमासीनम्- ப்ராஞ்ஜலிம்ப்ரஹ்வமாஸீநம்" என்கிறபடியே பெருமாள் அந்தஃபுரத்தினின்றும் புறப்படுகிறபோது, இரண்டாம் வாசலிலேநின்ற இளையபெருமாள், தலைமேல்வைத்தகையும், முக்கு

றது-வ்ருத்தஸம்ஶ்லேஷாஸகோ(ஞ)பகம்."விளம்பிறல்" என்றது-வாக்விகாரம்சொன்னது மாநஸவிகாரத்துக்கும் உபலக்ஷணமென்றருளிச்செய்கிறார் (கரணத்ரயங்களுமித்யாதி).

கண்ணனூர் ஶ்ரீமதுரைமுதலானதன்றோ? கண்ணபுரமானபடி யென்னென்ன; (ஶ்ரீமதுரையித்யாதி - நினைத்திருப்பதென்னுமளவும்). (கலவிருக்கையிறே) என்றது - கொலுச்சாவடிபோலே சிலகாலமிருந்து போமித்தனையிறேயென்கை. இப்படி பலவூர்களிருப்பானென்னென்ன; (தாரகியதியித்யாதி). (ப்ரதிஶிரஸ்ஸா) எதிர்த்தலை. கண்ணன் ஸ்வபாவத்தால் தானன்றியே, அவ்வூர்களின் ஸ்வபாவத்தாலும் பலவாக வேண்டிற்றென்கிறார் (பிறந்தவித்யாதி).

(க) ரா-அயோ-கரு-உரு.

றுக்கிட்ட உடம்புமாய் பெருமாள்கண்படும்படி நின்றாரிறே. அப்படியேயிறே இவள்கையும்அஞ்ஜலியுமாயிருப்பது. "காரிகை" என்று அழகு. இவ்வழகைக்கண்டால், அவன்மேல்விழுந்துகையும் அஞ்ஜலியுமாய் நிற்கவன்றோவடுப்பது. அத்தலை இத்தலையாயிருக்கிற இவளுக்கு என்ன பெண்மையென்கிறாள். இத்தால் காயிகவ்யாபாரம் சொல்லிற்று;

(பெண்மையித்யாதி)வாசிகவ்யாபாரம்,சொல்லுகிறாள். (பெண்மையும் தன்னுடை யுண்மையுரைக்கின்றாள்) பெண்மை-ஸ்த்ரீத்வம். அதாகிறது-ஏதேனும் ஓரவஸ்த்தை பிறந்தாலும் உயிர்த்தோழிக்குங்கூட மறைக்கும்படியிறேயிருப்பது. அவளும் இவளுடைய வ்யாபாரங்களைக்கண்டு, "இவளுக்குஉடுகிறதசைஇதுவாகாதே" என்றறியுரிந்தனையிறே; ஆயிருக்கப் பெற்றதாயான எனக்கும் வாய்விடாநின்றாள்; இவளுக்கு என்னபெண்மையென்கிறாள். (தன்னுடையுண்மையுரைக்கின்றாள்) தன்னுடைய உள்ளிலுண்டான வ்யாபாரம்; அதவா, தன்னுடைய "உண்மை" உண்டு-ஸத்பாவம், அத்தைச்சொல்லாநின்றாள். (க) "ஆசசக்ஷே உத ஸத்பாவம் - ஆசசக்ஷேதஸத்பாவம்" இத்யாதி. ஸ்ரீ பரதாழ்வான் வாரா நின்றானென்று ஸ்ரீ குஹப்பெருமாள் கேட்டவநந்தரம், இளையபெருமாள் செய்தத்தை யெல்லாம் சொல்லத்துடங்கினார். "வந்தபோது செய்யும்படி சொல்லுகிறேன், ஓடம்நின்றதே, கோலிருந்ததே, தானும், தன்பரிகரமும் அக்கரைப்படும்படி காண்கிறேன்" என்று ஆக்ரஹசித்தனாயிருந்தான். அநந்தரம் ஸுமந்த்ரனுள்ளிட்டார் வந்து இளைய

"பெண்மையும்" என்ற ச (ஃ) காரம் விரோதத்திலேயாய், "உரைக்கப்போகாதத்தையும் உரைக்கின்றாள்" என்றாய், அத்தையருளிச் செய்கிறார் (அதாகிறதித்யாதி). பெண்மை யாவது-ஸம்ஶ்லேஷரஸஜ்ஞதையாய், அத்தையும், ததநுகுணமான தன்னுடைய ஸத்வருத்திவிசேஷங்களாகிற உண்மையும் - சொல்லத்தக்க விஷயமல்லாதாக்கி, கேளாதிருக்கத்தானே யுரைக்கின்றாளென்றது கூடுமோவென்ன; கானவரான கு (ஃ) ஹப்பெருமாள், ரகுகுலத்தில்பிறந்து நாகரிகரான பரதாழ்வானுக்குத்தாமே உரைத்தாப்போலே என்றத்தை ஸம்வாதமாகவருளிச்செய்து வ்யாக்க்யாநம் செய்கிறார் (ஆசசக்ஷயித்யாதி). "அத" என்றதுக்கு - ஆநந்தர்யமர்த்தமாகையாலே பூர்வவ்ருத்தத்தை யருளிச்செய்கிறார் (வந்தபோதித்யாதி). "மஹாத்மநோ" என்

(க) ரா-அயோ-அகூ-க.

பெருமாள் ஸ்வபாவம் போலே காண் பரதாழ்வானுடைய ஸ்வபாவு மிருப்பது. அவனை நீ காணவேணுங்காணென்ன; இவனும்போய்க் கண்டவநந்தரம் "இவருடைய ஸ்வபாவமிருந்தபடியென்" என்று ஆஶ்சர்யப்பட்டு இவருக்கு நம்மால் கொடுக்கலாம் உபஹாரமென்னென்று பார்த்து, இவருக்கு ஸத்ருஶமான உபஹாரம் - இளைய பெருமாள் ஸ்வபாவங்களா மித்தனையென்று அவற்றைச்சொல்லத் தொடங்கினான்; [ஆசசக்ஷே ஸத்பாவம்] ஸத்பாவமாகிறது-ஸத்துக்களுடையஆசாரம், (க) 𑌸𑌚𑍍𑌛𑌬𑍍𑌦𑌸𑍍𑌸𑌾𑌧𑍁𑌵𑌾𑌚𑌕𑌃- ஸச்சப்தஸ்ஸா துவாசகஃ" (உ) "𑌸𑌾𑌧𑌵𑌃 𑌕𑍍𑌷𑍀𑌣𑌦𑍋𑌷𑌾𑌸𑍍𑌤𑍁-ஸாதவஃக்ஷீணதோஷாஸ்து" என்கிறபடியே ஸத்துக்களாவார் க்ஷீணதோஷரிறே. [பாவம்] ஆசாரம். ஒருவன்-அர்த்தவான், அபிஜாதன், வித்வான், என்றறிவது-அவர்களநுஷ்ட்டாநம் கொண்டிறே. அப்படியேயிறே இவருடைய அநுஷ்ட்டாநமும். "பெருமாள் கண்வளர்ந்தருளுகைக்குப் புல்கள் அறுப்பது. படுக்கை படுப்பது. தாமரைஇலையைப்பறித்துத்தண்ணீரைமுகந்து திருவடிகளை விளக்குவது, பின்னையும் தண்ணீரைமுகந்து அமுது செய்யப் பண்ணுவது, சேஷித்தத்தை பிராட்டியை அமுதுசெய்யப்பண்ணுவது. கண்வளர்ந்தருளப்பண்ணி, கையும் வில்லுமாய்க் கொண்டு நம்மையும்கூட அசிர்த்து நோக்குவதாய்க் காணுமவருடைய ஆசாரமிருந்தபடி" என்று அவர் வ்ருத்தாந்தத்தைச் சொல்லத் தொடங்கினான். [𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 - லக்ஷ்மணஸ்யமஹாத்மநஃ] கடலைக் கையாலே இறைக்கத்தொடங்கினான். [லக்ஷ்மணஸ்யமஹாத்மநஃ ஸத்பாவம்-அப்ரமேயாய பரதாய-ஆசசக்ஷே] கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லத்தொடங்கினான். பரதாயாப்ரமேயாய ஆசசக்ஷே] சேஷபூதனானால் "நான்பணிசெய்யக்கடவேன்" என்று சொல்லியோ பணிசெய்வது; அதுகிடக்க; (ங) [𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 - அஹம்ஸர்வம்கரிஷ்யாமி] சொல்லிற்றெல்லாம் செய்யக்கடவேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி "ராஜ்யத்திலே இரீர்" என்ன;

---

றதுக்குத் தாத்பர்யம் (கடலையித்யாதி). "அப்ரமேயாய" என்றதாலே, "மஹாத்மா" என்று பரிச்சேதிக்கக் கூடாமையை விவக்ஷித்தருளிச் செய்கிறார் (கழியினித்யாதி). இளையபெருமாள் காட்டிலே ஸகலவிதகைங்கர்யங்களும்பண்ணியிருக்க, அவரைக் கழிஸ்தானேயாக்கப்போமோவென்னவரு

---

(க) (உ) (ங) ரா-அயோ-ஙக-உரு.

காட்டேனென்று பின்போகை-சேஷத்வக்ருத்யமோ? நெருப்பிலே புகச்சொன்னாராகில் அத்தைச்செய்தல், அதில் நன்றும்படி ராஜ்யத்திலேயிருக்கச் சொன்னாராகில், அத்தைச்செய்தல்; பின்போகச் சொன்னாராகில், அத்தைச் செய்தல்; இப்படி சொல்விற்றுச் செய்கையன்றோ சேஷத்வக்ருத்யம். [குஹஃ] நெடுநாள் பரிசயித்த பரதனுக்கு ஒருநாள் சீலித்த குஹன் சொல்லும்படியாவதே; இன்னான் இன்னார்க்குச் சொல்லுகை யென்றில்லையாகாதே; கற்றவர்களாயிக்கனையாகாதே வேண்டுவது. [ग्रन्थ- கஹநகோசரஃ] "காட்டில் மரத்திலும் மட்டையிலும் பழகிப்போந்த இவன் இளைய பெருமாள் படிகளைப்பேசிப் போந்தபடி கண்டதே" என்று ருஷி கொண்டாடுகிறான். அங்ஙனன்றிக்கே பெருமாளுடைய வ்யதிரேகத்தில் தூற்றிலே தலைமடுத்துக்கொண்டு கிடந்தவன், பரதனைக் கண்டவாறே புறப்பட்டா னென்னுதல்.

(வெண்ணெயுண்டித்யாதி) வாயாலே சொல்லுமளவேயோ? ஸகல கரணங்களாலும் சொல்லாநின்றாள், இவளுக்கென்ன பெண்மை யென்கிறாள். கீழ்ப்பாட்டிலே "கார்க்கடல் வண்ணர்மே லெண்ணம்" என்றவன் வடிவோடே அணையவேணுமென்று மநோரதித்து *முலையிலங்கு பூம்பயலை முன்போடவிறே இவளிருக்கிறது. "அவனுகிறான், ஒருத்தியுடைய உடைமையிலே ச(ப)பலனாய் அது கிட்டாமையாலே களவிலே இழிந்து, அது தன்னிலும் வாயது கையதாக அகப்பட்டு (க)"கட்டுண்டான்காண்"என்று சிலர்சொன்னால், "அங்ஙனே ஒருஸ்த்ரீ உடைமையிலே சபலனவானொருவனைப்பெற்றோமிறே. அது கிட்டாதென்று விட்டுப்போகையன்றிக்கே,

---

ளிச்செய்கிறார் (சேஷபூதனித்யாதி). (பின்போகச்சொன்னாராகில்) என்றது-மீண்டெழுந்தருளித்தாம் அபிஷித்தராய்ப்போகச் சொன்னாராகிலென்றபடி. (சீலித்த) கண்டவென்கை.

கேவலம் வாக்வ்யாபாரமன்றிக்கே, மநஸ்ஸாலும் வெளியிடுகிறானென்னக்கோலி, அதுக்கு அடையாளமாக வைவர்ண்யமும் போகக்கண்டோமென்றொன்று விவக்ஷித்து, கீழோடுமேலெல்லாம்கூட்டித்தொகுத்தபாவத்தை யருளிச்செய்கிறார் (ஸகலேத்யாதி). வைவர்ண்யம் வருகைக்கு மூலத்தைக் காட்டுகிறார் (கீழித்யாதி). மகளுடைய ஸந்தோஷ ப்ரகாரந்தன்னை விவரிக்

---

(க) தி-மொ-கக-ரு-ரு.

ளவிலே இழியப்பெற்றோமே, அது தன்னிலும் அகப்பட்டுக்கட்டுண்ணும்படி எளியனாகப்பெற்றோமே" என்றவ்வபதானங்களைக்கேட்ட மாத்ரத்திலே அவ்வுடம்போடே அணைந்தால் பிறக்கும் ஆஸ்வாஸங்களடையப் பிறந்து ஸந்துஷ்டையானாள். அவாப்தஸமஸ்தகாமனானவன், ஒருத்தி உடைமையை ஆசைப்படுவதாம், ஸர்வசக்தியானவன் களவிலேஇழிவதாம்; அது தன்னிலும் அகப்பட்டுக் கட்டுண்ணும்படி எளியனாவதாம்; இனிநமக்கொரு குறையுண்டோ வென்கிறாள்; .... .... .... .... .... .... (ரு)

கூ.—வடவரைநின்றும் வந்தின்றுகணபுரம்
இடவகைகொள்வது யாமென்றுபேசினாள்
மடவரல்மாதரென்பேதை யிவர்க்கிவள்
கடவதென் கண்டுயிலின்றிவர் கொள்ளவே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| யாம் | நாம் |
| வட | வடக்கிலுள்ள |
| வரைநின்றும் | திருமலையில்நின்றும் |
| வந்து | வந்து |
| இன்று | இன்றைக்கு |
| கணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| இடவகை | வாஸஸ்தாநமாக |
| கொள்வது | கொள்ளுகைக்காக (வந்தோம்), |
| என்று | என்று |
| பேசினாள் | சொன்னாள் ; |
| மடவரல் | ப(்ரு)வ்யையாய் |
| பேதை | பா(லை)லையாய் |
| என் | என்னுடைய |
| மாதர் | பெண்ணான |
| இவள் | இவள் [இ |
| இவர்க்கு | இந்த எம்பெருமானுக் |
| கடவதென் | என்ன செய்யப்ராப்தி யுண்டு ; |
| இவர் | இந்தஎம்பெருமான் |
| இன்று | இன்றையதினம் (இ ளுடைய |
| கண்டுயில் | நித்ரையை |
| கொள்ளவே | கொள்வதற்குப்ரயோஜநமென். (கூ) |

அவ.—ஆறாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே "தன்னுடையுண்மையுரைக்கின்றாள்" என்றும், "வெண்ணெயுண்டாப் புண்டவண்ணம் விளம்பினால் 'வண்ணமும் பொன்னிறமாவதொழியும்'' என்றும் சொன்னாய். அதிலுண்மை எது ; பொன்னிறம்போனபடியென்னெ

கிறார் (அவாப்தேத்யாதி). ... ... ... ... ... ... (ரு)

அரு.—ஆறாம்பாட்டு. (வடவரையித்யாதி) "உண்மை" என்றது ஸத்வ்ருத்திவிசேஷம். அந்தஸத்வ்ருத்திதானும் ப்ரகாரப்ரகாரிபாவாநுஸந்தாநத்தில் உறைப்பாலே அபேதாநுஸந்தாநமென்று விவக்ஷித்து விரஹதசை

ன்ன; அத்தைச்சொல்லுகிறாள். கண்ணனூரென்றாளிறே கீழ்; அந்தக் கண்ணனூரான திருவாய்ப்பாடியில் பெண்களுடைய (க) [गुरवः किं करिष्यन्ति दग्धानां विरहाग्निना - குரவ: கிம்கரிஷ்யந்தி தக்தாநாம் விரஹாக்நிநா] என்று - "இக்குருக்கள் நம்மைச் செய்யப்புகுகிறதென்; விரஹாக்நியாலே வெந்துகிடக்கிறநம்மை ஆற்றி ஒருகுடம் நீர்சொரிவார்களோ" என்று பந்துவர்க்கங்களை நேராகவிட்டு க்ருஷ்ணனை அநுபவிக்கக் கடவதாக யமுநாதீரத்தேற வந்தார்கள்; அங்கு க்ருஷ்ணனைக்கண்டிலர்கள்; பின்பு அநுகாரத்திலே இழிந்து, "நான் நடவாநின்றேன், நீ நடைச்சக்ரவத்துப் பிடித்துக்காண் என்பது; (உ) [दुष्टकालिय तिष्ठात्र कृष्णोऽहमिति चापरा] துஷ்டகாளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதிசாபரா] என்று - "பாரடா காளியனே! நான் உன்மேலேஏறி ஆடப்புகாநின்றேன்" என்பது-இப்படிகளாலே அநுகரித்தார்களிறே. இவளும்திருவாய்ப்பாடி-திருக்கண்ணபுரமாகவும், க்ருஷ்ணன் - சவரிப்பெருமாளாகவும், அச்சவரிப்பெருமாள்-தானுகவும், அநுகரித்துப்பேசுகிறாள். (ங) "सर्वं खल्विदं ब्रह्म -ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம" (ச) "अहं ब्रह्मास्मि-அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்று-தான் அவனாய், அவன்தானாயிறேயிருப்பது. இதிறே இவளுடையவைதிக லோகாயதமதமிருக்கிறபடி. வேறே அநுகரித்தாரும் சிலருண்டிறே. (ரு) "கடல்ஞாலம் செய்தேனும்யானேயென்னும்" என்று.

---

யில் அவ்வநுஸந்தாநம்வர ப்ரஸக்தியுண்டோவென்ன (கண்ணனூரித்யாதி). திருக்கண்ணபுரத்தைக் கண்ணனூராகவே தொழுவாளாகையாலே, தான் கோபிகாவஸ்தாபந்நையாயும், சவரிப்பெருமாளை க்ருஷ்ணனாகவும், ஊர்திருவாய்ப்பாடியாகவும், அநுஸந்தித்திருந்தவளாகையாலே அந்தப்ரஸங்கத்தில் அவர்களைப்போலே இப்பாட்டிலநுகரித்தபடி சொல்லுகிறதென்று கருத்து. "இவள் அநுகரிக்கைக்கு மூலம் - ப்ரகார்ப்ரகாரிபாவத்தாலுண்டான ஐக்யம்" என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸர்வமித்யாதி). தேஹமே ஆத்மாவென்ற சார்வாகனைப்போலே அவனேதானுகப்ரமித்தாளோவென்ன (இதிறேயித்யாதி). அநுகரிக்கிறாளாகில் ஆழ்வாரைப்போலேகாரணவஸ்துவை அநுகரியாமல், அர்ச்சாவதாரத்தை அநுகரிப்பானென்னென்ன (வேறேயித்யாதி). முன்னும்பின்னும் ஏகரூபேணவிருக்க, நடுவே அநுகாரம் பிறந்ததென்னப்

---

(க) வி-பு-ரு-கஅ-உஉ. (உ) வி-பு-ரு-கங-உஎ. (ங) சாந்தோ-ங-கச-க.
(ச) ப்ருஹ-ங-ச-கO. (ரு) தி-வாய்-ரு-கூ-க.

அவளைப்போலே ஜகத்காரணரூபியைப்பற்று மவளன்றிறே இவள். அர்ச்சாவதாரரூபியையிறே இவள்அநுகரிப்பது. இவ்வர்ச்சாவதார ரூபத்தால் பிறக்கும் அநுபவமொழிய, அந்தந்த அவதாரங்களால் பிறக்குமநுபவத்தை நாய்க்கிடவென்றிருக்குமவளிறே இவள். ஆப்பான்திருவழுந்தூரரையரும், ஆழ்வார்திருநறையூரரையரும், இப்பாட்டைஅநுஸந்தித்து "இப்பாட்டுக்கு ஒருசேர்த்தி கண்டிலோம்" என்று பட்டர்பாடேவந்து, "இப்பாட்டிருக்கிறபடியென்" என்று கேட்க; "மகளநுகாரத்தைத் தாய் அநுபாஷிக்கிருள்" என்றருளிச் செய்தார். ஆரூடயோகராயிருப்பார் சிலர்வந்தால் (க) "యోత్ర భవా౯ యన్నిమిత్తంవా యదాగమనకారణమ్- யோபவாந்யந்நிமித்தம் வாயதாகமநகாரணம்" என்கிறபடியே "நீயார், வந்ததெங்குநின்றும்" என்று கேட்கக்கடவதிறே. அப்படியே "நீஎங்கு நின்றும் வந்தது, வந்த காரணமேது" என்ன; "வந்தது இன்னிடத்தில்நின்றும், வந்தகார்யம் இன்னது" என்கிருள்.

வ்யா—(வடவரைநின்றும்வந்து) வடக்கில்திருமலையில்நின்றும்

---

போமோவென்ன; இதுஸம்ப்ரதாயஸித்தமென்று ஸம்வாதம் காட்டுகிருர் (ஆப்பானித்யாதி). அர்ச்சாவதாரத்தை அநுகரிக்கிருளாகில், "வடவரை நின்றேனும் யானேயென்னும்" "வண்டிருவரங்கனும்யானேயென்னும்" என்றாப்போலேஅநுகரியாமல், "வடவரைநின்றும்வந்துஇன்றுகண்ணபுரமிடவகை கொள்வதுயாம்" என்று அநுகரியாநின்ருன்; ஆராகிலும் கேட்டாரோவென்ன (ஆரூடேத்யாதி). "பவாந் யாத்ருசஃ, யத்ஸ்த்தாநம்வா, யந்நிமித்தம்வா-வாசப்தஸ்சார்த்தே, ஆகமநஸ்ய ப்ரயோஜநதயாகாரணஞ்ச யத்" என்று ப்ரஶ்நத்ரயம் பண்ணுவாரைப்போலே, தோழிமார்இவளுடைய பொன்னிறமொழியும்படியான வடிவில் வேறுபாடுகண்டு, "எங்கேயிருந்தெழுந்தருளிற்று, எழுந்தருளின கார்யமென், தேவரீர் ஆர்" என்ருர்கள். அதுக்கு உத்தரமருளிச் செய்கிருளாக அநுவதிக்கிருரென்று கருத்து. (வந்ததெங்கு நின்றும்) என்றவநந்தரம் "ப்ரயோஜநமென்" என்று கூட்டுவது. (அப்படி)என்றவநந்தரம் "நீர்ஆர்" என்றுகூட்டுவது. (என்ன) என்ற வநந்தரம் "நான்சவரிப் பெருமாள்" என்று கூட்டுவது.

(உ) "మాయావీ పరమానన్దం త్యక్త్వా వైకుణ్ఠముత్తమమ్॥ స్వామిపుష్కరిణీతీరే రమయాసహ మోదతే-மாயாவீபரமாநந்தம் த்யக்த்வா வைகுண்ட்ட முத்தம்।

வந்து. (க)"திருமால்வைகுந்தமே தண் திருவேங்கடமே" என்று அத்தலையைப்பற்றி வருமவளன்றேஇவள். அர்ச்சாவதாரத்தைப் பற்றுமவளிறே. அர்ச்சாவதாரத்துக்குக்கொண்டக்கோல் நாட்டின தேசமிறே திருமலை. வந்தகார்யமேதென்ன ( இன்றுகணபுரமிட வகைகொள்வது யாம்) இன்று திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம் பண்ணுவதாகக்காண்வந்தது, இதுகாண் நாம் வந்தகார்யம், இது என்னுடைய உண்மையிருந்தபடி. (என்றுபேசினாள்) "உரைக்கின்றாள்" என்றாளிறேகீழ். அத்தைப் "பேசினாள்" என்றுதாயார் சொல்லுகிறாள்.

(மடவரலித்யாதி) திருவாய்ப்பாடியில் பெண்களைப்போலேயோ? அலேவலேகளாய்ப் புறப்பட்டுப் பழிதூற்றி அநுகரித்தவர்களைப்போலேயோ? இவள் பந்துக்கள் சொன்னத்தைச்செய்துபோந்தவளன்றோ? (மடவரல்மாதர்) ப(ஃ)வ்யையானபெண். (என்பேதை) பந்துக்களுக்கு பவ்யையாய்ப் போந்தாளென்னுமளவேயோ? பெற்றெடுத்த என்வார்த்தையல்லதறியாதவளன்றோ?. (பேதை) ப்ராப்த யௌவனையாகில் என்வார்த்தை கொள்ளாதொழியவும் கூடுமிறே; பெற்றதமப்பனுக்கும் பர்த்தாவுக்கும் வாசியறியாத பருவம்கிடீர்

ஸ்வாமிபுஷ்கரிணீதீரே ரமயாஸஹமோததே" என்று அதுக்கும் அடியுண்டாயிருக்க "அங்குநின்றும்" என்பானென்னென்ன (திருமாலித்யாதி). ஆகில் திருவரங்கத்திலுமோவென்ன; (அர்ச்சாவதாரேத்யாதி). (உ) "செஞ்சொற்கவிகாள்" என்கிற திருவாய்மொழியில் நித்யஸூரிகளுக்கு ஆழங்கால் படாமைக்கு உபதேசிக்கும்போது மற்றும் திவ்ய தேசங்களிருக்க, தெற்குத் திருமலையில் ஸௌசீல்யத்தையிறே ஆழங்காலாக வருளிச்செய்தது ; அப்படியேவடமலேயும் ஈகானமும் வாநரமுமானவற்றுக்கும் முகங்கொடுக்குமிடமாகையாலே அச்சிலத்தில் ஆழங்கால்பட்டு மற்றொன்றைச் சொல்லாளென்று கருத்து. (என்னுடைய உண்மை) என்றது- தன்பெண் தோழிமாரைக் குறித்துச்சொன்னது. இத்தால் நீயாரென்னும் ப்ரஶ்நத்துக்கு உத்தரம்சொன்னபடியாயிற்று.

இப்படி (ங) "[illegible] குரவ: கிங்கரிஷ்யந்தி" என்று புறப்பட்டுப்போய் அநுகரித்தவர்களைப்போலே அநுகரித்தாளாகில், இனி நீ கைவிடுத்தனையன்றோ வென்னும் சங்கையிலே, "மடவரல்" இத்யாதி என்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி). விவரணம் (அலவலேயித்யாதி). (தனிசு)கடன். (பணயம்)பிச்சை.

(க) தி-வாய்-க௦-எ-அ. (உ) தி-வாய்-க௦-எ. (ங) வி-பு-ரு-கஅ-உ௨.

இவளுக்கு. (இவர்க்கு) அத்திருவாய்ப்பாடியில்பெண்களோடே அநுபவித்துவைதக்த்யமூர்த்தாபிஷிக்தராயிருக்கிற இவர்க்கு. (இவள்) ஆருருக்ஷுவாயிருக்கிறஇவள். (கடவதென்) தனிசுடையார் பணயமெடுப்பாரைப்போலே இவள் கண்ணுறக்கத்தைக் கொள்ளுகைக்கு என்னப்ராப்தியுண்டு.

(கண்டுயிலின்றிவர் கொள்ளவே) அவர்களைப் போலே அலேவலையானால், பின்புவேணுமாகில் கொள்ளுகிறார்; இன்றுஇவள் கண்ணுறக்கத்தைக் கொள்ளுகைக்கு என்ன ப்ரயோஜநமுண்டென்கிறாள். கீழ் "வண்ணமும் பொன்னிறமாவதொழியும்" என்றாள்; "அந்தபொன்னிறமாவதான து,ஸ்வாபாவிகமான தன்நிறமாவதேது" என்ன; (க) "[Grantha] -யஆத்மநிதிஷ்டந், ஆத்மநோऽந்தர:" (உ) "[Grantha]-யஸ்யாத்மாசரீரம்" என்று ஶ்ருதிகள் சொல்லுகிறபடியே சரீரசேஷத்வமும், சேஷசேஷிஜ்ஞாநமும், அந்தஜ்ஞாநத்தால் பிறக்கும்ஆநந்தமும், ஆக சேஷத்வஜ்ஞாநாநந்தங்கள்-தன்நிறமாகிறது ; பொன்நிறமாகிறது-"தேவோऽஹம்,மநுஷ்யோऽஹம்" என்று ப்ரவிஷ்டசரீரங்களிலே ஆத்மபுத்தியைப் பண்ணி (ங) "[Grantha]- து:க்காஜ்ஞாநமலாதர்மா:" என்கிற தர்மங்களையேறிட்டுக்கொள்ளுகை. ஆரூடயோகராயிருப்பார்க்குக் கிட்டாத ஸ்வபாவங்களுடைய ஆருருக்ஷுவாயிருக்கிற இவளுக்குப்பிறப்பதே. இதோராஸ்சர்யமிருந்தபடி யென்னென்கிறாள். .... .... .... .... .... .... .... (சு)

மூ.—தரங்கநீர் பேசினும் தண்மதிகாயினும்
இரங்குமோ வெத்தனைநாளிருந்தெள்கினள்
துரங்கம் வாய்கீண்டு கந்தானதுதொன்மையூர்
அரங்கமேயென்ப திவள்தனக்காசையே. .... .... (எ)

---

பொன்னிறம் போம்படி யென்னென்னும் ப்ரஸ்நத்துக்கு "கண்டுயில்கொள்ளுகை" என்றது உத்தரமென்று விவக்ஷித்து ஸ்வாபதேசம் (இழித்யாதி). துயில்கொண்டாளென்கையாலே தேஹாத்மப்ர(ஶ்ர)மாதிகளாகிற அஜ்ஞாநத்தைப்போக்குகையாலே பொன்னிறம் போனபடி சொல்லிற்றாய்த்தென்றுகருத்து. பாட்டுக்கெல்லாம் பிண்டிதார்த்தமருளிச் செய்கிறார் (ஆரூடேத்யாதி). ... ... ... ... ... ... (சு)

---

(க) ப்ருஹ-ரு-எ-உஉ. (உ) ப்ருஹ-ரு-எ-உஉ. (ங) வி-பு-சு-எ-உஉ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தரங்கம் | திரைக்கிளப்பத்தை யுடைய | தரங்கம் | அஸ்வரூபியான கேசி யினுடைய |
| நீர் | ஸமுத்ரமானது [ம், | வாய் | வாயை |
| பேசினும் | கோ (ஷ) ஷிக்கிலு | கீண்டு | கிழித்து (அதனால்) |
| தண் | குளிர்ச்சியையுடைய | உகந்தான் அது | களித்த கண்ணனுக்கு |
| மதி | சந்த்ரன் | தொன்மை | பழையதான |
| காயினும் | காய்ந்தாலும் (இவள்) | ஊர் | கோயிலான |
| இரங்குமோ | இளைக்குமோ? | அரங்கமே என்பது | திருவரங்கமென்பதே |
| எத்தனைநாள் | எந்நாளாக | இவள் தனக்கு | இவளுக்கு |
| இருந்து | (இதுகளில்) இருந்து | ஆசையே | ஆசையாயிருக்கிறது. (எ) |
| என்கிறாள் | ஈடுபட்டாள்; | | |

அவ.—ஏழாம்பாட்டு. (தரங்கமித்யாதி) "இவர்க்கு இவள் கடவதுஎன்" என்று-இவள் கண்ணுறக்கத்தை இவர்கொள்ளுகைக் குப்ராப்தியுண்டோவென்றாய், "இப்படி இவரோடும் இவளோடும் கொள் கொடையற்றன்றோ விருக்கிறது, கார்க்கடல் வண்ணர்மேலெ ண்ணமென்றும், கண்ணபுரந்தொழுமென்றும், கண்ணபுரமென்று பேசினளென்றும், * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் அவனேயாம்படியன்றோ அவளிருக்கிறது; அவரோடு அவளோடு ப்ராப்தியில்லையென்று சொல்லக்கடவையோ? அதுகிடக்கிடும், உன்

அநு.—ஏழாம்பாட்டு. (தரங்கநீரித்யாதி) வினவவந்தவர்கள் திருத் தாயாரைக்குறித்து நீ சவுரிப்பெருமாள்மேல் குற்றம் சொல்லியும், நறையூரர் கார்யமே நன்றாயிற்றென்றும், "உள்மெலிந்தாளிது வென்கொலோ, கோவு படுமிவளுக்கு இதுவென்" என்று ஆஸ்சர்யப்பட்டும், கரணத்தாலும் கண்ண புரத்தானைப் பற்றினளென்றும், அவனே தானாக அநுகரித்தாளென்றும் சொல்லி, இவளை இப்படி படுத்துகைக்கு பஞ்சலக்ஷம் குடியில் பெண்களோ டும் கலந்து விதக்த(ஷ)ரான இவர்க்கு, முக்தை (ஷ) யான இவள் கண் ணுறக்கத்தைக்கெடுக்க ப்ராப்தியென்" என்றும் சொல்லிக்கொண்டிருந்தால், பெண்ணின் விரஹக்லேசம்தீருமோ? இது தீரும்படியன்றோ நமக்குத்தேட்ட மென்னும் கருத்தாலே ஆக்ஷேபிக்க; அதுக்குவெறுப்பாக "இனி என்செய் வோம், படுவதெல்லாம்பட்டாள், இன்னமும் படுகிறாள்" என்கிறாளென்று ஸங்கதியை யருளிச்செய்கிறார். (இவர்க்கு இவளித்யாதி).

இவள்தானே கரணத்தையும் அத்தலைக்காகக் கொடுத்துவிட்டாளே

மகள்தான் இவ்வீடுபாடுகள்தானே பொறுக்கக்ஷமையோ'' என்ன; "இலற்றுக்கு இளைக்குமவளோ இவள்'' என்கிறாள்.

வ்யா:—(தரங்கநீர்பேசினும் தண்மதிகாயினுமிரங்குமோ) உறக்கம்போய் கண்ணைவிழித்துப்பார்த்தாள், பிரிந்தார் இரங்கும்நிலம் கடல்கரையாகையாலே, ஸமுத்ரதீரத்திலேயிருந்து அவன்றன்னோடு ஸம்ஶ்லேஷிக்கிறபோது பெரியஅபி(தி)நிவேசத்தோடேமேல்விழுந்து அணைத்ததோருக்கு ஸ்மாரகமாயும், ஸம்ஶ்லேஷிக்கிறபோது "அடியேன், குடியேன்'' என்றாப்போலே சொன்ன நீசபாஷணங்களுக்கும் ஸ்மாரகமாயும், அணைக்கிறபோதை ஸ்பர்ஶஸௌக்யத்தால் வந்த குளிர்த்திக்கு ஸ்மாரகமாயும் இவைநலியாநின்றால் இளைக்குமோ?. (தரங்கநீர்பேசினும்) திரைக்கிளர்த்தியை யுடைத்தானஸமுத்ரம் கோஷிக்கினும். (தண்மதிகாயினும்) அந்தகடலிலே பிறந்தவனிறே சந்த்ரன். ஸர்வபூதஸுஹ்ருத்தான அவன்இவளளவில் பாத(த)கனானப்போலே, ஸர்வப்ராணிகளுக்கும் ஆஹ்லாதகரனான சந்த்ரன் நெருப்பைமுகந்து தூவினும், அவன்படி இதுவானால் இவர்கள்படி சொல்லவேண்டாவிறே. (க) "யச்சீலஸ்ஸ்வாமீ தச்சீலாப்ரக்ருதி:-யச்சீலஸ்வாமீ, தச்சீலாப்ரக்ருதி:'' இறே.

(இரங்குமோ) இளைக்குமோ; என்றாள். இவள் இளையாமைக்கு ஹேதுவென்னென்ன; (எத்தனைநாளிருந்தெள்கினாள்) முன்பே

யென்கிறார் (கார்க்கடலித்யாதி). (அதுகிடக்கிடும்) என்றது - அவர்க்கு ப்ராப்தியுண்டாகிறது, இல்லையாகிறது, நமக்கு விசாரணீயமன்றென்கை. இனி விசாரணீயந்தானேதென்ன (உன்மகள்தானித்யாதி). (இவ்வீடுபாடுகள்) விரஹத்தாலுண்டான துக்கங்கள். "இளைக்கு மவளோ'' என்றது - விரஹக்லேசமெல்லாம்பட்டே குண்டவளின்னம் படத்தக்கவளென்றபடி.

(உறக்கம்போய்) என்றது - கீழ்ப்பாட்டில் "கண்டுயில் கொள்ள'' என்றத்தைப்பற்ற. நீர் என்றபதவாஸனை (அணைக்கிறபோதையித்யாதி). "தண்'' என்கிறதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அந்தவித்யாதி). (அவன்படி இதுவானால்) என்றது - கண்ணபுரத்தான்படி விரஹாக்நியைக் கொளுத்துமதானாலென்றபடி.

பேதையான இவள்நெடுநாள்விஶ்லிஷ்டையாகப் படுவதெல்லாம்பட்டாளென்கிறது. (உ) "த்ருடியுகாயதே - த்ருடியுகாயதே'' என்னுமாபோலே

(க)

(உ) பாக-கo-நக-கரு.

நெடுநாள் இவற்றின்கையிலே அடியுண்டு தகணேறின இவள்இவற்றுக்கு ஈடுபடுமோ?. "எள்குதல்" -ஈடுபடுதல். விடுகதத்தைப் பூட்டினால் அதில் பழக்கமில்லாதவன் நோவுபடுமிறே; அதிலே பழகிப்போந்தவன் விடுகம்பூட்டினால் கட்டிக்கொள்ளாய் என்று கிடக்குமிறே.

(துரங்கமித்யாதி) இவள் இப்படி நோவுபடாநின்றால் இதுக்குப் பரிஹாரம் பண்ணவேண்டாவோ, பெற்றநீயிறே பரிஹாரம் பண்ணுவாய்; அத்தைச் சொல்லிக்காணுயென்ன; அவளுக்குப் பரிஹாரமறிவேன் நானேயிறே. (அரங்கமேயென்பதிவள் தனக்காசையே) "திருவரங்கம்" "திருவரங்கம்" என்பது இவளுக்காசை. ஆனால் அதுசொல்லத் தட்டென்னென்ன; இவள்ஸத்ப்ரக்ருதியாகையாலே வாய்விடில் சிதிலையாகக்கூடுமென்று, வாய்க்காவலிட்டு வைப்பர்கள் பந்துக்கள்; (ஆசையே) வருந்திச் சொல்லப்புகில் அருகேயிருந்து "வாய், வாய்" என்பர்களிறே. திருக்கண்ணபுரத்தில் நிற்கிற க்ருஷ்ணனேயன்றோ இங்கும்; அவனில்காட்டில் இவனுக்குவாசியுண்டோவென்னில், (துரங்கம்வாய்கீண்டு கந்தானது தொன்மையூர்) (க) "கேஶவ: க்லேஶநாஶந:- கேசவ: க்லேசநாசந:" என்றுபோக(போக)விரோதியான கேசியை அழித்தவனன்றோ? ஸ்ரீப்ருந்தாவநத்திலே பெண்களும் தானுமாக அநுபவியாநிற்க, இதுக்கு விரோதியாய்வந்த கேசியின் வாயைக்கிழித்துப் பெண்களுக்கு ஒருகார்யம் செய்தானாயிருக்கையன்றிக்கே தன்னுடைய போக (போக) விரோதிபோயிற்று என்று உகந்தான்.

(தொன்மையூர்) பழையதானகோயில்; கண்ணனூரென்கிற திருவாய்ப் பாடிபோலே பழையதாய், புராணபந்தமுமாயிறேயிருப்

---

நெடுநாளாய் தோற்றுகையாலே என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (முன்பேயித்யாதி).

(இதுக்குப்பரிஹாரம்) என்றது-சவரிப்பெருமாள்காலைக்கட்டிக்கொள்ளுகை. (பந்துக்கள்) என்றது-தாய்முறையான நங்கைமார்களை. பெற்றதாயாய் ப்ரியபரையாயிருக்க, ஏகாந்தத்திலேயாகிலும் இவளாசையைத் தலைக்கட்டலாகாதோவென்ன (வருந்தியித்யாதி).

(புராணபந்தம்) புராணத்திலே ஸம்பந்தத்தை யுடைத்தாகை. தத்ப்ரதிபாத்யமென்கை. "தொன்மை" என்றுவிசேஷித்ததுக்கு ப்ரக்ருதோப

---

(க) நாரஸிம்ஹ-உக-நஎ.

பது. திருக்கண்ணபுரமாகிறது - ஸமுத்ரமத்யத்திலே புதிதாகக் குடியேறின த்வாரவதிபோலேயிறே; (க) "வேலைமோதும்மதிள்" (உ) "வெள்ளியேய்ந்தமதிள்" என்றது-தனக்குஸ்மாரகமாய், நலிந்த சந்த்ரனுக்கும் கடலுக்கும் தோள்தீண்டியாயிறேயிருப்பது. தன்னைநோவுபடுத்தின கடலின்வாயை அடக்கும்போது கேசிவாயைக் கிழித்தவனாக வேண்டாவோ. நெருப்பைத்தூவின சந்த்ரனை ஆறவிடும்போது தக்ஷசாபத்தாலே நோவுபட, தன்னுடைய சந்த்ர புஷ்கரிணியிலே பரிசயிப்பித்து அவனுடைய க்ஷயத்தைப்போக்கினவனாகவேண்டாவோ.

(அரங்கமேயென்பதிவள் தனக்காசையே) திருக்கண்ணபுரமென்று சொன்னளித்தனை; தானான தன்மை-கோயிலையே சொல்லுகையென்கிருள். கண்ணனூரேயது; இது-ஸ்ரீரங்கமிறே. (ங) "[illegible] - நகஸ்சிந்நாபராத்யதி" என்னும்பெண்ணரசிறே. மயர்வறமதிநலம் பிறந்தால் ஆரூடயோகராயிருப்பார்க்கும் (ச) "[illegible] - அபஏவஸ்ஸர்ஜாதௌ" என்கிற அப்ஸ்ருஷ்டிவாச்யமான மூலப்ரக்ருதியும் அதின் கார்யமான சப்தாதிகளும் போனாலல்லது அநுபவம் பூர்ணமாகாதிறே. இங்கு கடலினுடைய ஸ்தாநத்திலே ப்ரக்ருதி, அதில்பிறந்த சந்த்ரஸ்தாநே சப்தாதிகள். .... .... .... .... .... .... .... .... (எ)

யோகம் காட்டுகிருர் (திருக்கண்ணபுரமித்யாதி). இத்தால் கோபிகாவஸ்த்தாபந்நையான இவளுக்குத் திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணன் போக (ப்ர) ப்ரவாஹகனாய், ஸ்ரீமத்த்வாரகையில் க்ருஷ்ணன் விரஹவர்த்தகனாகையாலே அவ்வூர்களும் அவனைப்போலே யிருக்குமென்று கருத்து. விரஹவர்த்தகமான படி யெங்ஙனேயென்ன (வேலைமோதுமித்யாதி). திருவரங்கம் விரஹநிவர்த்தகமானவழி என்னென்ன (தன்னையித்யாதி வாக்யத்வயத்தாலே).

ஏவகாரார்த்தமருளிச் செய்கிருர் (திருக்கண்ணபுரமித்யாதி). ஆசைப்படுகைக்கு பற்றுசேதென்ன (கண்ணனூரித்யாதி). அதில் அவனுக்குப்ராதாந்யம் தோற்றியிருக்கும், இதில் புருஷகார பூ (ஞு) தைக்கு ப்ராதாந்யம் தோற்றியிருக்குமென்று கருத்து. இப்பாட்டுக்கு ஸ்வாபதேசம் காட்டுகிருர் (மயர்வித்யாதி). ... ... ... ... ... ... ... (எ)

(க) தி-வாய்-கூ-கo-க. (உ) தி-வாய்-கூ-கo-உ.
(ங) ரா-யு-ககக-சச. (ச) மநு-க-அ.

மூ.—தொண்டெல்லாம் நின்னடியே தொழுதுய்யுமா
கண்டு தான் கண்ணபுரம் தொழப்போயினள்
வண்டுலாம்கோதையென்பேதை மணிநிறம்
கொண்டு தான்கோயின்மை செய்வது தக்கதே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டெல்லாம் | ஸகல பாகவதர்களும் | உலாம் | ஸஞ்சரியாநின்ற |
| நின் | தேவருடைய | கோதை | குழலையுடைய |
| அடியே | திவ்யதேசத்தையே | என் | என்னுடைய |
| தொழுது | அஞ்ஜலிபண்ணி | பேதை | முக்தை (?) யான பெண்ணினுடைய |
| உய்யுமா | உஜ்ஜீவிப்பதை | மணி | மணிபோன்ற |
| கண்டு | பார்த்து | நிறம் | நிறத்தை |
| தான் | தாமும் | கொண்டுதான் | அபஹரித்து தான் |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை | கோயின்மை | அநீதியை |
| தொழ | தொழுவதற்கு | செய்வது | பண்ணுவது |
| போயினள் | போனாள்; | தக்கதே | (உமக்கு) தகுமோ?. |
| வண்டு | வண்டுகளானவை | | |

அவ.—எட்டாம்பாட்டு. முதற்பாட்டிலே [வெள்ளியீர், தொழுத இவள்கைவளை கொள்வது தக்கதே] என்று தொழுத இவள் கையில் வளையைக்கொள்ளுகை உமக்குத் தகுமோவென்று இவள் சொன்னவாறே "தொழுத இவள்கையில் வளையைவாங்குகை தகுதியல்ல, தப்பச்செய்தோம்" என்று இசைந்து நின்றார் சவரிப்பெருமாள்; பின்புதன்னிலே "இவர்க்கிவள் கடவதென் கண்டுயின்றிவர்கொள்ள" என்றும், "அரங்கமேயென்பதிவள்தனக்காசையே" என்றும் சொன்னத்தை சவரிப்பெருமாள் கேட்டார். (க) "ஸர்வத

அரு.—எட்டாம்பாட்டு. (தொண்டித்யாதி) பூர்வார்த்தத்தையெல்லாம் கடாக்ஷித்து ஸங்கதியருளிச் செய்கிறார் (முதலித்யாதி - இத்தனை யென்கிறுனென்னுமளவும்). (இசைந்துநிற்கை) நெஞ்சுநெகிழ்ந்து கொடுப்பதாகநிற்கை. (தன்னிலே) தங்களிலே. சவரிப்பெருமாள் முன்னிலையாய்தோற்றியிருக்கையாலே செவிப்படாமல், வினவ வந்தவர்களோடே ஏகாந்தமாகச்சொல்லச் செய்தே அவர்கேட்டபடி யென்னென்ன (ஸர்வத இத்யாதி). (தன் அபி

(க) ஶ்ரீ-கரு-கச.

ஸ்ரீமஸ்லோகே - ஸர்வதஸ்ஸ்ருதிமல்லோகே'' என்றிருக்குமவரிறே அவர். இப்படி இவள்சொன்னவாறே ''வளைகொடுப்பதாக நினைத்திருந்தோம், இனிகொண்டு அதுகொடுக்கிறதென், இன்னம் எட்டுமதுண்டாகில் வாங்கஅமையாதோ?''என்று சவரிப்பெருமாள்சிவட்கென்று ''உன்மகளுக்கு அரங்கமேயென்பதாசை என்றாய், அவளோடு நம்மோடு ப்ராப்தியில்லையென்றும் சொன்னாய், ஆனால் நம் ஊருக்கு இவள்வருவானேன், நாம்இவளை அழைத்தோமோ, ஆசைப்பட்டவிடத்தேறப் போகலாகாதோ?''என்ன; ''அதில்ஸம்சயமில்லை; அரங்கமேயென்பதிவள்தனக்காசை, நினைவுமதுவே, ஸ்வாபிமதஸித்திக்கு உறுப்பாக நாட்டார் செய்கிறதைக்கண்டு தனக்கும்தன்னபிமதம் ஸித்திக்குமோ? என்று தன்ஆசையாலேசெய்வான்முறைமை கண்டுபோனாளித்தனை''என்கிறாள். கார்க்கடல்வண்ணர்மேலெண்ணமென்றென்றே இவளுக்குமநோரதம். (க) ''இலங்கொலிநீர்பெரும்பௌவம்மண்டியுண்ணபெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்'' என்று கடலைப் பருகின காளமேகம்போலேயிறே பெரியபெருமாள் வடிவிருப்பது. ஆகையாலே நினைவும் அங்கேயென்னுமிடம் ஸித்தமிறே.

(தொண்டெல்லாம்) இப்பரப்பெல்லாமென்கிறாள், தொண்டர்- பகவத்பக்தர்களெல்லாம், ஆர்த்தராயும், ஆத்ம ப்ராப்தி காமராயும், பகவத்ப்ராப்திகாமராயுமிருக்குமவர்கள். இவர்களுக்கு பந்த(ஸ்ஜ)த்திலும், ஆஶ்ரயணத்திலும் பேதமில்லையிறே. ப (ஃ) லத்திலேயிறே

---

மதம்) கோயிலில்வாழ்ச்சி. (செய்வான்முறைமை) செய்வார்களுக்குச்செய்யும் ப்ராப்தி. நினைவும்அதுவேயென்னப்போமோ ''கார்க்கடல்வண்ணர்மேலெண்ணம்'' என்றன்றோ சவரிப்பெருமாள் விஷயம் சொல்லிற்றென்ன வருளிச்செய்கிறார் (கார்க்கடலித்யாதி). அந்தப்பாட்டில் சவரிப்பெருமாள் விஷயமாகச்சொன்னாளேயாகிலும், சவரிப்பெருமாள் சிவட்கென்று வேறுபட்டு நிற்கையாலே, இவளும் இப்போது திருப்பித் தாத்பர்யாந்தரம் விவக்ஷித்தாளென்னலாமென்று திருவுள்ளம்.

( ஆர்த்தராயும் ) என்றது - அர்த்தார்த்திகளுக்கு முபலக்ஷணம். ப்ரயோஜநாந்தரபரரையும் ''தொண்டர்'' என்னலாமோவென்ன (இவர்களுக்கித்யாதி).

---

(க) திருநெ-உச.

பேதம். ஆகையாலே "எல்லாம்" என்கிறாள். "தொண்டெல்லாம்" என்று - பக்தரைக் காட்டுபோவென்னில்; "மஞ்சாக்ரோசந்தி -மஞ்சாக்ரோசந்தி" என்னுமாபோலே. (தொழுதுய்யுமாகண்டு) சதுர்வித புருஷார்த்திகளும் உன்திருவடிகளை ஆஶ்ரயித்து தந்தாம்அபிமதங்களைப் பெறக்கண்டு. (தொழுது) (க) "பத்தாஞ்ஜலி புடா: - பத்தாஞ்ஜலி புடா:" என்று காயிகமான வ்ருத்தியிறே அஞ்ஜலி.

(கண்ணபுரம்தொழப்போயினாள்) நமக்கும் இங்கேகோயிலிலே சென்று புகலாமாகில் திருக்கண்ணபுரத்தைத் தொழுவோமென்று போயினாள். (நின்அடியேதொழுது) என்று உன்னையன்றே இவள் தொழுதது, திருக்கண்ணபுரத்தையிறே; யதோபாஸநமன்றோ ப(்ப)லம். ஐஶ்வர்யார்த்திகள் ஐஶ்வர்ய விஶிஷ்டனையிறே பற்றுவது. ஆத்மப்ராப்திகாமன்சுத்திவிஶிஷ்டனையிறேபற்றுவது. பகவத்ப்ராப்திகாமனும் (உ) "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் -ஸோஶ்நுதேஸர்வாந்காமாந்" என்று குணவிஶிஷ்டனையிறே பற்றுவது. இவளும் இவ்வூரை ஆசைப்பட்டவளாகையாலே ஊரைத்தொழுகிறாள். யத்விஶிஷ்டவஸ்துவைப்பற்றினால் தத்விஶிஷ்டவஸ்துவேயிறேப்ராப்யம்; க்ருஷ்ணனை ஆசைப்பட்டபெண்கள், க்ருஷ்ணன் மகனானகாமன் காலிலே விழுந்தார்களிறே. உடையவர்பெருமாளுக்கு நெடுநாள் திருமஞ்ஜநமெடுத்து அவரை ஆஶ்ரயமாகப்பற்றி, பின்பிறே கோயிலிலே வந்

---

கண்ணபுரம் தொழப்போனது தனக்குமாத்ரம் கோயில்வாஸம் கிடைக்கைக்காகப் போனாளல்லள், தன்னடியாரான நமக்கும் கோயில்வாஸம் கிடைக்கும்படி கிடீர்போனது என்று வ்யாக்யாதா ஈடுபடுகிறார் (நமக்குமித்யாதி). ஊரைத்தொழுதாலும் நாமன்றோபலமென்ன ; அன்றென்கிறாள்(நின்னடியேயித்யாதி).ஊரைத்தொழுதாலும்ஊரேபலமாவானேன்னென்ன(யதோபாஸநமித்யாதி). அப்படியே பலமாக வேண்டுவானேன்னென்ன (ஐஶ்வர்யேத்யாதி). "ப்ராப்யாநுகுணமாகப்ராபகம்"என்றருளிச்செய்து,ப்ராபகாநுகுணமாகப்ராப்யமென்கிறார் (இதித்யாதி). ப்ராப்யாநுகுணம்ப்ராபகமென்றதுக்கு உதாஹரணம் (க்ருஷ்ணனையித்யாதி). (௩) "ஆத்மா வை புத்ரநாமாஸி -ஆத்மாவைபுத்ரநாமாஸி" என்கிறபடியே காமனைப் பற்றினார்களென்கை. ப்ராபகாநுகுணம் ப்ராப்யமென்றதுக்கு உதாஹரணம் (உடையவரித்யாதி). கண்ணபுரத்தைத் தொழு

---

(க) பார-சாந்தி-௩௩௭-௪௦. (உ) தை-ஆ-க-உ.
(௩) மந்த்ரப்ர-செ௭௭.

தது. தொண்டெல்லாம் என்கிறவர்களைப்போலே ஸாதநபேதம் கொள்ளுமவளன்றேஇவள். ப்ராபகவஸ்துவேப்ராப்யமென்று, (க) *தானுகந்தவூரெல்லாம் தன்தாள் பாடித்திரியுமவளிறே. "ஒருவர்க்குரியேனோ" என்றதும் ஸாதநாந்தரங்களில்லையென்றதத்தனையிறே. (தான்போயினாள்) தொழுதாப்போலே குறியழியாமல் போரவில்லளாகிலன்றோ போவது; தொழப்புக்கு நிறத்தைக் கொடுத்துப் போருவார் போருவர்களோ? (போயினாள்) ஸ்ரீமிதிலையில் பிறந்தாரிலும், குண்டிநபுரத்தில் பிறந்தாரிலும் போனாருண்டோ? வரக் கண்டவித்தனையன்றோ செய்தது. (போயினாள்) * வேயினதோள் விசிறிப் பெடையன்னமென நடத்தவவள்போக்கு நீ காணப் பெற்றதில்லை காணென்கிறாள்.

இப்படியிருக்கிற இவள்போனால் தன்னோடொக்க ரூபஸாம்யத்தைக் கொடுக்கவன்றோ அடுப்பது. நிவாரகரில்லாத தேசத்திலே தனிநிலத்திலே அடித்துப் பறிப்பாரைப்போலே இவள்நிறத்தையும் கொள்ளவேணுமோவென்கிறாள். (வண்டுலாங்கோதையென்பேதை) இவள்மயிரைமுடித்துப்பூவைச் சுற்றிவிட்டால் வண்டுகள்பறந்து வர்த்திக்குமதுக்கு வெருவி உள்ளேபுகுரும் பருவமென்கிறாள்.

தால், அரங்கத்தில் வாஸம்வருமோவென்ன (தொண்டித்யாதி). உகந்தருளின நிலங்களெல்லாம்ப்ராப்யமும் ப்ராபகமுமாகவும் அநுஸந்திக்குமவளாகையாலே உன்னை ஒன்றுக்கு ஸாதநமென்றாலும் ஸாத்ய ஸாதநங்களுக்கு பே(தே)தமில்லையென்று கருத்து. தேசத்தைத்தொழுகை ஸாதநாந்தரமாய் விழாதோவென்ன (ஒருவர்க்கித்யாதி). உன்னைப்ராப்யமாக்கி,தேசவாஸத்தை ஸாதநமாக்கிலிறே ஸாதநாந்தரமாவதென்றுகருத்து. திருவரங்கத்தைப்பெறுகைக்கு திருக்கண்ணபுரத்தைத் தொழவந்தாளாகில் நம்வடிவில் கண்வைப்பாளென் ; விஶ்லேஷித்து இப்பாடுபடுவாளென் ; என்னும் ப்ரஶ்நத்திலே "தான்" என்கிறாளென்று விவக்ஷித்து உட்கருத்து (தொழுதாப்போலேயித்யாதி). போயினாளென்று நீசொல்லி வெறுக்கைக்கு போகாதேயிருந்தார் சிலருண்டோ? தொண்டெல்லாமன்றோ வந்துதொழுவதென்ன (ஸ்ரீமிதிலையித்யாதி). (குண்டிநநகரத்தில் பிறந்தார்) விதர்ப்பராஜன் பட்டணமான குண்டிநநகரத்திலே பிறந்த ருக்மணிப்பிராட்டி. தாத்பர்யாந்தரம் (வேயித்யாதி). (போக்கு) என்றது-போனபோக்கை யென்றபடி.

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி). "பேதை" என்று ஸமபிவ்யா

(க) திரு-நெ-சு.

(தொண்டெல்லாம்) தொண்டெல்லாம் பண்டு இவனடியைப்பற்றிக் கிடக்குமாபோலேகிடீர், தானுகந்தவூரிலே வண்டுகள் இவள் மயிரைப்பற்றி கிடக்கும்படி. இது ஒப்பனையழகிருந்தபடி. (என்பேதை) (க) "ஷுஷுஶா - ம்மஸா தா" என்கிறபடியே அபி (?) ஜாதையென்கிறாள். (பேதை) முக்த்தை (?).

(மணிநிறங்கொண்டுதான்) உன்மகள்முக்த்தையன்றே, விதக்த்தைகளுக்கும் அவ்வருகேயன்றோ இவள் பரிமாற்றம், இவள்நிறம் கொள்ளக்குறையென்னென்ன; (உ) "நன்மணிவண்ணன்" என்கிறபடியே, உம்முடைய நிறத்தைக்கொடுக்கையன்றோ தருவது; அது கிடக்க, முக்த்தையன்றோ, ஸ்வரூபஜ்ஞானமில்லாதவளன்றோ, உமக்கு ஸ்வரூபஜ்ஞானமின்றியிலே யொழியவேணுமோ?. (கொண்டுதான்) இவள் ஒப்பனையழகையும்கண்டால் ஆசைப்படுகைப்ராப்தம்; அதுகுற்றமல்ல, கொண்டால் பின்னைக்கொடாதொழிகைக்ருத்யமோ. (கோயின்மைசெய்வதுதக்கதே) ராஜநீதியில்லாதார் செய்வற்றை நீர்செய்யக்கடவீரோ? இழந்தவற்றை மீட்டுக்கொடுக்கையன்றோ ராஜக்ருத்யம்; ராஜாக்களே வழிபறிக்கை - ராஜநீதியோ? அமர்ந்தநிலத்திலேகொடுபோய் அநுபவிப்பிக்கையன்றோ தகுதியென்கிறாள். இவள் அடியில்தொழுதபோதே அமர்ந்தநிலத்திலே கொடுபோனால், இங்குநாமும் நம்முடையாரும் வாயிலே மண்ணைப் பொகட்டுக்கொள்ளவோ யென்றிறே அவனிருக்கிறது. (அ)

---

ஹாரலப்ய தாத்பர்யமருளிச்செய்கிறார் (தொண்டெல்லாமித்யாதி). (தானுகந்தவூரிலே வண்டுகள்) என்றது- தெய்வ வண்டுகளான எம்பெருமான்களை.

"தான்" என்றது நீதானென்றாய், தானுக்கர்த்தம்-ஸர்வஜ்ஞதையாய், அதுக்கு உபலம்பகம்தோற்ற உக்திப்ரத்யுக்திரூபேணபா(ஷா)வம் (உன்மகளித்யாதி). (ஸ்வரூபஜ்ஞாநம்) என்றது-தன்பருவத்தைப்பார்க்க வல்லளென்கை. தானென்றத்தால் தோற்றின ஸர்வஜ்ஞதைக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (இவளித்யாதி). மேலுக்கவதாரிகை ( அதுக்கித்யாதி ). திருத்தாயார் தானே தகாதென்ற அத்தை ஸர்வஜ்ஞன் அவன்செய்ய அடுக்குமோவென்ன; (இவளித்யாதி). இத்திருமொழியைத் தலைக்கட்டிவைத்துவாழலாயிருக்க, அங்கே கொடுபோனால் ப்ரயோஜநமில்லையென்று கருத்து. (அ)

---

(க) ரா-பா-எஅ-உக. (உ) ச-திருவ-சஎ.

மூ.—முள்ளெயிறேய்ந்திலக்கூழை முடிகொடா
தெள்ளியளென்பதோர் தேசிலளென்செய்கேன்
கள்ளவிழ்சோலைக் கணபுரம்கைதொழும்
பிள்ளையைப்பிள்ளையென்றெண்ணப் பெறுவரே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எயிறு | (இவளுக்கு) தந்தங்களினுடைய | என்செய்கேன் | (இவளைப்பற்றி)என்ன செய்வேன் |
| முள் | அங்குரமும் | கள் | மதுவானது |
| ஏய்ந்தில | நிரம்பவில்லை; [கள் | அவிழ் | பெருகாநின்ற |
| கூழை | (இவளுடைய) குழல் | சோலை | சோலைகளையுடைய |
| முடி | முடிப்பதற்கு | கணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| கொடா | பிடிகொடுக்கவில்லை; (இன்னமும்) | தொழும் | தொழாநின்ற (இப்படிப்பட்ட) |
| தெள்ளியள் | தெளிவுடையவள் | பிள்ளையை | பிள்ளையை |
| என்பது | என்று சொல்லும்படியான | பிள்ளையென்று | (தன்வயிற்றில் பிறந்த) பிள்ளையென்று |
| ஓர் | ஒருவிதமான | எண்ண | எண்ணுவதற்கு |
| தேசிலள் | தேஜஸ்ஸையும் பெற்றவளன்று; | பெறுவரே | பெறுவர்களோ?. |

அவ.—ஒன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே "என்பேதை மணி நிறம் கொண்டுதான் கோயின்மைசெய்வது தக்கதே" என்று நிவாரகரில்லாத தேசத்திலே வழியடிப்பாரைப்போலே முக்த்தை (?)யான இவள் நிறத்தைக் கொள்ளவேணுமோவென்று இவள் சொன்னவார்த்தையைக்கேட்ட சவரிப்பெருமாள், நீ நம்மை நியமிக்கக் கடவையோ. (க) "ஸர்வஸ்ய வஶீ-ஸர்வஸ்யேஶாநஃ - ஸர்வஸ்யவஶீ - ஸர்வஸ்யேஶாநஃ" என்று ஸர்வர்க்கும் நியாமகராயிருக்கிறநம்மை நியமிக்கக்கடவையோ? [மடவரல்மாதரென்பேதை] என்று - உன்மகளென்றும், உனக்கு பவ்யையென்றும் சொன்னாய்; அவளைநியமித்

அரு.—ஒன்பதாம்பாட்டு (முள்ளித்யாதி) "பிள்ளையென்றெண்ணப் பெறுவரே" என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி (கீழித்யாதி). அர்ச்சகபராதீநராயிருந்த உம்மைநியமித்தாலும் நியமிக்கலாமித்தனைபோக்கி, உம்மூரைத் தொழுதவளை நியமிக்கக் கூடாதென்று கருத்து. பல்லெழாத பருவமென்று

(க) ப்ருஹ-கூ-௪-உஉ.

த்கொள்ளமாட்டாயோ? நீநம்மைநியமிக்கப்போராய்காணென்ன; இவள் பருவமிது, பா(வ)வமிது; ஆனபின்பு என்னாலே நியமிக்க லாயோ விருப்பது யென்கிறாள். இவளளவு இதுவாயிருக்க, இவ ளைப்போலே அவகாஹித்தாளொரு பெண்பிள்ளை வார்த்தை யாலே சொன்னாளிறே அவளுடைய திருத்தாயார். (க) [முலையோ வித்யாதி] இவளளவு இதுவாயிருக்க, அவகாஹநமிருந்தபடி யென்; அளவன்றியிருந்ததீ என்றாளிறே. [ முலையோமுழுமுற்றும்போந் தில) முலைபுரைகிறவித்தனை. வளருமளவும் செல்ல வரையிட்ட தில்லை, இதுபருவமிருந்தபடி. [திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே] திருமலையை விடாமல் சொல்லாநின்றாள். இது அவ காஹநமிருந்தபடி. [இவள்பரமே] இவளளவன்றிக்கே யிருந்ததீ என்றாளிறே. அவளுடைய பருவமில்லையே இவளுக்கு; அவகாஹ நத்திலும் வாசிகமாத்ரமேயிறே அவளுக்குள்ளது. காயிகத்தால் வந்த அவகாஹநமுண்டே இவளுக்கு. பங்கு(ஙு)க்களாயிருப்பார்க் கும் அந்த(ஹ)ராயிருப்பார்க்கும் போகவொண்ணாதபடி பரமபதத் துக்கு அடுத்தணித்தாய் அர்ச்சிராதிபோலே பெரியவேற்றமேற வேண்டியிறே திருமலையிருப்பது. அத்தனை துஷ்ப்ராபமாயன்றே திருக்கண்ணபுரமிருப்பது, இருந்தபடியே எல்லார்க்கும் புக்கநு பவிக்கலாம்படியிறே திருக்கண்ணபுரமிருக்கும்படி. ஆகையால்இவ ளளவு இதுவாயிருந்தது. அவகாஹநத்திலெல்லையிதுவாயிருந்தது; ஆனபின்புஇவளை நியமிப்பாருண்டோவென்று பொதுவிலேசொல்லு கிறாள்.

---

பருவத்தில் குறைத்தலும், ''கைதொழும்'' என்று அவகாஹநத்தில் ஆதிக்ய மும் சொன்னதுக்கு வ்யாவர்த்த்யம்காட்டத் திருவுள்ளம்பற்றி அதிஷ்ட்டி கையிடுகிறார் ( இவளையித்யாதி ). (வார்த்தையாலே) என்றது ''கற்கின்ற வாசகம்'' என்றத்தைப்பற்ற. (புரைகிற) முளைக்கிற. காயிகமான அவ காஹநத்தாலுண்டான ஏற்றமன்றிக்கே, மாநஸாவகாஹநத்திலும் திருமலைக்கும் திருக்கண்ணபுரத்துக்குமுண்டான ஸ்வபாவபர்யாலோசநாரூப அவகாஹநமு முண்டென்கிறார் (பங்குக்களித்யாதி). பெறுவேனோவென்னாதே ''பெறுவ ரே'' என்கையாலே (பொதுவிலே) என்றது. இத்தால் (உ) [Telugu-script quotation] - மம்மத்பக்த பக்தேஷு ப்ரீதிரப்யதிகாபவேத்'' என்ற உன்னாலும், இவ்வளவு அவகாஹிக்கப்போமோவென்றிருக்கிற என்னு

---

(க) திருவிரு-கூ௦. (உ)

வ்யா.—(முள்ளெயிறேய்ந்தில) எயிறு -தந்தம்; முள்ளெயிறு-தந்தாங்குரம். எயிறுநிரம்பிற்றில்லை. (கூழைமுடிகொடா) இவள் குழலை வாரியெடுத்துப்பிடித்துக் கலிக்கட்டாகக் கட்டவென்று புக்கால் அதுக்குப்பிடிகொடாது. (தெள்ளியளென்பதோர் தேசிலள்) இப்படியிருந்தாலும் தன்வல்லபனைப் பத்துஇருபது பட்டினிகொண்டாளென்னும் சொல்படைத்திலள். ஸர்வஜ்ஞனவன் மதிமயங்கும்படியான தேஜஸ்ஸைப்பெற்றிலள். (என்செய்கேன்) கீழில் இவளுடைய முக்த்ததை சொல்லி மேல் இவளுடைய ப்ரபாவத்தை நினைத்து என்செய்கேனென்கிறாள். (என்செய்கேன்) இவளை நியமிக்கவடுக்குமோ? அநுவர்த்திக்கவடுக்குமோ வென்கிறாள்.

(கள்ளவிழித்யாதி) பூர்வாவஸ்த்தையைப்பார்த்து நியமிக்க அடாது. உத்தராவஸ்த்தையைப் பார்த்து அநுவர்த்திக்க வடுக்குமென்கிறாள். இவளை அநுவர்த்திக்க வடுக்குமென்று ஸித்தாந்திக்கிறது எதுகொண்டென்ன; இப்படிப்பட்ட பேரளவுடையளான் பெரியவளன்றோவென்கிறாள். (கள்ளவிழ்சோலைக் கண்ணபுரம்) நித்யவஸந்தமானதேசம். புஷ்பங்களில் கட்டவிழ்ந்து மதுவைப்ரவஹிக்கும் சோலையையுடைத்தான தேசம். (கணபுரம்கைதொழும் பிள்ளை) (க) "బాల్యాత్ప్రభృతి సుస్నిగ్ధః- பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த்

லும், சேர்த்துவிடும் தோழிகளாலும் நியமிக்கப்படாதவளை என்வயிற்றில் பிறப்பைக் கருதி நியமிக்கவோ வென்கிறாள் என்றதாயிற்று.

(கலிக்கட்டு) குஞ்சி. தெள்ளிய தேஜஸ்ஸைப்படைத்தவள் ஜநககுல ஸுந்தரியென்று திருவுள்ளம்பற்றி, அவள் திருவடி வந்தழைத்தாலும் (உ) "తత్తస్యసదృశం భవేత్ - தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" என்றுசொல்லி (ந) "ఊర్ధ్వం మాసాన్న జీవిష్యే- ஊர்த்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்றுநாளிட்டு (ச) "న మాంసం రాఘవో భుఙ్క్తే - நமாம்ஸம் ராகவோபுங்க்தே" என்றத்தைக் கேட்டுவைத்தும், அதுக்கும் இசைந்துவிட்டாளே, அப்படி செய்யவறியாதாளாய் தொழுதாளென்னும் தாத்பர்யத்தை ஸூசிப்பிக்கிறார் (இப்படி யித்யாதி). (பத்து இருபது) என்றது - பத்துமிருபதுமென்றபடி. வாக்யார்த்தம் (ஸர்வஜ்ஞனித்யாதி).

பல்லெழாததசையிலும் ப்ராவண்யமுடையாருண்டே இவளுக்கேற்றமென்னென்ன (பால்யாத் ப்ரப்ருதியித்யாதி).

(க) ரா-பா-கஅ-உஎ. (உ) ரா-ஸு-ந-அ-கஎ.
(ச) ரா-ஸு-ந௬-சக.

தஃ'' என்று பிறந்தவன்றே கால்கடையிலே தொட்டிவிட்டுவளரும் படி ஸாஸிக்கத்தாரயிறே இளையபெருமாளிருப்பது. இப்படியிருந்த அவரும் '' (க) ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம் - ப்ராஞ்ஜலிம் ப்ராஹ்வமாஸீநம்'' என்று அவனைத்தொழுதாரித்தனையிறே. அவனூரைத்தொழுமவளிறே இவள். (பிள்ளையை) இப்படிப்பட்ட பெரியமுதன்மையை யுடையவனை.

(பிள்ளையென்றெண்ணப் பெறுவரே) தன்வயிற்றிலே பிறந்தானென்கிறபந்த(ப)த்தைக்கொண்டு நியமிக்கப்பெறுவர்களோ? (எண்ணப்பெறுவரே) நினைக்கத்தான் பெறுவர்களோ? நினைத்தாளாகில் (உ) ''ஹரிஸம்ஸ்மரணம்பரம் - ஹரிஸம்ஸ்மரணம்பரம்'' என்கிறபடியே ப்ராயஶ்சித்தம்பண்ண வேண்டியிறேயிருப்பது. (உ) ''க்ருதே பாபே அநுதாபோ வை யஸ்ய பும்ஸஃ ப்ரஜாயதே। ப்ராயஶ்சித்தம் து தஸ்யைகம் ஹரிஸம்ஸ்மரணம் பரம் - க்ருதேபாபேஅநுதாபோவை யஸ்யபும்ஸஃ ப்ரஜாயதே। ப்ராயஶ்சித்தந்து தஸ்யைகம் ஹரிஸம்ஸ்மரணம் பரம்''. [க்ருதேபாபே] ஒருத்தன் ஒருபாபத்தை புத்திபூர்வகமாகப் பண்ணுவது. [அநுதாபஃ] அநந்தரம் ''தப்பச்செய்தோம், புருஷோத்தமன் அறியில்செய்வது என்'' என்று அநுதபித்தவன் ப்ராயஶ்சித்தத்துக்கு அதிகாரி. [யஸ்யபும்ஸஃ ப்ரஜாயதே] இதுக்கு இன்னாரென்றில்லை. ஆரேனுமாகவுமாம். [ப்ராயஶ்சித்தந்து தஸ்யைகம் ஹரிஸம்ஸ்மரணம் பரம்] ஸர்வபாபங்களையும் போக்குமவனை நெஞ்சாலே ஒருகால்நினைக்கவமையும். [பரம்] ப்ராயஶ்சித்தங்களில் தலையானப்ராயஶ்சித்தம் இதுவேயென்கிறது. ''பெரிய திருவடி எழுந்தருளச்செய்தே ஒரு பர்வதாக்ரத்திலே வைகித்தங்கப்புக்கான்; அந்த பர்வதசிகரத்திலே ஒரு பெண்பெண்டாட்டி பகவத்குணங்களைப்பேசக்கேட்டு, 'தான் ஸ்த்ரீயாயிருக்க பகவத்ப(த்)ஜநத்திலே இத்தனை ருசியுண்டாவதே? இவள் ஒருபுண்யக்ஷேத்ரத்திலேயிருக்கப் பெற்றதில்லையே' என்று வெறுக்க, அநந்தரம் விடிந்தவளவிலே இவன்போகநினைக்க, இவன் சிறகுகள் உதிர்ந்து எழுந்திருக்கமாட்டாதே யிருந்தான்.'' என்று மஹாபாரதத்திலே ஆரண்யபர்வத்திலே எழுதிற்று.

ஆகவித்தால் சொல்லிற்றாய்த்து ''பகவத்விஷயத்திலேஒருகிற்றுப் புகுர நின்றான் யாவனொருவன், அவன் பூர்வவ்ருத்தத்தைப் பார்த்

ஸ்வாபதேசம் (ஆகவித்யாதி). ... ... ... ... ... (கூ)

(க) ரா-அ-சா-சஉ. (உ) வி-பு-உ-கூ-சo.

துக்குறைய நினைக்கக்கடவனல்லன், அவனிருந்தபடியேஉத்தேஶ்யம் பண்ணிக்கொண்டாட வடுக்கும்'' என்கிற அர்த்தத்தை வெளியிடுகிறது. (க) "ஶ்ராந்தாரேஉபி- துராசாரோபி'' இத்யாதி. (கூ)

மூ.—கார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை
பார்மலி மங்கையர்கோன் பரகாலன்சொல்
சீர்மலி பாடலிவைபத்தும் வல்லவர்
நீர்மலி வையத்து நீடுநிற்பார்களே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார் | மேகங்களாலே | சொல் | அருளிச்செய்த |
| மலி | வ்யாப்தமான | சீர் | காம்பீர்யமாகிற சீர்மை |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற | மலி | நிறைந்த [யால் |
| | | பாடலிவைபத்தும் | இப்பத்துப் பாட்டையும் |
| எம்அடிகளை | என்ஸ்வாமிவிஷயமாய், | வல்லவர் | அப்யஸிக்க |
| பார் | பூமியில் [ராய் | நீர் | கடலாலே [வல்லவர் |
| மலி | மிக்கபுகழையுடைய | மலி | சூழப்பட்ட |
| மங்கையர் | திருநகரிக்கு | வையத்து | பூமியிலே |
| கோன் | ஸ்வாமியான | நீடு | வெகுகாலம் |
| பரகாலன் | ஆழ்வார் | நிற்பார்களே | வாழப்பெறுவர்கள்(கo) |

அவ.—பத்தாம்பாட்டு. இத்தால் "கவிபாடிற்று இன்னாரை, பாடினேன் இன்னான், என்கவிதான் இன்னது, இதுகற்றார்க்கு பலம் இன்னது'' என்று இவைநாலையும் சொல்லுகிறார்.

வ்யா.—(கார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை) ஶ்ரமஹரமாய், தர்ஶநீயமுமாய், உபகாரகமுமான மேகஸஞ்சாரங்களையுடைத்தான தேசம். (எம்மடிகளை) அம்மேகங்களைப்போலே தர்ஶநீயமான வடிவை யுடையனாய், ஸுலபனுமாய், பரமோதாரனுமாய், தன்னை உக

அரு.—பத்தாம்பாட்டு (கார்மலியித்யாதி) "கார்மலி" என்றதை கண்ணபுரத்துக்கு விசேஷணமாக்கிஅர்த்தஸ்வபாவத்தாலேவந்தகுணங்களை அருளிச்செய்துகொண்டு சப்தார்த்தம் (ஶ்ரமஹரமாயித்யாதி). "கார்மலி" என்றதை "அடிகளை'' என்றதுக்கு விசேஷணமாக்கி அர்த்தாந்தரம் (அம்மேகங்களையித்யாதி). அன்றிக்கே "கார்" என்றபதம் தத்குணவாசகமாய், அந்தகுணங்

(க) கார்க்வ-ஸம்-கக-உக.

வாதார் தலையிலே இடிவிழ விடக்கடவனுமான என் ஸ்வாமியை. (க) "𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑌃 - குணைர்தாஸ்யமுபாகத:" என்றுகுணங்களுக்குத்தோற்று அடிமை புகுகிறாரல்லர் என்குடிநாதனென்கிறார். (பார்மலிமங்கையர்கோன் பரகாலன்சொல்) லோகத்தில் இருவர் கூடின விடமெல்லாம் "இதோர் அவகாஹநமே, இதொரு கவித்வமே, இவருக்கு ருஷிகள்ஒப்போ? வேதங்கள்தான் ஒப்போ? அல்லாத ஆழ்வார்கள்தான் ஒப்போ?" என்று நின்றார் நின்றபடி கொண்டாடும்படியான பெரியபுகழை யுடையவர். "பரகாலன்" என்று - பெயர்.

(சீர்மலிபாடலிவைபத்தும் வல்லவர்) தன்னைப்பொதிய வைக்கோலில்லாதபடி விளையும் செய்போலே, சப்தம் அல்பமாய், பகவத்குணங்கள் ப்ரசுரமாயிருக்கிறபாடல். "இவைபத்தும்" என்று கையிலேயிட்டுப்பார்ப்பாரைப்போலேசொல்லுகிறார். (வல்லவர்)இயலாகவுமாம், இசையாகவுமாம், ஏதேனுமொரு ப்ரகாரத்திலே வல்லவர்கள். (நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே) கடல் சூழ்ந்த பூமியிலே சிரகாலம் வாழப்பெறுவர்கள். இதுகற்றாருக்குப் பலம் ஸம்ஸாரத்திலிருக்கையோவென்ன; பரமபதத்திலே தெள்ளியீர் இல்லையே; தெள்ளியீருள்ளது - இங்கேயன்றோ?. (உ) "[illegible]-பாவோ நாந்யத்ரகச்சதி" என்று திருவடி ராமகுணங்களைக்கேட்டு, அத்தாலே பூர்ணனாய், அத்தேசத்தேயிருந்தாப்போலே தெள்ளியீரை இங்கே

---

ளாலே ஸம்ருத்தமான தேசமென்றும், காரானது மலிந்திருந்துள்ள தேசமென்றும் இரண்டர்த்தத்தைக் கூட்டியருளிச் செய்கிறாரென்னுதல்; மூன்றாமர்த்தம் (மேகங்களையித்யாதி). அதவா "கார்மலி" என்றது தேசத்துக்கே விசேஷணமாய், இப்படி விசேஷிக்கையாலேபலித்ததாத்பர்யமென்று ஏகார்த்தமேயாகவுமாம். (ஸாலபனுமாய்) என்றது - ஸ்வயத்நஸாத்த்யமன்றிக்கே தன்னடையே வர்ஷிக்கையாலே மேகங்களுக்கு ஸௌலப்ப்யமுண்டென்று திருவுள்ளம்பற்றி. என்னழகனை யென்னாதே "அடிகளை" என்றதுக்குக் கருத்து (குணைரித்யாதி). பாரிலேபுகழ்மலிந்த என்றுக்கி "இவட்கிதுவென்கொலோ" என்றவிடத்திலும் "மூன்வெளயிறேய்ந்தில" என்கிறபாட்டிலும்விவக்ஷிதமான ஆழ்வாரில் வைலக்ஷண்யத்தையுட்கொண்டுதாத்பர்யம் (லோகத்திலித்யாதி).

(பொதிய) கோட்டைகட்ட. (தெள்ளியீரை) தெள்ளியீரென்கிற திரு

---

(க) ரா-கி-ச-கஉ. (உ) ரா-உத்த-சo-கச.

பாடக்கேட்டு பூர்ணராயிருக்கப் பெறுவர்கள். .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளைதிருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி

## எட்டாம்பத்து இரண்டாந்திருமொழி முற்றிற்று.

## எட்டாம்பத்து மூன்றாந்திருமொழி,

### கரையெடுத்தப்ரவேசம்.

வ்யா.—(௧) "ఏతైర్నిమిత్తైరపరైశ్చ సుభ్రూస్సంబోధితా ప్రాగపి సాధు సిద్ధైః। వాతాతపక్లాన్తమివ ప్రణష్టం వర్షేణ బీజం ప్రతిసఞ్జహర్ష- ஏதைர்நிமித்தைரபரைஶ்சஸுப்ரூஸ்ஸம்போதிதா ப்ராகபி ஸாதுஸித்தைஃ। வாதாதபக்லாந்தமிவ ப்ரணஷ்டம் வர்ஷேண பீஜம் ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" "கைவளைகொள்வது தக்கதே" என்று தாயார்சொன்னவாறே, இத்தைக்கேட்டு உணர்ந்தபெண்பிள்ளை தன்கையைப்பார்த்து, "இழந்தேன்வரிவளை" என்கிறாள். கீழ்த்திருமொழியிலே "கைவளைகொள்வது தக்கதே" என்று திருத்தாயார் சொன்னாள்; அவள்பலகாலும் சொல்லக் கேட்கையாலும், இவள் அதுதன்னை வாய்வெருவுகையாலும் கீழ்பிறந்த மோஹமானதுபோய், அல்பமறிவுபிறந்து, அது

மொழியை. ... ... ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர்திருவடிகளே சரணம்.

அரு.—கரையெடுத்தப்ரவேசம். திருத்தாயார்வார்த்தை கேட்டுணர்ந்த மாத்ரத்துக்குத்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (ஏதைரித்யாதி). (ஸஞ்ஜஹர்ஷ) என்றவநந்தரம், "என்கிறபடியே பிராட்டி நிமித்தங்களாலே உணர்த்தப் பட்டாப்போலே உணர்த்தப்பட்டு பேசுகிறாள்" என்று பூரிப்பது. இங்கே உணருகைக்கு நிமித்தமென்னென்ன; (கைவளையித்யாதி). மணிநிறங்கொண்டதும், திருத்தாயார் கீழ்த்திருமொழியில் சொன்னாளேயாகிலும் கைமேலே காணலாயிருந்தது; வளை இழப்பாகையாலே, இத்தையே பேசுகிறாளென்று திருவுள்ளத்தே ஸங்க்ரஹேண வருளிச்செய்த ஸங்கதியை விஸ்தரிக்கிறார் (கீழிலித்யாதி). "கைவளைகொள்வதுதக்கதே" என்றொருகால் சொன்னதாயிருந்தாலும் "தெள்ளியீர் வளைகொள்வதுதக்கதே" "தேவர்க்கும்தேவரானவர் வளை கொள்வதுதகுமோ" என்றாப்போலே ப்ரதிபதம் ஹேதுகர்ப்பமாகையாலே பலகாலும் சொன்னவபிமதமென்கிறார் (இவளித்யாதி). "அதுதன்னையே) என்றவநந்தரம், "பரிஹரிக்கைக்கு வேங்கடம் முதலானவற்றை" என்று கூட்டுவது. ... ... ... ... ... ... ... *

(௧) ரா-ஸு-௨௯-௩.




தான் ஆஸ்வாஸத்துக்குடலாகை தவிர்ந்து, தான்படுகிற வ்யஸந்த்தை அநுபாஷிக்கைக்கு உடலாக, அத்தாலே இரவல்வாயாலே தன்னிழவைச் சொல்லுகையன்றிக்கே தானே தன்னிழவுகளைச் சொல்லிகூப்பிடுகிறுளாயிருக்கிறது.

மூ,—கரையெடுத்தசுரிசங்கும் கனபவளத்தெழுகொடியும்
திரையெடுத்து வருபுனல்சூழ் திருக்கண்ணபுரத்துறையும்
விரையெடுத்ததுழாயலங்கல் விறல்வரைத்தோள் புடைபெயர
வரையெடுத்த பெருமானுக்கிழந்தே னென்வரிவளையே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரை | கோ (கோ) ஷத்தை | விரை | பரிமளத்தை |
| எடுத்த | உடைத்தாய் | எடுத்த | உடையதான |
| சுரி | வளைவுமுடையதான | துழாய் | திருத்துழாயின் |
| சங்கும் | சங்குகளையும், | அலங்கல் | [மாலையையுடையதாய் |
| கனம் | செறிந்திருக்கிற | விறல் | மிடுக்கையுடையதாய் |
| பவளத்து | பவளத்தினுடைய | வரை | மலைபோலிருக்கிற |
| எழு | வளர்த்தியை யுடைய | தோள் | திருத்தோள்கள் |
| கொடியும் | கொடிகளையும் [தான | புடைபெயர | அசையும்படியாக |
| திரை | அலைகளானவை | வரை | கோவர்த்தந மலையை |
| எடுத்து | எடுத்துக்கொண்டு | எடுத்த | எடுத்தவனான |
| வரும் | வாராநின்ற | பெருமானுக்கு | பெரிய உபகாரகனான ஸர்வேஸ்வரனுக்கு |
| புனல் | ஜலத்தாலே | என் | என்னுடைய |
| சூழ் | சூழப்பட்ட | வரி | தர்ஸநீயமான |
| திருக்கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே | வளை | கைவளையை |
| உறையும் | நித்யவாஸம் பண்ணுகிறவனாய், | இழந்தேனே | இழந்துவிட்டேன். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (கரையெடுத்த)"கரை"என்று-கோஷத்துக்குப்பெயர். சங்கானது திரைமேல் திரையாகப்போந்து ஏறுகிற போது கரையில்பார்த்து நின்றார்கள், "ஒருசங்கினுடையவளவு இருக்கிறபடியென்" என்றுசொல்லுகிற கோஷமாதல்; அன்றிக்கே

---

அரு.—முதற்பாட்டு. (கரையித்யாதி) "எடுத்த" என்றது - எழுவித்த வென்றாக்கி அருளிச்செய்கிறார் (சங்கானதித்யாதி).

சங்குதனக்கே ஸ்வதஃ உண்டாயிருப்பதொரு கோஷமுண்டிறே; அத்தைச்சொல்லிற்றுதல். (கனவித்யாதி)செறிந்தபவளத்தினுடைய வளர்ந்தகொடியும், திரைகளானவை எடுத்துக்கொண்டு வாராநின்ற ஜலஸம்ருத்தியை யுடைத்தான திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற.

(விரையித்யாதி) பசுக்களுக்கும் இடையர்க்கும்வந்த ஆபத்தைப் பரிஹரிக்கைக்காக கோவர்த்தநகிரியைத் தோளசையும்படி யெடுத்துக்கொண்டு நின்றருளிற்று. மிக்க பரிமளத்தை யுடைத்தான திருத்துழாய் மாலையையுமுடைத்தாய், பெரியமிடுக்கையுமுடைத்தாய், மலைபோலேயிருக்கிற திருத்தோள்கள் அசையும்படியாக மலையையெடுத்துப் பரிஹரித்த ஆபத்ஸகனான ஸர்வேஶ்வரனுக்கு என்னுடைய தர்ஶநீயமான வளை இழந்தேன். .... (க)

மூ.—அரிவிரவுமுகில் கணத்தாலகில்புகையால் வரையோடும்
தெரிவரியமணிமாடத் திருக்கண்ணபுரத்துறையும்
வரியரவினணைத்துயின்று மழைமதத்தசிறுதறுகண்
கரிவெருவமருப்பொசித்தார்க்கிழந்தேனென் கனவளையே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| அரி | கறுப்பானது |
| விரவும் | (கலந்து) பரவாநின்ற |
| முகில் | மேகங்களுடைய |
| கணத்தால் | ஸமூஹத்தாலும் |
| அகில்புகையால் | (அவ்வூரிலுண்டான) அகிற்புகைகளாலும் |
| வரையொடும் | மலையோடு |
| தெரிவு | பேதஜ்ஞாநமானது |
| அரிய | (உண்டாக) அரிதான |
| மணி | ரத்நமயமான |
| மாடம் | க்ருஹங்களையுடைய |
| திருக்கண்ணபுரத்துறையும், | |

| பதம். | உரை. |
|---|---|
| வரி | ரேகைகளையுடைய |
| அரவின் | திருவநந்தாழ்வானுகிற |
| அணை | படுக்கையிலே |
| துயின்று | கண்வளர்ந்தருளின, |
| மழை | வர்ஷதாரைகள் போலேயிருக்கிற |
| மதத்த | மதஜலத்தையுடைய |
| சிறு | சிறுத்ததாய் |
| தறுகண் | (க்ரௌர்யம் தோற்றும்படிபார்க்கிற) கண்களையுடைய |

---

சுத்தஸ்வபாவரும் ராகப்ரதாநரும் நீர்மையிடும்படியான தேசத்திலிருந்தவனை மாத்ரமன்றிக்கே, அரியனசெய்தும் நோக்கினவனுக்கு இழந்தேன் வளையை இது வென்னென்னுமபிப்ராயத்தை ஸ்ப்புரிப்பிக்கிறார் (பசுக்களுக்குமித்யாதி) ... ... ... ... ... ... ... (க)

| | | | |
|---|---|---|---|
| கரி | குவலயாபீடமானது | என் | என்னுடைய |
| வெருவ | அஞ்சும்படியாக | கன | க (ஞா) நமான |
| மருப்பொசித்தார்க்கு | தந்தங்களை அநாயாஸேந முறித்துப் போகட்டவனுக்கு | வளை இழந்தேனே. | (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (அரிவிரவுமுகில்கணத்தால்) கறுப்பானது எங்குமொக்கப் பரந்திருக்கிற காளமேகஸமூஹங்களாலும், அவ்வூரிலுள்ளார் உண்டாக்குகிற அகில்புகையாலுண்டானஇருட்சியாலே மலைக்கும் மாடத்துக்கும் வாசிதெரிந்து ப்ரதிபத்தி பண்ணவொண்ணாதபடியாய், ரத்நமயமான மாடங்களையுடைத்தான திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம்பண்ணுகிற.

(வரியித்யாதி) நாநாவான வரிகளையுடைத்தாய், நாற்றம், குளிர்ச்சி, மென்மைகளையுடைத்தாயிருக்கிற திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளி, வர்ஷதாரைகள்போலேயிருக்கிற மதஜலத்தையுடைத்தாய் வடிவில் பெருமைக்கு ஈடாகப்பெருத்திருக்கையன்றிக்கே, ஜாத்யுசிதமாம்படிசிறுத்துக்ரௌர்யமெல்லாம் தோற்றும்படி பார்க்கிற கண்களையுடைத்தாயிருந்துள்ள குவலயாபீடமானது வெருவும்படியாக அதின்கொம்புகளை அநாயாஸேந முறித்துப்பொகட்ட அச்செயலுக்கு வளைஇழந்தேன். .... (உ)

மூ.—துங்கமாமணிமாட நெடுமுகட்டின் சூலிகைபோம்
திங்கள்மாமுகில் துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும்
பைங்கண்மால்விடையடர்த்துப் பனிமதிகோள் விடுத்துகந்த
செங்கண்மாலம்மானுக்கு இழந்தேனென் செறிவளையே. (௩)

அரு.—இரண்டாம்பாட்டு. (அரியித்யாதி) "வரையெடுத்த பெருமானுக்கு" என்கின்றாய்; (க) "மது ராம் ப்ராப்ய கோவிந்த: கதம் கோகுலமேஷ்யதி-மதுராம் ப்ராப்யகோவிந்த: கதம்கோகுலமேஷ்யதி" என்று திருவாய்ப்பாடியில்பெண்களெல்லாம் வளை இழந்தார்களேயென்ன; மதுரையிலும் தொடர்ந்து போந்தேனென்கிறாளென்று ஸங்கதி.

"அரி" என்று - மா, என்றாய், அத்தாலே கறுப்பை லக்ஷித்தருளிச்செய்கிறார் (கறுப்பானது) என்று. மாடங்களழகிலும், படுக்கை வாய்ப்பிலும் ஈடுபட்டு களிறு தருபுணர்ச்சிகொடுத்து வளை இழவாமை சொல்லுகிறாளென்று பாட்டுக்குத் தொகுத்தகருத்து. ... ... ... ... ... (உ)

(க) வி-பு-ரு-கஅ-கசு.

| பதம். | உரை. |
|---|---|
| துங்க | ஶ்ரேஷ்டமாய், |
| மா | பெருவிலையனான |
| மணி | ரத்நங்களையுடைய |
| மாடம் | க்ருஹங்களினுடைய |
| நெடு | நீண்ட |
| முகட்டின் | உச்சியிலிருக்கிற |
| சூலிகை | கூச்சானது, |
| போம் | (ஆகாசத்தில்) போகாநின்ற |
| திங்கள் | சந்த்ரனையும் [டைய |
| மா | பெரியவடிவையு |
| முகில் | மேகங்களையும் |
| துணிக்கும் | பேதிக்கும்படியான |
| திருக்கண்ணபுரத்துறையும், | |
| பைங்கண் | பசுமையானகண்களையுடையதுகளாய் |
| மால் | பெரியவடிவையுடையதுகளான |
| விடை | எருதுகளை |
| அடர்த்து | அழியச்செய்து, |
| பனி | குளிர்ச்சியைபண்ணக்கடவனான |
| மதி | சந்த்ரனுடைய |
| கோள் | க்ஷயத்தை |
| விடுத்து | போக்கி (அதனால்) |
| உகந்த | உகப்பையுடையனாய் |
| செங்கண் | புண்டரீகாக்ஷனாய் |
| மால் | வ்யாமோஹமுடையனா |
| அம்மானுக்கு | ஸர்வேஶ்வரனுக்கு[ன |
| என் | என்னுடைய |
| செறி | ஒருகாலும் கழற்றவொண்ணாமல் அமைந்த |
| வளை இழந்தேனே. (௩) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (துங்கமித்யாதி) ஓக்கத்தையுடைத்தாய், பெருவிலையனான ரத்நங்களையுடைய மாடங்களிலுண்டான சூலமானது. (திங்களித்யாதி) சந்த்ரனையும், பெரியவடிவையுடைய மேகங்களினுடையவும் கீழ்வயிற்றை பேதி(ஶேதி)க்கிற திருக்கண்ணபுரத்துறையும்.

---

அ௩.—மூன்றாம்பாட்டு. (துங்கமித்யாதி) நீ தொடர்ந்து மதுரையில் செய்த அபதானத்தில் ஈடுபட்டாலும் (௧) "நகரஸ்த்ரீகலாலாபமதுஶ்ரோத்ரேண பாஸ்யதி- நகரஸ்த்ரீ கலாலாபமதுஸ்ரோத்ரேண பாஸ்யதி" என்கிற பதினாறுமாயிரவர்பேச்சில் பிச்சேறியிராளோ? உன்மேலே மாலேறுமவளோவென்ன, (௨) "பின்னைகொல்" என்கிறபடியே நான் நப்பின்னையைப்போலே, "அவனேமாலேறும்படியிருந்தவளன்றோ? நானும் அவனை இழக்க வழக்குண்டோ" என்னும் கருத்தாலே விண்டுகொண்டத்தைச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"சூலும்" என்றது - மகுடங்களின்கூச்சு. போந்திங்கள் - போகிற திங்கள் என்னுமதுஸ்பஷ்டமென்று மேலுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (சந்த்ரனையுமித்யாதி).

---

(௧) வி-பு-ரு-௧௮-௧௪. (௨) தி-வாய்-௩-ரு-௧௦.

(பைங்கண்மாலித்யாதி) பசுமையையுடைத்தான கணகளையுடையவுமாய், பெரியவடிவையுடையவுமாயிருக்கிற ருஷபங்களை அழியச்செய்து, குளிர்ச்சியைப் பண்ணக்கடவனான சந்த்ரனுக்கு வந்தக்ஷயத்தைப்போக்கி, அதுதன்னைத் தன்பேறாக நினைத்திருக்கிற புண்டரீகாக்ஷனான ஸர்வேஸ்வரனுக்கு ஒருகாலும் கழற்ற வொண்ணாத வளையை இழந்தேன். .... .... .... .... .... (௩)

மூ.—கணமருவுமயிலகவு கடிபொழில்சூழ் நெடுமறுகில்
திணமருவுகனமதிள்சூழ் திருக்கண்ணபுரத்துறையும்
மணமருவு தோளாய்ச்சி யார்க்கப் போயுரலோடும்
புணர்மருதமிற நடந்தாற்கிழந்தேனென் பொன்வளையே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| கணம் | ஸமூஹமானது |
| மருவும் | அதிகமாயிருந்துள்ள |
| மயில் | மயில்களானவை |
| அகவும் | ஆடாநிற்பதுமாய், |
| கடி | பரிமளத்தையுடைய |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ் | சூழப்பட்டதாய், |
| நெடு | பெரிதான [தாய் |
| மறுகில் | திருவீதிகளையுடைத் |
| திணம் | தார்ட்ட்ய ([illegible]) த் |
| மருவும் | பொருந்தின [தால் |
| கனம் | க(ந)நமான |
| மதில் | ப்ராகாரத்தாலே |
| சூழ் | சூழப்பட்டதுமான |
| | திருக்கண்ணபுரத்துறையும், |
| மணம் | க (ந்) ந்தத்ரவ்யங்களாலே |

| பதம். | உரை. |
|---|---|
| மருவும் | வ்யாப்தமான |
| தோள் | திருத்தோள்களையுடைய |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டியானவள் |
| ஆர்க்க | கட்ட (உடனே) |
| உரலோடும் | உரலோடு |
| போய் | போந்து |
| புணர் | ஒன்றாய் இணைந்துக் கொண்டிருக்கிற |
| மருதம் | மருதவ்ருக்ஷங்கள் |
| இற | முறிந்துவிழும்படி |
| நடந்தாற்கு | நடந்த எம்பெருமானு [க்கு |
| என் | என்னுடைய |
| பொன் | ச்லாக்யமான |
| | வளை இழந்தேனே. (௪) |

''கோள்'' என்று-சிறையாய், வ்யாதியாலுண்டான சிறை-க்ஷயமென்றருளிச் செய்கிறார் (சந்த்ரனுக்கு மித்யாதி). ... ... ... ... (௩)

அநு.—நாலாம்பாட்டு. (கணமருவித்யாதி) நப்பின்னையிடத்திற்போலே மாலேறியிருந்தவனுக்கு என்னுநின்றாய்; அவன் ஆஶ்ரிதகரஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தில் அதிச(ஞ)பலனாகையாலே கட்டுண்டானோ? தெரியாதே நீ இங்ஙனே புலம்புவானென்னென்ன; அந்தகட்டோடேதானே விரோதியைப்

வ்யா—காலம்பாட்டு. (கணமித்யாதி) திரள்மிக்கிருந்துள்ள மயில்களானவை தன்னுடைய ப்ரீதியாலே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுநிற்பதுமாய், பரிமளப்ரசுரமான சோலையையுடைத்தாய், பெரியதிருவீதிகளை யுடைத்தாய், திண்மைமிக்கிருக்கையாலே அரணாகப்போரும்படியான மதிளையுடைத்தாயிருந்துள்ள திருக்கண்ணபுரத்துறையும்.

(மணமித்யாதி) பிள்ளைபக்கல் பரிவாலே எப்போதுமொக்க கந்த(ஃத)த்ரவ்யங்களாலே அலங்கரிக்கப்பட்ட தோள்களையுடையயசோதைப் பிராட்டிபோல்வார் பந்தி(ஃதி)த்தவற்றை அறுத்துக் கொடுபோகையன்றிக்கே கட்டினஉரலையும் இழுத்துக்கொண்டுபோய். பக(ஃக)தத்தாதிகள்விட்ட அஸ்த்ரங்களாகிலிறே நேரே மார்வைக்காட்டி நிற்பது. பரிவுடையளாய் கட்டினதுக்குப் பண்ணலாவதொரு ப்ரதிக்ரியை இல்லை. ஆகையால் அத்தையும் இழுத்துக்கொடுபோய் இரண்டென்ன வொண்ணாதபடி நிர்விவரமாயிருக்கிற மருதுகள் முறிந்து விழும்படியாகப்போன முக்த(ஃத)னுக்கு என்னுடைய ஸ்லாக்யமான வளை இழந்தேன். .... .... .... .... (௪)

மூ.—வாயெடுத்த மந்திரத்தா லந்தணர்தம் செய்தொழில்கள்
தீயெடுத்து மறைவளர்க்கும் திருக்கண்ணபுரத்துறையும்
தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடித்தயிருண்ட
வாய்துடைத்த மைந்தனுக்கு இழந்தேனென்வரிவளையே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வாய் எடுத்த | உச்சஸ்வரமாகச்சொல்லப்பட்ட | மறை | வேதமர்யாதையை |
| மந்திரத்தால் | மந்த்ரங்களாலே | வளர்க்கும் | வளர்த்துக்கொண்டு போருகிற |
| அந்தணர் | ப்ராஹ்மணர்கள் | | திருக்கண்ணபுரத்துறையும், |
| தம் | தங்களுக்கு | தாய் | தாயான யசோதைப் பிராட்டி |
| செய்தொழில்கள் | கர்த்தவ்யமான கர்மங்களை | எடுத்த | கையிலே எடுத்த |
| தீ | அக்நிகளை | சிறு | சிறிதான |
| எடுத்து | ஜ்வலிப்பித்து(செய்து) | கோலுக்கு | கொம்புக்கு |

நோக்கினவனுக்கு வரத்தட்டுண்டோவென்று * உரவிடையாப்புண்ட வண்ணத்தைப் பேசுகிறாளென்று ஸங்கதி.

"அகவுகை" ஆடுகையாய், அத்தையருளிச்செய்கிறார் (ஸஸம்ப்ரமேத்யாதி). "மறுகில்" என்று - வீதிக்குப்பெயர். "திணம்" - திண்மை. (௪)

| | | | |
|---|---|---|---|
| உளைந்து | பயந்து | துடைத்த | தடவிக்கொள்ளுகிற |
| ஓடி | ஓடிச்சென்று | மைந்தனுக்கு | ஸ்வாமிக்கு |
| தயிர் | தயிரை | என் | என்னுடைய |
| உண்ட | அமுதுசெய்த | வரி | ஶ்ரேஷ்ட்டமான |
| வாய் | முகமெங்கும் | | வளை இழந்தேனே. (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வாயெடுத்த மந்திரத்தால்) உச்ச ஸ்வரமாக ப்ரயோகிக்கிறமந்த்ரங்களாலே ப்ராஹ்மணர் தங்களுக்குக் கர்த்தவ்யமானபடியாலே அக்நியை ஜ்வலிப்பித்து வைதிகமர்யாதையை நோக்கிக்கொண்டுபோருகிற திருக்கண்ணபுரத்திலே வர்த்திக்கிற.

(தாயித்யாதி) அநுகூல ஸ்பர்ஶமுள்ள த்ரவ்ய மொழியச் செல்லாமையாலே வெண்ணெயையும் பாலையும் களவிலே அமுது செய்ய, அவை ஈட்டப்பட்ட வருத்தத்தாலே யசோதைப் பிராட்டி கையிலே கோலைக்கொள்ள "அவள் தாயிறே, அச்சமுறுத்துகைக்குச் செய்த செயலிறே" என்றறிய மாட்டாதே ஈடுபட்டோடி அமுது செய்த தயிரைக்காட்டி "நீ களவுகண்டாய்" என்பர்களென்று பார்த்து அத்தை இல்லை செய்கைக்காக முகமெங்கும் தடவிக்கொள்ளுகிற இளிம்பனுக்கு நான் இளிம்புபட்டேன்.

மூ.—மடலெடுத்தநெடுந்தாழை மருங்கெல்லாம் வளர்பவளம்
திடலெடுத்துச் சுடரிமைக்கும் திருக்கண்ணபுரத்துறையும்
அடலடர்த்தன்றிரணியனை முரணழிய வணியுகிரால்
உடலெடுத்தபெருமானுக் கிழந்தேனென்னொளிவளையே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மடல் | மடல்களை | வளர் | வளராநின்றுள்ள |
| எடுத்த | எடுத்துக்கொண்ட | பவளம் | பவளமானது |
| நெடும் | நீளமான [தான | திடல் | மேடுகளிலே |
| தாழை | தாழைகளை யுடைய | எடுத்து | படர்ந்து |
| மருங்கெல்லாம் | பக்கங்களிலெல்லாம் | சுடர் | ஒளியால் |

அந.—அஞ்சாம்பாட்டு. (வாயித்யாதி) "ஒருத்தி கையிலே கட்டுண்டும், அவள் விரோதியைப்போக்கி அவளுக்குத் தன்னைத்தந்தவன், இவ்வளவான எனக்கும் உதவானோ" என்று அவனுடைய பவ்யதையிலேதுவக்குண்டு என் வளை இழந்தேனென்கிறாளென்று ஸங்கதி.

(ஈட்டப்பட்ட) திரட்டப்பட்ட. ... ... ... ... ... (௫)

| | | | |
|---|---|---|---|
| இமைக்கும் | ப்ரகாஸியாநின்ற | அணி | அழகான |
| திருக்கண்ணபுரத்துறையும், | | உகிரால் | நகங்களாலே |
| அடல் | யுத்தத்திலே | உடல் | (அவனுடைய) ஶரீரத்தை |
| அடர்த்து | நெருக்கி | எடுத்த | பே (ஙீ) தித்தவனை |
| அன்று | அந்த ஸமயத்திலே | பெருமானுக்கு | ஸர்வேஶ்வரனுக்கு |
| இரணியனை | ஹிரண்யனுடைய | என் | என்னுடைய |
| முரண் | மிடுக்கானது | ஒளி | ப்ரகாஸியாநின்ற |
| அழிய | அழியும்படியாக | | வளை இழந்தேனே. (கூ) |

வ்யா.—ஆறும்பாட்டு. (மடலித்யாதி) மடலினுடைய ஒக்கத்தையுடைத்தான நெடிதான தாழைகளையுடைத்தான பரிஸரமெல்லாம் வளர்பவளமானது திடல்களிலே மூடப்படர்ந்து ப்ரகாசத்தைப்பண்ணுநின்றுள்ள திருக்கண்ணபுரத்துறையும். யுத்தத்திலே நெருக்கி, அன்று ஹிரண்யன் மிடுக்கழியும்படியாகப் பிராட்டிமாரும் கண்டுகொண்டிருக்கும்படியாக உகிராலே அவனுடைய சரீரத்தை பே(ஙீ)தித்து, த்தன்னுடையயீஶ்வரத்வத்தைநிலைநிறுத்தினவனுக்கு என்பருவத்திலே ஒருவனுக்கு உதவினவனன்றோ என்றிருந்தாயிற்று வளையிழந்தது. .... .... .... .... .... (கூ)

மூ.—வண்டமரும் மலர்ப்புன்னை வரிநீழலணிமுத்தம்
தெண்டிரைகள் வரத்திரட்டும் திருக்கண்ணபுரத்துறையும்
எண்டிசையு †மெழுகடலுமிருநிலனும் பெருவிசும்பும்
உண்டுமிழ்ந்த பெருமானுக்கிழந்தேனென்னொளிவளையே. (எ)

---

அரு.—ஆறும்பாட்டு. (மடலித்யாதி) சிறுகோலுக்கு உளைந்தோடும்படியானமுக்தனுமிற்று அவன்; நீயும் "வாயில்பல்லு மெழுந்தில" என்கிறபடியே பேதைப்பருவமாயாயிற்றிருப்பது, "வளை இழக்கும்படி வந்ததென்" என்ன; "ஒருத்தன் வாசியறிந்து திருநாமம்சொல்லி, அவன் விரோதியை அழித்தவனன்றோ? நானும் அவன் வைலக்ஷண்யத்தாலே இப்பருவத்திலும் துஸ்ஸஹமான விரஹத்தாலே நோவுபட்டால் வந்ததோன்றுணோ" என்றாயிற்று வளை இழந்ததென்று சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"மடலையெடுத்த" என்ற சப்தார்த்தமாய், பலிதமருளிச்செய்கிறார் (மடலித்யாதி). அணி - அழகாய், பலிதார்த்தம் (பிராட்டிமாருமித்யாதி). உட்கருத்தை யருளிச்செய்கிறார் (என்னித்யாதி). .... ... ... (கூ)

---

† (பா)-எழுகடலும்.

| பதம். | உரை. |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| அமரும் | படிந்திருக்கிற |
| மலர் | புஷ்பங்களையுடைய |
| புன்னை | புன்னைமரத்தினுடை[ய |
| வரி | இருண்ட |
| நீழல் | நிழலினுடைய (நடுவில்) |
| அணிமுத்தம் | வெளியான ப்ரதேசங்களிலே |
| தெண் | தெளிவான |
| திரைகள் | நீர்களானவை |
| வரா | முத்துக்களைக் கொடுவந்து |
| திரட்டும் | சேர்க்காநிற்பதான |
| திருக்கண்ணபுரத்துறையும், | |
| எண்திசையும் | எட்டுத்திக்குக்களையும், |
| எழு | எழாநிற்கிற |
| சுடரும் | (ஆதித்யாதி) தேஜஸ்ஸுகளையும், |
| இரு | பரப்பை யுடைத்தான |
| நிலனும் | பூமியையும், |
| பெரு | விசாலமான |
| விசும்பும் | ஆகாசத்தையும் |
| உண்டு | (ப்ரளயகாலத்தில்) விழுங்கி (பிறகு) |
| உமிழ்ந்த | (வெளிநாடுகாண) உமிழ்ந்தவனான |
| பெருமானுக்கு | ஸர்வேஶ்வரனுக்கு |
| என் | என்னுடைய |
| ஒளி | ப்ரகாசமான |
| வளை இழந்தேனே. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (வண்டமருமித்யாதி) வண்டுபடிந்த பூக்களையுடைத்தான புன்னையினுடைய வரிநீழலிலே ஓரிடம் வெளியாய், ஓரிடம் நிழலாயிருக்குமாயிற்று; அதில் வெளியான ப்ரதேசங்களிலே தெளிந்த நீர்களானவை முத்துக்களைக்கொடுவந்துதிரட்டா நிற்குமாயிற்று.

(எண்டிசையுமித்யாதி) எட்டுத் திகுக்களையும், எழுவகைப்பட்ட கடல்களையும்; "எழுசுடரும்" என்று பாடமானபோது ஏழாநிற்கிற ஆதித்யாதிகளையும் நினைத்ததாகிறது. பரப்பையுடைத்தான பூமியையும் இவற்றுக்கெல்லாம் அவகாச ப்ரதானம் பண்ணுகிற ஆகாசத்தையும், ப்ரளயகாலத்திலே எடுத்துவைத்துப் பின்னே

---

அரு.—ஏழாம்பாட்டு. (வண்டித்யாதி) ஒருசிறுக்கனுக்காக ஒருகால் உதவினதைக்கொண்டு வளைஇழப்பாருண்டோவென்ன; ப்ரளயாபத்ஸகனன்றோ எல்லாரையும் ரக்ஷித்தவனன்றோ வென்றுகிடாய் நான்வளையிழந்ததென்கிறாளென்று ஸங்கதி.

நிழலிலும், முத்துக்களைத் திரட்டில் பரபாகமாயிராதென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (அதுவித்யாதி). ... ... ... ... ... (எ

வெள்ளாடகொண உமிழ்ந்த ஸர்வேஶ்வரனுக்கு இழந்தே னென்வரி வளையே. அவனுடைய ஆபத்ஸகத்வத்தை விஶ்வஸித்துக் கிடாய் நான்கெட்ட தென்கிறாள். .... .... .... .... .... (எ)

மூ.—கொங்குமலிகருங்குவளை கண்ணுகத்தெண்கயங்கள்
செங்கமலமுகமலர்த்தும் திருக்கண்ணபுரத்துறையும்
வங்கமலிதடங்கடலுள் வரியரவினணைத்துயின்ற
செங்கமலநாபனுக் கிழந்தேனென் செறிவளையே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொங்கு | பரிமளத்தாலே | தடம் | விசாலமான |
| மலி | வ்யாப்தமாய் | கடலுள் | ஸமுத்ரத்திலே |
| கரும் | கறுத்தநிறத்தை யுடைத்தான | வரி | தர்சநீயமான |
| | | அரவின் | திருவநந்தாழ்வானாகிற |
| குவளை | குவளைப்பூக்களை | அணை | படுக்கையில் |
| கண்ணாக | கண்களாகக்கொண்டு | துயின்ற | கண்வளர்ந்தருளுகிற வனாய், |
| தெண் | தெளிந்த | | |
| கயங்கள் | பொய்கைகளானவை | செம் | சிவந்த |
| செம் | சிவந்த | கமலம் | கமலத்தை |
| கமலம் | தாமரைப்பூவாகிற | நாபனுக்கு | நாபியிலேயுடைய பத்மநாபனுக்கு |
| முகம் | முகத்தை | | |
| அலர்த்தும் | விகஸிப்பியாநின்ற | என் | என்னுடைய |
| திருக்கண்ணபுரத்துறையும், | | செறி | (கையில்) அமைந்திருக்கிற |
| வங்கம் | மரக்கலங்களாலே | | |
| மலி | வ்யாப்தமாய் | வளை இழந்தேனே. | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கொங்கித்யாதி) பரிமளப்ரசுரமாய், கறுத்தநிறத்தையுடைத்தாயிருந்துள்ள குவளைப்பூக்களைக் கண்ணு

அ௩.—எட்டாம்பாட்டு. (கொங்கித்யாதி) ப்ரளயகாலமாகையாலே எல்லாரையும் ரக்ஷித்தான்; உனக்கு இப்போதென்ன ப்ரளயம்வந்தது வளை இழக்கைக்கென்ன; எனக்கு விரஹத்தை யுண்டாக்கினான் அவனே யென்று அவ்வழியாலே எல்லாவற்றையு முண்டாக்கின திருநாபீகமலத்தை நினைத்தாளென்று ஸங்கதி.

குவளையைக் கண்ணாக நிரூபித்து கமலத்தை முகமாக நிரூபித்தால், இரண்டுக்கும் யுகபத்விகாஸம் சொல்லக்கூடாமையால் "செங்கமல முகமலர்த்தும்" என்றதுக்கு செங்கயலமாகில் முகம் அலர்த்து மென்ன வொண்ணு

க்கொண்டுதெளிந்த பொய்கைகளானவை சிவந்த †தாமரைப் பூக்களாகிறமுகத்தை அலர்த்தாநின்றுள்ள திருக்கண்ணபுரத்துறையும்.

(வங்கமலியித்யாதி) மரக்கலங்களால் மிக்கிருப்பதாய் கண்வளர்ந்தருளுகைக்கீடான பரப்பையுடைத்தாயிருக்கிற கடலிலே தர்ஶநீயமான வடிவையுடையனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற சிவந்த கமலத்தையுடைத்தான திருநாபியையுடையவனுக்கு உத்பாதகனை விஸ்வஸித்து முடிந்தேனென்கிறாள்.

மூ.—வாராருமிளங்கொங்கை நெடும்பணைத்தோள் மடப்பாவை
சீராரும்வரைமார்பன் திருக்கண்ணபுரத்துறையும்
பேராளனாயிரம் பேராயிரவாயரவணைமேல்
பேராளர்பெருமானுக் கிழந்தேனென் பெய்வளையே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| வார் | கச்சாலே |
| ஆரும் | தாங்கப்பட்டதாய் |
| இளம் | இளமையை யுடைத்தான |
| கொங்கை | ஸ்தநங்களை யுடையளாய், |
| நெடும் | நீண்ட |
| பணை | மூங்கில்போலே |
| தோள் | தோளையுடையளாய், |
| மடம் | பவ்யையான |
| பாவை | பெரிய பிராட்டியார் (வர்த்திக்கையாலுண்டான) |
| சீர் | ஸம்பத்தாலே |
| ஆரும் | வ்யாப்தமாய் |
| வரை | மலைபோல் த்ருடமான |
| மார்வன் | திருமார்வை யுடையவனாய் |
| திருக்கண்ணபுரத்துறையும், | |

| பதம். | உரை. |
|---|---|
| பேராளன் | (அதனால்) பெருமையையுடையனாய், |
| ஆயிரம் | ஆயிரமான |
| பேர் | திருநாமங்களை (ஸ்தோத்ரம் பண்ணுகிற) |
| ஆயிரம் | ஆயிரமான |
| வாய் | முகங்களையுடைய |
| அரவணைமேல் | திருவநந்தாழ்வான் மேல் (பள்ளிகொண்டிருக்கிற) |
| பேராளர் | பெருமையை யுடையவனான |
| பெருமானுக்கு | எம்பெருமானுக்கு |
| என் | என்னுடைய |
| பெய் | ஶ்லாக்யமான |
| வளை | இழந்தேனே. (க) |

* தென்று,செங்கமலம்போலே யிருக்கிற ஸ்த்ரீகளுடைய முகத்தை அலர்த்துமென்றருளிச் செய்கிறார் (சிவந்தவித்யாதி). (தாமரைப்பூக்களை) என்றவகந்தரம் "போலே" என்றுசேஷம். ... ... ... ... ... (அ)

† இங்கு அரும்பதத்துக்கு அநுகுணமாயில்லை.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வாராளுமித்யாதி). வாராலே தாங்கப்பட்டிருப்பதாய், இளமையை யுடைத்தாயிருக்கிற கொங்கைகளை யுடையளாய், நெடியபணைபோலே யிருக்கிற தோள்களை யுடையளாய், ஆத்மகுணோபேதையாய், நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தை யுடையளாயிருக்கிற பெரியபிராட்டியார் வர்த்திக்கையாலே யுண்டான ஸம்பத்தை யுடைத்தாய், வரைபோலே திண்ணியதான திருமார்வையுடையவன். (திருக்கண்ணபுரத்துறையும் பேராளன்) திருக்கண்ணபுரத்திலேவந்து ஸுலபனாகையால்வந்த ஏற்றத்தை யுடையவன்.

(ஆயிரம்பேரித்யாதி) தூங்குமெத்தைபோலே அசையாநின்றுள்ள திருவநந்தாழ்வான் மடியிலே ஏறட்டுக்கொண்டுஆயிரவாயாலும் அநுபவத்துக்குப் பாசுரமான ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி ஸ்தோத்ரம பண்ணுகையால் வந்த பெருமையுடையவனுக்கு, யசோதைப்பிராட்டி தன் மடியிலே வைத்துக்கொண்டு ஆடுமாபோலேயாயிற்று. (இழந்தேனென் பெய்வளையே) தன்னையொழியச் செல்லாமை யுடையார்க்குத் தன்னைக் கொடுக்குமவனன்றோ?, நம் செல்லாமை பரிஹரியானோவென்று விஸ்வஸித்து வளையிழந்தேனென்கிறாள். .... .... .... .... .... (க)

மூ.—தேமருவுபொழில் புடைசூழ் திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனைமறிகடல்சூழ் வயலாலி வளநாடன்
காமருசீர்க்கலிகன்றி கண்டுரைத்த தமிழ்மாலை
நாமருவி யிவைபாட வினையாய நண்ணாவே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தே | மதுவால் | பொழில் | சோலைகளாலே |
| மருவும் | வ்யாப்தமான | சூழ் | சூழப்பட்ட |

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வாராளுமித்யாதி) "ஸகல ஜகத்துத்பாதகன்றானே உண்டாக்கினவிரஹம் அநுபவிக்கத் தீருமத்தனை, அவனேவருமளவும் ஆறியிருக்கவேணுங்காண்" என்ன; "தன்னைப்பிரியமாட்டாதாரைப் பிரியாமலிருக்கவில்லையோ, என்னைப் பிரித்து வைப்பானென்" என்று வளைஇழந்தேனென்கிறாளென்று ஸங்கதி.

(பணைபோலே)மூங்கில்போலே. "ஆயிரம்பேருடையஆயிரவாய்" என்றவிசேஷித்ததுக்குக்கருத்து (தூங்கித்யாதி). ... ... ... ... (க)

| | | | |
|---|---|---|---|
| புடை | பர்யந்தங்களையுடைய, | சீர் | ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயை யுடையரான |
| திருக்கண்ண புரத்து | திருக்கண்ணபுரத் திலே [கிற | கலிகன்றி | ஆழ்வார் |
| உறையும் | நித்யவாஸம்பண்ணு | கண்டுரைத்த | க்ருபையால் அருளிச் செய்த |
| வாமனனை | வாமநன்விஷயமாய், | | |
| மறி | மறிப்பியாநின்ற | தமிழ்மாலை இவை | இந்தத் தமிழ்த் தொடையை |
| கடல் | ஸமுத்ரத்தாலே | | |
| சூழ் | சூழப்பட்டதாய், | நா | நாவிலே |
| வளம் | வளமையையுடைய | மருவி | பொருந்தும்படி |
| வயல் | வயல்களையுடைத் தான | பாட | பாட |
| ஆலிநாடன் | திருவாலி நாட்டை யுடையராய், | வினையாய | ஸஹ்ருதயமாகப்பண் ணின பாபங்களும் |
| காமரு | ஆசைபண்ணத்தக்க | நண்ணுவே | கிட்டாதுகள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேமருவுமித்யாதி) தேன்மிக்கிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட பர்யந்தத்தை யுடைத்தான திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற வாமநனையாயிற்றுக் கவிபாடிற்று. தன்னுடையபேற்றுக்குத் தான் அர்த்தியாய் வருமவனாயிற்று. (மறியித்யாதி) சப்தியாநின்றுள்ள கடலாலே சூழப்பட்டிருப்பதாய் பரந்த வயலையுடைத்தான ஆலிநாட்டையுடையராய், எல்லார்க்கும் ஸ்ப்ருஹைபண்ணவேண்டும்படியான ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயை யுடையரான ஆழ்வார் அருளிச்செய்த இந்த தமிழ்த்தொடையை நாவிலே பொருந்தும்படிபாட, ஸஹ்ருதயமாகப்பண்ணின பாபங்களும் விட்டுப்போம்; உக்திமாத்ரத்தைச் சொல்ல புத்தி(புத்தி)பூர்வகமாகப் பண்ணின பாபங்கள் கிட்டாவென்கிறார். .... .... .... .... .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து மூன்றாந்திருமொழி முற்றிற்று.



அரு.—பத்தாம்பாட்டு. (தேமருவுமித்யாதி) "வாமனன்" என்றதுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (தன்னுடைய வித்யாதி). ஆஸ்ரிதர்பேறே தன்பேறென்று கருத்து. ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



# எட்டாம்பத்து நாலாந்திருமொழி

## விண்ணவர் தங்கள் ப்ரவேசம்.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

வ்யா.—(விண்ணவரித்யாதி) இப்பிராட்டி தன் இழவைச் சொல்லி பரவசையாய் விழுந்துகிடந்தாள்; தளர்த்தியாலே உடம்பு க்ருஶமாய், குழலும்பேணுதே பூவும் மறுத்துக்கிடக்குமிறே. இத்தை யறியாதே பழைய வாஸனையைக்கொண்டு மதுபாநம்பண்ணுவதாகச் சிலதும்பிகள் வந்து பறந்தன; அத்தைப்பார்த்து (க) "वाहि वात यतः कान्ता तां स्पृष्ट्वा मामपि स्पृश - வாஹி வாத யத: காந்தா தாம்ஸ்ப்ருஷ்ட்வாமாமபிஸ்ப்ருஶ" என்னுமாபோலே மதுவுக்ுக் க்ருஷியைப்பண்ணி மதுபாநம் பண்ணப்பாராயென்கிருள். *

மூ.—விண்ணவர் தங்கள் பெருமான் திருமார்வன்
மண்ணவரெல்லாம் வணங்கும் மலிபுகழ்சேர்
கண்ணபுரத் தெம்பெருமான் கதிர்முடிமேல்
வண்ணநறுந்துழாய் வந்தூதாய் கோற்றும்பீ. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோல்தும்பீ | கோல்களிலேவர்த்திக்கிற தும்பியே? | புகழ் | ஶீலாதிகுணங்கள் |
| விண்ணவர் தங்கள் | நித்யஸூரிகளுக்கு | சேர் | சேர்ந்திருக்குமவனும், |
| பெருமான் | நிர்வாஹகனும், | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற |
| திரு | பெரியபிராட்டியாரை | எம்பெருமான் | ஸர்வேஶ்வரனுடைய |
| மார்வன் | திருமார்வில் தரிப்பவனும், | கதிர் | ப்ரகாசியாநின்ற |
| மண்ணவரெல்லாம் | லீலாவிபூதியிலுள்ளாரெல்லாம் | முடிமேல் | திருவபிஷேகத்தின் மேலே |
| வணங்கும் | தொழும்படியாய், | வண்ணம் | வர்ணத்தையும், |
| மலி | அதிகமான | நறும் | பரிமளத்தையும் (உடையதான) |

அநு.—விண்ணவரின் ப்ரவேசம். (மறுத்து) மற்றுமறுத்தென்றபடி. நாயகனுடையமாலையில் பரிமளத்தைக்கொடுவந்தூதினால் விரஹதாபம் தீர்ந்து பூவில் மதுசேர்ந்தால் உண்ணப்பார்க்கிற தாத்பர்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறூர் (அத்தையித்யாதி). ... ... ... ... *

(க) ரா-ஆ.

| | | | |
|---|---|---|---|
| துழாய் | திருத்துழாயிலே (படிந்து அங்குத்தை பரிமளத்தைக் கொண்டு) | வந்து | இங்கேவந்து |
| | | ஊதாய் | ஊதவேணும். (ச) |

வ்யா.—முதற்பாட்டு. (விண்ணவர் தங்கள் பெருமான் திருமார்வன்) நித்ய ஸூரிகளும் பிராட்டிமாரும் அநுபவிக்கிற விஷயமிதுவன்றோ? நான் உன்னைக் குடிக்கச்சொல்லுகிற வேப்பங்குடிநீர். (க) * சூட்டு நன்மாலைகள் தூயனவேந்திக்கொண்டு நித்யஸூரிகள் அடிமை செய்யப்பிராட்டியும் தானுமாய் இருக்குமாயிற்று. (மண்ணவரெல்லாம் வணங்கும்) நித்யவிபூதியிலுள்ளாரெல்லாரும் அதிகாரிகளாயிருக்குமா போலேயாயிற்று இங்குள்ளாருமெல்லாம் அதிகாரிகளாம்படியாகத் தான்வந்து நிற்கிறநிலை. அங்கு அநதிகாரிகள் ஒருவருமில்லாதாப்போலே இங்கு எத்தனையேனும் தாழ்ந்தாரும் அதிகாரிகளாம்படியாக வாய்த்துவந்து நிற்கிறது.

(மலிபுகழ்சேர்) சிலகுணம் ஸத்கார்யவாதம் கொண்டு அறிய

அரு.—முதற்பாட்டு. (விண்ணித்யாதி) "கோற்றும்பி துழாயில் படிந்து வந்ததென்று சொல்லுகைக்கு இங்கேமதுமாறியிராதோ?, உன்னைப்பிரிந்திறே அவனிருப்பது" என்று அக்குறையில்லை அவனுக்கென்னுமது தோற்ற ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (நித்யேத்யாதி). "தங்கள்" என்று விசேஷித்ததத்தாலே நிரதிசயபோக்ய வஸ்துவினநுபவத்தாலுண்டான தானுனதன்மை தோற்றுகையால் அதுக்குக்கருத்து (இதுவித்யாதி). ஸூரிகள் அநுபவிக்கும் விஷயமானால் எனக்கென்ன ; பூவும் மதுவுமுண்டாகிலன்றோ நான்போவதென்ன; அதுக்கும் குறையில்லையென்று தாத்பர்யமருளிச் செய்கிறார் (சூட்டித்யாதி). இத்தால் செவ்விப் பூச்சூடுவாரும் சூட்டிக்கொள்ளுகைக்கு உடலாக ஒருசேர்த்தியுண்டாயிருக்க, மதுவெள்ளமிருக்கும்; இங்கே சூட்டுவாருமின்றியே சூடினதும் செருகாயிருக்கையாலே உனக்கு அநுபவிக்க அவகாசமில்லை யென்றதாயிற்று. ஸூரிபோக்யனை ஶ்ரிய꞉ பதியை நான்கிட்டுவதெங்ஙனேயென்னுமபிப்ராயத்தில் "மண்ணவரித்யாதி" என்றுவிவக்ஷித்துத் தாத்பர்யம் (நித்யவிபூதியிலித்யாதி).

இங்கே "மலிபுகழ்" என்கைக்குப்பரமபதத்தில்மலிவில்லையோவென்ன; (சிலவித்யாதி). (ஸத்கார்யவாதம்) என்றது - முன்புண்டானதுக்கே கார்யத்வாஉவஸ்த்தாபத்தியென்று நிர்ணயிக்கும் வாதமென்றபடி. (அரிய

(க) திருவிரு-உக.

வேண்டும்படியாயிருக்கும். அங்கு ப்ரமாணங்கள்சொல்லவறியுமித்தனை. இங்கு எத்தனையேனும் தாழ்ந்தார்க்கும் முகம்கொடுத்துக் கொடுநிற்கிற நிலையைக்கண்ணாலேகாண்கையாலே அதுஸ்பஷ்டமாவது இங்கேயாயிற்று. (கதிர்முடிமேல்) இப்படி உபயவிபூதிக்கும் கவித்ததாகையாலே ஒளியையுடைத்தாயிருக்கிற திருவபிஷேகத்தின்மேலே. (வண்ணநறுந்துழாய்) செவ்விமாறாதே பரிமளத்தையுடைத்தாயிருக்கிற திருத்துழாயிலே படிந்து அங்குத்தைபரிமளத்தைக் கொடுவந்து இங்கே ஊது. (கோற்றும்பி) கோல்களிலும் பணைகளிலும் வைத்தமதுவைப்பாநம் பண்ணக்கடவ உன்னை. (க) "ஸர்வரஸ: - ஸர்வரஸ:' என்கிறவஸ்துவைப்போய் அநுபவி" என்றன்றோ சொல்லுகிறது. .... .... .... .... .... (க)

ஃஉ.—வேதமுதல்வன் விளங்குபுரிநூலன்
பாதம்பரவிப் பலரும் பணிந்தேத்தி
காதன்மைசெய்யும் கண்ணபுரத்தெம்பெருமான்
தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோற்றும்பீ. (உ)

---

வேண்டும்படியாய்) என்றது-முன்புண்டானதே கார்யமாயிற்றென்னுமாபோலே அர்ச்சாவதாரத்தில் சீலகுணம் காணப்பட்டதாகையால் பரமபதத்திலும் தர்மைக்ய நிபந்தநமாகவுண்டென்று அநுமாநவிதயா அறியவேண்டும்படியாயென்கை. அநுமாந ப்ரமாணமே யன்றியே சப்தப்ரமாணமுமுண்டென்கிறார் (ப்ரமாணங்களித்யாதி). ப்ரத்யக்ஷமே இங்கு அமையுமென்று ஏற்றமருளிச் செய்கிறார் (இங்கித்யாதி). "துழாய்" என்றவநந்தரம் "படிந்து" என்று சேஷம்பூரித்தருளிச் செய்கிறார் (செவ்வியித்யாதி). இத்திருமொழியில் மலர் செருகாயிருக்கும்படியை உரைத்ததும் வந்தூதசெவ்வி பெற்றிருப்பதாகச் சொல்லுமதுவும், தும்பிகளைப்போகச் சொல்லிற்றும் ஸ்வாபதேசத்தில் இவ்விபூதியில் சப்தாதி விஷயங்களின் நிஸ்ஸாரதையும், பகவதநுபவத்தின் நிரதிசய ஸாரவத்தையும் சிஷ்யர்க்கு அறிவிப்பித்தமையாகக்கொள்வது. (க)

அந.—இரண்டாம்பாட்டு. (வேதமுதல்வனித்யாதி) "மண்ணவரெல்லாம் வணங்கும்" என்னுநின்றாய்; மண்ணவரில் தேவதாந்தரங்களையும் வணங்காதிற்கக்காணுநின்றோமென்ன; (உ) "மானிடவரல்லர்" என்கிறபடியே அஸத்துக்களை மண்ணவரென்றும் சொல்லப்போகாது, வைதிகரெல்லாம்

---

(க) சாந்தோ-ஙு-கச-ச. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| வேதமுதல்வன் | வேதப்ரதிபாத்யனான முதன்மையை யுடையனாய், |
| விளங்கு* | (திருமேனியில்) விளங்காநின்ற |
| புரிநூலன் | திருயஜ்ஞோபவீதத்தை யுடையனாய், |
| பலரும் | எல்லாரும் |
| பாதம் | திருவடிகளை |
| பரவி | பரக்கச்சொல்லி |
| பணிந்து | ஸேவித்து |
| எத்தி | ஸ்துதித்து (அதனால்) |
| காதன்மை | ஸ்நேஹத்தை |
| செய்யும் | பண்ண(ப்ராப்த)னான |
| கண்ணபுரத்தெம்பெருமான், [ய் | |
| தாது | தாதுகளையுடைத்தா |
| நறும் | பரிமளத்தையுடைய தான |
| துழாய் | திருத்துழாயிலே |
| தாழ்ந்து | அவகாஹித்து |
| ஊதாய்கோற்றும்பி. (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வேதமுதல்வன்) புருஷர்கள் தங்கள் ஆஶ்ரயங்கள் தோற்றச் சொன்னவஸ்துவைப் பற்றச் சொல்லுகிறேனோ? ஆகமாதிகளாலே சொல்லப்படுகிற வஸ்துவைப்பற்றச் சொல்லுகிறதன்று. அபௌருஷேயமாகையாலே நிர்தோஷமான வேதைக ஸமதிகம்யனாகையால் வந்த ப்ராதாந்யத்தை யுடையவன்; (விளங்குபுரிநூலன்) (க) "ഹിരണ്മയഃ പുരുഷഃ - ஹிரண்மய: புருஷ:" என்கிறபடியே அழகிய விக்ரஹத்தையும் அதிலே விளங்காநின்றுள்ள திருயஜ்ஞோபவீதத்தையு முடையவன்.

(பாதமித்யாதி) திருவடிகளை அக்ரமமாக எத்தி அதிலே விழுந்து எல்லாரும் ஸ்தோத்ரம்பண்ணி ஸ்நேஹத்தைப் பண்ணுகிற. (உ) "നിദിധ്യാസിതവ്യഃ- நிதித்யாஸிதவ்ய:" என்று விதிக்கிற விஷயத்திலேயன்றோ நான் உன்னைப்பற்றச் சொல்லுகிறது. (தாதித்யாதி) பூத்துச் செவ்வியை யுடைத்தாயிருக்கிற திருத்துழாயிலேதாழ்ந்து இங்கேவந்து ஊதவேணும். .... .... .... .... .... (உ)

---

இவனையே தொழுவர்களென்னுநின்றுகொண்டு வேதவேத்யத்வம் சொல்லுகிறானென்று ஸங்கதி.

(தங்கள் ஆஶ்ரயங்கள் தோற்றச் சொன்னவஸ்துவை) என்றது- தங்கள் ஆஶ்ரயங்களானவற்றுக்கு மாஹாத்ம்யமுண்டானதாகத்தோற்ற வஸ்துவான தேவதாந்தரத்தை யென்றபடி. விவரணம் (ஆகமேத்யாதி). (உ)

---

(க) சாந்தோ-க-கூ-சு. (உ) ப்ரு-சு-ரு-சு.

அவ.—மூன்றாம்பாட்டு. ப்ரஸ்துதமான ராமாவதாரம் பின்னாட்டினபடி சொல்லுகிறது.

வ்யா.(வல்லியித்யாதி)கொடிபோன்றஇடையையுடையபிராட்டிக்காகக் கடலை அகழாகவுடைத்தாய், மதிளையுடைத்தான லங்கையிலுள்ளார்க்கு நான் நியாமகனல்லேனோ வென்றிருக்கிறவனை. (அல்லல்செய்து) தேரை அழித்து, வில்லைமுறித்து, அவன் முதுகுகாட்டும்படிபண்ணி எளிவரவு படுத்தினபடியைச் சொல்லுகிறது. யுத்தத்திலே இன்றுபோய் நாளைவாவென்னவல்ல வில்வலியையுடையவன். (ஆற்றல்மிகுத்த) வலிமிகுத்தபெரியோன்; கைபுகுந்த சத்ருவைக்கடுக முடித்துவிடாதே, இன்றுபோய் நாளைவாஎன்றானிறே. நீ இளைத்த ஸமயத்திலே உன்னை அழிக்கை போராதுகாண். (க) "ஆஶ்வாஸ்ய - ஆஶ்வாஸ்ய" இவன் இளைத்தால் தன் பரிகரத்திலுள்ளாரை ஆஶ்வஸிப்பிக்குமாபோலே நீ போய் ஆஶ்வஸித்துவாவென்றானிறே.

(வல்லாளித்யாதி) பருவம்நிரம்புகிறதற்குமுன்னே செய்த செயல் இதுவன்றோ? (வல்லாளரக்கர் குலப்பாவைவாட) வலிய ஆண்மையையுடைய ராக்ஷஸஜாதிக்காகக் கண்காட்டியானவள்முடியும்படியாக. (முனியித்யாதி) ருஷியினுடைய யாகத்தை. ஸ்ரீபரசுராமாழ்வானைவென்று தன்னதானவில்லை வாங்குவதற்குமுன்பே பிடித்தவில்லைக்கொண்டு காத்தானார். .... .... .... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (வல்லியித்யாதி) (ப்ரஸ்துதமான) என்றது - முதற்பாட்டில் ப்ரஸ்துதமானவென்கை. "நீர்மதிளிலங்கை" என்றதன்வயித்தர்த்தம் (கடலையித்யாதி). "ஆற்றல்" என்று வலிமையாகக்கீழருளிச்செய்து க்ருபையாக விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் (நீஇளைத்தவித்யாதி). (க) "ఆశ్వాస్యని ర్యాహిరక్షసధన్వీ తదాబలం ద్రక్ష్యసిమేరథస్థః - ஆஶ்வாஸ்யநிர்யாஹி ரதீஸதந்வீததாபலம் த்ரக்ஷ்யஸிமே ரதஸ்த்த:" என்று உக்தார்த்தத்தை ப்ரமாண ப்ரதர்ஶநபூர்வகமாக விவரிக்கிறார் (ஆஶ்வாஸ்யேத்யாதி).

ஒருவீரத்தை யநுஸந்தித்து மீளவும் ஒருவீரத்தை அநுஸந்தித்தவர்க்குக்கருத்து (பருவமித்யாதி). "பாவை" மரப்பாவை; அத்தைப்போலே தர்ஶநீயை என்று விவக்ஷித்தருளுகிறார் (கண்காட்டியான) என்று. "கல்விச்சிலை" தநுர்வித்யாப்யாஸதசையில் சிலையென்றாய், இப்படி விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (ஸ்ரீ பரசுராமாழ்வானையித்யாதி). ... ... (௩)

(க) ராமா-யுத்த-ருக-சசச.

மூ.—மல்லைமுந்நீரதர்படவரிவெஞ்சிலைகால் வளைவித்துக்
கொல்லைவிலங்குபணிசெய்யக் கொடியோனிலங்கைபுகலுற்றுத்
தொல்லைமரங்கள்புகப்பெய்து துவலைநிமிர்ந்து வானணவக்
கல்லால்கடலை யடைத்தானூர்கண்ணபுரம் நாம்தொழுதுமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொடியோன் | க்ரூரனான ராவணனுடைய | பணி | கைங்கர்யத்தை |
| இலங்கை | இலங்கையில் | செய்ய | பண்ணும்படியாகவும், |
| புகல் | ப்ரவேசிப்பதை | தொல்லை | பழையதான |
| உற்று | உத்தேசித்து, | மரங்கள் | வ்ருக்ஷங்கள் [யாக |
| மல்லை | அதிகமான | புக | (பதியுண்டு) புகும்படி |
| முந்நீர் | மூன்றுவகைப்பட்ட ஜலத்தையுடைய கடலானது | பெய்து | (ஸமுத்ரத்திலே) ப்ரவேசிப்பித்து |
| அதர்பட | வழிபடும்படியாக | துவலை | ஜல பிந்துக்களானது க |
| வரி | (அழகான) வரிகளையுடையதாய், | நிமிர்ந்து | கிளர்ந்து [ள் |
| வெம் | வெம்மையை யுடைய | வான் | ஆகாசத்தில் |
| சிலைகால் | தநுஸ்ஸை [தான | அணவ | ஸ்பர்சிக்கும்படியாகவு, |
| வளைவித்து | வளைத்தும், | கல்லால் | மலைகளாலே [ம் |
| கொல்லை | அரண்யங்களிலுண்டான கிளைகளிலே திரியாநின்ற | கடலை | ஸமுத்ரத்தை |
| விலங்கு | வாநரங்கள் | அடைத்தான் | கட்டினவனான சக்ரவர்த்தித் திருமகனுக்கு |
| | | ஊர் | வாஸஸ்தாநமான |
| | | கண்ணபுரம் நாம்தொழுதுமே. (ச) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (மல்லைமுந்நீரதர்பட) "மல்லை"என்று-மிகுதி. ஜலராசியாய்மூன்றுவகைப்பட்டஜலத்தையுடைத்தான கடலானதுவழிபட; (க)"అప్రమేయో మహోదధిః- அப்ரமேயோமஹோத

அநு.—நாலாம்பாட்டு. (மல்லையித்யாதி) கீழ்ப்பாட்டில் சக்ரவர்த்தித் திருமகனுடைய வீரரஸத்தில் ஈடுபட்டுப் பேசினாராய், அவ்வளவன்றிக்கே கடலைவற்றக் கோல்தொடுப்பது, குரங்கைக்கொண்டு பணிகொள்வது, கல்லை மிதக்கப்பண்ணுவதான அத்புதரஸத்தில் ஈடுபடுகிறாரென்று ஸங்கதி.

"மல்லை" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அப்ரமேய

(க) ரா-யு-கக-ருக.

திஃ'' என்று ஒருவராலும் பரிச்சேதிக்கவரிதான கடலானது வழிப் பட. (வரிவெஞ்சிலைகால்வளைவித்து) தர்ஶநீயமான வரிகளையுடைத் தாய், பிடித்தபிடியிலே எதிரிகள் அஞ்சும்படியான வெம்மையை யுடைத்தான வில்லைவளைத்து. (கொல்லைவிலங்கு பணிசெய்ய) ஒரு காலும் பூசல்கண்டறியாதே என்றுமொக்கப்பணையிலே திரியக்கடவ குரங்குகள் பணிசெய்ய; அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்த(X்ஜ)ரான திரு வடிதிருவநந்தாழ்வான் துடக்கமானார் செய்யக்கடவகைங்கர்யத்தை இடக்கை வலக்கைவாசியறியாத திர்யக்குக்கள்செய்ய. (கொடியோ னிலங்கை புகலுற்று) அவன்பண்ணினக்ரௌர்யத்தைத்திருவுள்ளத் தாலே முன்னேட்டுக்கொண்டு கொடியோனென்கிறார். ஜநகனும் ஜநநியும் ஓரிடத்திலேயிருக்கப் பொறாத க்ரௌர்யமிறே. [இலங்கை புகலுற்று மல்லைமுந்நீர் அதர்பட வரிவெஞ்சிலைகால் வளைவித்துக் கொல்லைவிலங்கு பணிசெய்யக் கல்லால் கடலை யடைத்தானூர்].

(தொல்லைமரங்கள் புகப்பெய்து) இதுக்குமுன்பு பறியுண்டறி யாத பழைய மரங்களடையப்பறியுண்டுபோம்படி அதிலேப்ரவேசிப் பித்து. (துவலைநிமிர்ந்துவானணவ) அடைக்கிறபோதைத் திவலைக ளானவை கிளர்ந்து ஆகாசாவகாசத்தை இடமடைக்க, நீரிலே இட் டால் ஆழக் கடவமலைகளைக்கொண்டு கடலையடைத்த சக்ரவர்த்தித் திருமகனுக்கு வாஸஸ்தாநமான. .... .... .... .... (ச)

மூ.—ஆமையாகி யரியாகி யன்னமாகிஅந்தணர்தம்
ஓமமாகி யூழியாகி§ உவரிசூழ்ந்தநெடும்புணரிச்
சேமமதிள்சூழிலங்கைக் கோன்சிரமும் கரமும்துணித்துமுன்
காமன்பயந்தான் கருதுமூர்கண்ணபுரம்நாம்தொழுதுமே.(ரு)

இத்யாதி) .(க) ''''[Grantha text] - பத்யாம்யாந்து ப்லவங்கமா ஃ'' என்றத்தைக் கடாக்ஷித்து வழிப்படயென்றது'' என்று திருவுள்ளம்பற்றிச் சார்த்தமருளுகிறார் (தர்ஶநீயேத்யாதி). கொல்லை - வரம்பில்லாத நிலமாய், அத்தாலே காட்டை விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (ஒருகாலுமித்யாதி). பணை - சாகை. கொல்லென்றது -மர்யாதை யில்லாமையைச் சொல்லுகிறது என்று விவக்ஷித்துத் தாத்பர்யாந்த்ர மருளுகிறார் ( அஸ்ப்ருஷ்டேத்யாதி ). அந்வயம் காட்டுகிறார் (இலங்கையித்யாதி). ... ... ... ... (ச)

(க) ரா-யு-உக-உஉ. § (பா)-உலகுசூழ்ந்த.

| பதம். | உரை. |
| --- | --- |
| ஆமையாகி | கூர்மரூபமாய், |
| அரியாகி | நரஸிம்ஹரூபமாய், |
| அன்னமாகி | ஹம்ஸரூபமாய், |
| அந்தணர்தம் | ப்ராஹ்மணர்களுடைய |
| ஓமமாகி | யாகரூபமாய், |
| ஊழியாகி | காலரூபமாய், |
| நெடும் | விசாலமாய் |
| உவரி | உப்புமயமான |
| புணரி | கடலாலே |
| சூழ்ந்த | சூழப்பட்டதாய் |
| சேமம் | காவலான |
| மதிள் | மதிளாலே |
| சூழ் | சூழப்பட்டதான |

| பதம். | உரை. |
| --- | --- |
| இலங்கை | இலங்கைக்கு [டைய |
| கோன் | ராஜாவான ராவணனு |
| சிரமும் | தலைகளையும் |
| கரமும் | தோள்களையும் |
| துணித்து | அறுத்தவனை சக்ர வர்த்தித் திருமக |
| முன் | முன்பு [னாய் |
| காமன்பயர்தான் | காமனுக்கு உத்பாதகனுமானக்ருஷ்ணன் |
| கருதும் | விரும்பிவர்த்திக்கிற |
| ஊர் | திவ்யதேசமான |

கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (ஆமையித்யாதி) ஆஶ்ரித ரக்ஷணம் ஒருதலையானால் தன்னைப்பேணுதே ரக்ஷிக்கும் ஸ்வபாவனாயிற்று. (ஆமையாகி) கூர்மரூபமாய். (அரியாகி) ஹயக்ரீவமாய்; ஸிம்ஹமென்றுமாம். (அன்னமாகி) இழந்தவேதசக்ஷுஸ்ஸை மீட்டுக் கொடுக்கைக்காக அன்னமாய், ப்ராஹ்மணருடைய ஹவிஸ்ஸுக் கொள்வான்தானேயிறே. காலமே சேஷித்திருந்துள்ள காலமாகி. ஒருவருமில்லாதவன்றுதான் உளனாயிருக்குமிறே. (உவரியித்யாதி) ஓங்கினதிரைகளை யுடைத்தான உவரியான கடலாலே சூழப்பட்டிருப்பதுமாய், ஒருவராலும் ப்ரவேசிக்க வரிதான மதிளையுடைத்தான லங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய தலைகளை அறுப்பது, தோள்களைத் துணிப்பதாய்க்கொண்டு போதுபோக்காகக் கொன்றபடி. (முனனித்யாதி) நர்ட்டைத்தன் வடிவாலே பகட்டித்

அரு.—அஞ்சாம்பாட்டு.(ஆமையித்யாதி). இழ்ப்பாட்டில்அத்புதரஸத்தை யநுஸந்தித்து அவ்வளவன்றிக்கே சக்ரவர்த்தித் திருமகனுடையரௌத்ரரஸத்தை அநுஸந்திக்கப்பார்த்து, முன்னும் பின்னுமுண்டான அவதாரங்களில் வித்யாப்ரதாந போக (ஓ^X) ப்ரதாநங்களிலுண்டான சாந்திரஸ ஶ்ருங்கார ரஸங்களையும் சேர்த்து அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

"நெடுமுவரிப்புணரியாலே சூழ்ந்த" என்றந்வயம் திருவுள்ளம்பற்றிசப்தார்த்தமருளுகிறுர் (ஓங்கினவித்யாதி). "சேமம்"என்றதுக்குத்தாத்பர்யம் (ஒருவராலுமித்யாதி). ... ... ... ... ... ... ... (ரு)

திரிகிற காமனுக்கும் உத்பாதகனை க்ருஷ்ணன் விரும்பி வர்த்திக்கும் தேசம். "உலகு" என்றுபாடமாகில் லோகத்தைச் சூழ்ந்த பெரிய கடலென்றபடி. .... .... .... .... .... (௫)

மூ.—

வருந்தாதிருநீ மடநெஞ்சேநம்மேல் வினைகள்வாராமுன்
திருந்தாவரக்கர் தென்னிலங்கைச் செந்தீயுண்ணச் சிவந்தொருநாள்
பெருந்தோள்வாணற்கருள்புரிந்து பின்னைமணாளனாகிமுன்
கருந்தாள்களிறொன் றொசித்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மடநெஞ்சே | ஸாதுவான மநஸ்ஸே | ஒருநாள் | ஒருகாலத்தில் |
| நீ | நீ | பெரும் | அதிகமான |
| வருந்தாது | க்லேசியாமல் | தோள் | புஜங்களையுடையனான |
| இரு | இருக்கக்கடவை; | வாணற்கு | பாணாஸுரன் விஷயத்தில் |
| நம்மேல் | நம்பக்கல் | அருள் | க்ருபையை |
| வினைகள் | பாபங்கள் | புரிந்து | பண்ணுகிறவனாய், |
| வாரா | வரமாட்டாது, | பின்னை | நப்பின்னைப் பிராட்டிக்கு |
| முன் | முன்னே | மணாளனாகி | வல்லபனுமாய், |
| திருந்தா | திருந்தாமலிருக்கிற | முன் | முன்னே |
| அரக்கர் | ராக்ஷஸருடைய | கரும் | கறுத்திருக்கிற |
| தென்னிலங்கை | தெற்கிலுள்ள இலங்கையை | தாள் | கால்களையுடைய |
| செம் | சிவந்த | களிறுஒன்று | ஒருகுவலயாபீடத்தை |
| தீ | ஜ்வாலையை யுடைய அக்நியானது | ஒசித்தான் | நிரஸித்தவனான கண்ணனுடைய |
| உண்ண | புஜிக்கும்படியாக | ஊர் | திவ்யதேசமான |
| சிவந்து | சீறினவனாய், | கண்ணபுரம்நாம் தொழுதுமே. (௬) | |

வ்யா.—ஆறம்பாட்டு. (வருந்தாதிருநீ) பூர்வவ்ருத்தத்தை அநுஸந்தித்து "நாமென்படக்கடவோம்" என்று க்லேசியாதே நிர்ப்பயமாக விருக்கப்பார். (மடநெஞ்சே) ஸாதுவான நெஞ்சே! உன்

அரு.—ஆறம்பாட்டு. (வருந்தாதித்யாதி) கீழ்ப்பாட்டுக்களில் தொண்டருக்கு உபதேசித்துவிட்டு ப்ரஸ்துதமான ராமக்ருஷ்ணாவதாரங்களில் விரோதி நிரஸந சீலதையை நெஞ்சுக்கும் அறிவிக்கிறாரென்று ஸங்கதி.

லையே பார்த்து பகவத்ப்ரபாவமொன்றையும் பாராத நெஞ்சே!. பாபங்களைக் கூடுபூரித்துவைத்து வருந்தாதிருக்கும்படி யெங்ஙனே யென்னில் ; (நம்மேல்வினைகள்வாரா) "நாம்பண்ணினவையன்றோ" என்று அவை நம்பக்கல் வந்துகிட்டவற்றோ ? ; ந்யஸ்தப (ஶ்ர) ரரை கணியமாட்டாவிறே. (க) "நயவேனித்யாதி" (உ) "ஆரேயித்யாதி" சொல்லிக்கொள்வது. அவன் ஏறிட்டுக்கொண்டு போக்க ஆங்கேகண்டோமென்னில் (முன்னித்யாதி) பிராட்டி தன்ப்ரதிபந்தகத்தைப்போக்குகைக்குத்தான்யத்நித்ததுண்டோ? ப்ரதிபந்தகம் ப்ரபலமானதனையும் அவனுக்குக் கார்யம் செய்தோமம்படி யன்றோ அவன்படி. மால்யவான்போல்வார் சொன்னஹிதத்துக் குக்கேளாத ராக்ஷஸருடைய லங்கையை. (செந்தீயுண்ண) முன்பு ராவணபயத்தாலே பாகாதிகளுக்கு வேண்டுவதுவஞ்சரித்துஉடம்பு வெளுத்திருக்கக்கடவ அக்நி தன்நிறம் பெற்று புஜிக்கும்படியாக, (சிவந்து) சிறி.

(பெருந்தோள் வாணற்கருள்புரிந்து) அநேகம் தோள்படைத்தோமென்று அபிமாநித்திருக்கிற பாணனுடைய தோள்களாயிரத்தையும் துணித்து, அவனுக்கு தேஹயாத்ரை நடத்தும்படியாக இரண்டு கையைக்கொடுத்தானாயிற்று. நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனுமாய் முன்கறுத்துத்திண்ணிதான தாளையுடைய குவலயாபீடத்தை அநாயாஸேந முறித்தானூர். .... .... .... (சு)

ரு.—இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய் முதலைதன்னாலடர்ப்புண்டு
கொலையார்வேழம்நடுக்குற்றுக்குலைய வதனுக் கருள்புரிந்தான்
அலைநீரிலங்கைத் தசக்ரீவற்கிளையோற் கரசையருளிமுன்
கலைமாச்சிலையா லெய்தானூர் கண்ணபுரம்நாம் தொழுதுமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொலையார் | மதித்துக்கிடக்கிற | ஆர் | வ்யாப்தமாய் |
| வேழம் | யானையானது, | மலர் | விகஸிதமான |
| இலை | இலைகளால் · | பூம் | புஷ்பங்களையுடைய |

நாம்பண்ணினால் நம்மைக்கிட்டவன்றோ வடும்பதென்ன வருளுகிறார் (ந்யஸ்தேத்யாதி). இருந்தாவென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (மால்ய வானித்யாதி). தீயாகில் சிவந்திராதோ? "செம்" என்று விசேஷிப்பானேனென்ன வருளிச்செய்கிறார் (முன்பித்யாதி). ... ... ... ... (சு)

(க) க-திருவ-கச- (உ) கூ-திருவ-உஎ.

| பதம். | உரை. |
| --- | --- |
| பொய்கைவாய் | ஸரஸ்ஸிலே(புக்குஅங் |
| முதலைதன்னால் | ஒருமுதலையால்[குள்ள) |
| அடர்ப்புண்டு | நெருக்குண்டு |
| நடுக்குற்று | நடுக்கமுற்றதாய் |
| குலைய | ஒருவ்யாபாரமின்றிக்கே இருக்கும்போது |
| அதனுக்கு | அந்த ஆனையின்விஷயத்தில் |
| அருள்புரிந்தான் | க்ருபைபண்ணினவனாய், [ற) |
| அலை | அலைகளை (எறியாநின் |
| நீர் | ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட |
| இலங்கை | இலங்காநகரத்துக்கு (ராஜாவான) |
| தசக்ரீவற்கு | ராவணனுடைய |
| இளையோற்கு | தம்பியானவிபீஷணாழ்வானுக்கு |
| அரசை | லங்காராஜ்யத்தை (கொடுத்து) [ய் |
| அருளி | க்ருபைபண்ணினவனு |
| முன் | (அதுக்கு) முன்னே |
| கலை | மாயாம்ருகத்தை |
| மா | பெரிதான |
| சிலையால் | தநுஸ்ஸினால் |
| எய்தான் | முடித்தவனான எம்பெருமானுடைய |
| ஊர் | திவ்யதேசமான |
| கண்ணபுரம்நாம் தொழுதுமே. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (இலையித்யாதி) இலைகளால் மிக்கிருப்பதாய் பரப்புமாறப்பூத்து தர்ஶநீயமான பொய்கையிலே போய்ப்புக்கு ஒரு ஜலசரஸத்வத்தாலே நெருக்குண்டு மதித்துக் கொடு திரிகிற ஆனையானது விழுக்காடறியாதே வேற்றுநிலத்திலே புக்கு அகப்பட்டு தன்வ்யாபார மற்று முதலையினுடைய வ்யாபாரமேயாய் அத்தாலே நடுங்கிக்குலைய, அவ்வவஸ்த்தையிலே வந்து உதவினான்.

(அலைநீரித்யாதி) ராவணன் பண்ணினப்ராதிகூல்யம் தம்பியளவும் வந்தேறுவதாயிருக்கச் செய்தேயும் அத்தைப்பாராதே அவன் தம்பிக்கு ராஜ்யத்தைக்கொடுத்தானாயிற்று; அதுக்கு முன்பு தமயனுடைய வைரத்துக்குஹேதுவாய்க்கொண்டுவந்தமாயாம்ருகத்தை ஓரம்பாலே முடித்தவன். .... .... .... .... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (இலையித்யாதி) துஷ்டமான ஓரானையைக் கொன்றத்தைக் கீழ்ப்பாட்டிலருளிச் செய்தார். அந்தப்ரஸங்கத்திலே அநுகூலமான ஆனையைக்காத்தமைதோற்ற அத்தையும், ராமாவதாரத்தில் அபதாநத்தையும் நெஞ்சுக் கறிவிக்கிறாரென்று ஸங்கதி.

முதலையென்னாதே "தன்னால்" என்றத்தாலே நிகர்ஷம்தோற்றுமென்று விவக்ஷித்தருளுகிறார் (ஒருஜலசரஸத்வத்தாலே) என்று. ... ... ... (எ)

மூ.—மாலாய் மனமே யருந்துயரில் வருந்தாதிருநீ வலிமிக்க
காலார்மருதும் காய்சினத்தகழுதும் கதமாக் கழுதையும்
மாலார்விடையும் மதகரியும் மல்லருயிரும் மடிவித்து
காலால்சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே.

| பதம். | உரை. |
|---|---|
| மாலாய் | பிச்சேறின |
| மனமே | நெஞ்சே |
| நீ | நீ |
| அரும் | (அநுபவித்து) தலைக்கட்டவொண்ணாத |
| துயரில் | துக்கங்களில் |
| வருந்தாது | க்லேஶியாமல் |
| இரு | இரு; |
| மிக்க | அதிகமான |
| வலி | பலத்தையுடைத்தாய் |
| காலார் | வேரூன்றியிருந்துள்ள |
| மருதும் | மருதவ்ருக்ஷங்களையும் |
| காய்சினத்த | அதிகமானசீற்றமுடையனான [யும் |
| கழுதும் | பேயான பூதனையை |
| கதம் | கோபத்தையுடைய |
| மா | குதிரையையும், |
| கழுதையும் | கழுதையையும், |

| பதம். | உரை. |
|---|---|
| மாலார் | பெரியவடிவையுடைத்தான |
| விடையும் | வ்ருஷபங்களையும், |
| மத | மதத்தையுடைத்தான |
| கரியும் | குவலயாபீடத்தையும், |
| மல்லர் | (சாணூரன்முதலான) மல்லர்களுடைய |
| உயிரும் | ப்ராணன்களையும் |
| மடிவித்து | நிரஸித்தவனாய், |
| காலால் | திருவடிகளால் |
| சகடம் | சகடாஸுரனை |
| பாய்ந்தான் | (துகளாய்ப் போம்படி) நிரஸித்தவனுமான க்ருஷ்ணனுடைய |
| ஊர் | திவ்யதேசமான |
| கண்ணபுரம்நாம் தொழுதுமே. (அ) | |

அநு.—எட்டாம்பாட்டு. (மாலாயித்யாதி) இழ்ப்பாட்டில் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு (க) [illegible]- திவ்யம் வர்ஷஸஹஸ்ரம்" என்று பதினாயிரம் ஸம்வத்ஸரம் க்லேசப்பட்டு ஸ்வயத்நநிவ்ருத்தி பிறந்தபின்வந்து உதவினன்; ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு(உ) "[illegible]- த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச" என்று ப்ராப்யாபாஸங்களையும்விட்டு சரணம் புகுருகையாலே அரசளித்தான்; எனக்கங்ஙனே யிருப்பதொரு நிலையுமின்றிக்கே (ங) "[illegible]-சஞ்சலம் ஹிமநః" என்கிறபடியே நின்றவாநில்லாதஸ்வபாவத்தை யுடைத்தாயிருக்கை உண்டாகையாலே எங்ஙனே வந்திருப்பதென்ன; பாஞ்சாலிக்கு விரோதிகளென்று பேர்பெற்றவற்றை யெல்லாம்

(க) வி-தர்ம-கூக-சக. (உ) ரா-யு-கஎ-கக. (ங) கீ-கூ-ஙச.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாலாயித்யாதி) "முன்பு பண்ணின பாபங்களை அநுஸந்தித்து என்படக்கடவோம்" என்று பிச்சேறின நெஞ்சே அநுபவித்துத் தலைக்கட்டவொண்ணாத துக்கங்களில் நீ க்லேசியாதிரு. என்கொண்டு வருந்தாதிருப்பதென்றால் (வலியித்யாதி) அவன்படி இதுவன்றோ? மிக்க பலத்தையுடைத்தாய் வேரூன்றியிருந்துள்ள மருதும், மிக்க சீற்றத்தை யுடைத்தாயிருக்கிற பூதனையும்; கோபத்தையுடைத்தாயிருந்துள்ள குதிரையும், கழுதையும், பெரியவடிவையுடைத்தான வ்ருஷபங்களும், மதத்தையுடைத்தான ஆனையும், மலைதுள்ளினாப்போலே கிளர்ந்துவருகிற மல்லருடைய ப்ராணன்களும் இவற்றையடைய நிரஸித்து முலைவரவு தாழ்த்ததென்று சீறிநிமிர்த்த திருவடிகளுக்கு இலக்காய் சகடாஸுரன் துகளாய்ப் போம்படி பண்ணினவன். .... .... .... .... (அ)

மூ.—குன்றால்மாரிபழுதாக்கிக் கொடியேரிடையாள் பொருட்டாக
வன்தாள்விடையேழன்றடர்த்தவானோர்பெருமான்மாமாயன்
சென்றான்தூதுபஞ்சவர்க்காய்த்திரிகால்சகடம்சினமழித்துக்
கன்றால்விளங்காயெறிந்தானூர்கண்ணபுரம்நாம்தொழுதுமே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குன்றால் | கோவர்த்தநமலையால் | இடையாள் பொருட்டாக | மத்ய (இடை) ப்ரதேசத்தை யுடையளான நப்பின்னைப் பிராட்டிக்காக |
| மாரி | கல்மழையை | வன் | பலிஷ்டமான |
| பழுதாக்கி | வ்யர்த்தமாம்படி பண்ணினவனாய், | தாள் | கால்களையுடைய |
| கொடி | கொடிபோலே | ஏழு | ஏழான |
| ஏர் | அழகையுடைய | விடை | வ்ருஷபங்களையும் |

கையாலும்காலாலும் கொன்றுநின்றக்ருஷ்ணன்படி அதுவாயிருக்க "உனக்கு நிலையுமுண்டாக்குவன்; நீக்லேசிப்பானென்" என்று மீளவும் நெஞ்சைத்தேற்றுகிறார் இரண்டு பாட்டிலுமென்று ஸங்கதி.

காய்தலும்-கோபமாய், சினமும்-கோபமாகையாலே(மிக்கசீற்றத்தை)என்றது. கீழ்ச்சொன்னவற்றுக்குவிசேஷணங்களிட்டு,மல்லர்க்கு விசேஷணமிடாமையாலே இவர்கள் மிடுக்கு ப்ரஸித்தமென்று திருவுள்ளமாகையாலே அதுக்குத் தாத்பர்யம் (மலையித்யாதி). ... ... ... ... ... (அ)

| பதம். | உரை. |
|---|---|
| அன்று | அக்காலத்தில் |
| அடர்த்த | அழியச்செய்தவனாய், |
| வானோர் | நித்யஸூரிகள் பரிய விருக்கும்படியான |
| பெருமான் | மேன்மையை யுடையனாய், |
| மாமாயன் | ஆஸ்சர்ய சேஷ்டிதங்களை யுடையனாய், |
| பஞ்சவர்க்காய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| தூது | தூத (ஸூத்) னாய் |
| சென்றான் | (துர்யோதனன் பக்கலில்) சென்றவனாய், |
| இரி | ஊருகிற |
| கால் | கால்களையுடையனான |
| சகடம் | சகடாஸுரனுடைய |
| சினம் | சினத்தை |
| அழித்து | போக்கினவனாய், |
| கன்றால் | தேநுகாஸுரனால் |
| விளங்காய் | விளவின்காயாக நின்ற வஸுரனை |
| எறிந்தான் | பொகட்டு நிரஸித்தவனுமான க்ருஷ்ணனுடைய |
| ஊர் | திவ்யதேசமான |

கண்ணபுரம்நாம் தொழுதுமே. (௯)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (குன்றாலித்யாதி) மலையைஎடுத்து இந்த்ரன் வ்யாபாரம் வ்யர்த்தமாம்படிபண்ணி, கொடிபோலே அழகிய இடையையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக வலிய தாளையுடைய ருஷபங்களேழையு மழியச் செய்த. (வானோர் பெருமான்) * அயர்வறு மமர்களதிபதி. நித்யஸூரிகள் பரியவிருக்கும் மேன்மையையுடைய தன்னைக்கிடீர் தன்னைப்பேணாதே இவற்றின்காலிலே பொகட்டது. (மாமாயன்) ஆஸ்சர்யசேஷ்டிதங்களை யுடையவன். தன்னைப்பேணாதே கால்நடையே கழுத்திலே ஓலைகட்டிப் பாண்டவர்களுக்காக துர்யோதநன் பக்கலிலே தூதுபோனவன். ஊருகிற காலையுடைத்தான சகடத்தினுடைய சினத்தைப்போக்கி, இருவரும் தங்களிலே க்ருதஸங்கேதராய்வர ஒருவனைக் கொண்டு ஒருவனை நிரஸித்தவன். .... .... .... .... .... .... (௯)

மூ.—கருமாமுகில்தோய் நெடுமாடக் கண்ணபுரத் தெம்மடிகளைத்
திருமாமகளாலருள்மாரிச் செழுநீராலிவளநாடன்
மருவார்புயல்கைக் கலிகன்றிமங்கை வேந்தனொலிவல்லார்
இருமாநிலத்துக்கரசாகி யிமையோரிறைஞ்சவாழ்வாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



அரு.—ஒன்பதாம்பாட்டு. (குன்றாலித்யாதி) ஸ்ரோதாக்களைக் குறித்து வ்யாக்யாதா ஈடுபாடுதோற்றத்தாத்பர்யமருளுகிறார் (நித்யஸூரிகளித்யாதி). (இவற்றின்)விடைகளின். "வலியதாள்" என்றுவிசேஷிக்கையாலே(காலிலே) யென்றது. ... ... ... ... ... ... ... ... (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரு | கறுத்தும் | புயல் | மேகம்போல் ( என்று மொக்கக் குறைவறக் கொடுக்குமதான) [ராய் |
| மா | பெரிதான | கை | திருக்கைகளையுடைய |
| முகில் | காளமேகங்களானது | மங்கை | திருமங்கைக்கு |
| தோய் | தங்கும்படியாய் [கள் | வேந்தன் | ராஜாவுமான |
| நெடு | உயரமான | கலிகன்றி | ஆழ்வார் |
| மாடம் | க்ருஹங்களையுடைய | ஒலி | ஒலியை யுடைத்தாம்படி அருளிச்செய்த இத்திருமொழியை [லவர் |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற | வல்லார் | அப்ய (ஸி) ஸிக்க வல் |
| எம் அடிகளை | என்ஸ்வாமியான க்ருஷ்ணன்விஷயமாய், | இருமாநிலத்துக்கு | பூலோகஸ்வர்க்க லோகங்களுக்கு |
| திருமாமகளால் | பெரிய பிராட்டியாருடைய க்ருபைக்கு பாத்ரரானதால் | அரசாகி | ராஜாவாயிருந்து(பிறகு) |
| அருள்மாரி | அருள்மாரி என்றே திருநாமமுடையராய், | இமையோர் | நித்ய ஸூரிகள் |
| செழு | ஸம்ருத்தமான | இறைஞ்ச | திருவடிகளில் வணங்கும்படியாக |
| நீர் | ஜலத்தையுடைத்தான | வாழ்வாரே | வாழ்வர்கள். (௧௦) |
| ஆலிவளநாடன் | திருவாலிநாட்டை யுடையராய், | | |
| மருவார் | (வர்ஷா காலத்திலுண்டாய்) பூர்ணமான | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கருமாமுகிலித்யாதி) நீர்கொண்டெழுந்தகாளமேகங்கள்வந்து தோயும்படி ஓங்கினமாடங்களையுடைத்தான திருக்கண்ணபுரத்திலே என்ஸ்வாமியைக் கவிபாடிற்று. பெரிய பிராட்டியாருடைய முழுநோக்குக்கு இலக்கானபடியாலே "அருள்மாரி" என்றது தன்னையே திருநாமமுடையராரைாயிற்று. ஜலஸம்ருத்தியையுடைத்தான திருவாலி நாட்டையுடையவர்.

என்று மொக்க உண்டாய், குறைவறவர்ஷிப்பதான புயலுண்டாகிலாயிற்று இவர் கைக்கு ஒப்புச் சொல்லலாவது. என்று மொக்கக் குறைவறக் கொடுக்கிறவர்க்கு காதாசித்கமாகத் தோற்றி ப்ராதேசிகமாக வர்ஷிக்கிறது ஒப்பாகமாட்டாதே. திருமங்கைக்கு

அரு.—பத்தாம்பாட்டு. (கருமாமுகிலித்யாதி) "புயல்"என்று-மேகமாய், அத்தை, "மருவார்" காலத்தோடு பொருந்துதலாலே பூர்ணமான வென்று

ராஜாவான ஆழ்வார் ஒலியையுடைத்தாம்படி அருளிச்செய்த இத் திருமொழியை வல்லார். (இருமாநிலத்துக்கரசாகி) (க) "ஶ்ரீமம் ஸஶோபம் ஸ்வர்க்கும் - பௌமம் மநோரதம்ஸ்வர்க்யம்" என்கிறபடியே அலங்காரங்களை யெல்லாம் பெற்று. (இமையோ ரிறைஞ்சவாழ் வாரே) இவ்வளவிலே போகாதே, பரமபதத்திலே போய்ப் புக்கு (உ) "பதியினில் பாங்கினில்" என்கிறபடி நித்யஸூரிகள் திருவடிகளிலே விழும்படியான பேற்றைப்பெறுவர். .... .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து ஆறாந்திருமொழிமுற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பெரியதிருமொழி எட்டாம்பத்து ஏழாந்திருமொழி
### வியமுடையின் ப்ரவேசம்.

அவ.—"வருந்தாதிரு" என்றார், என்னவாசிகண்டு வருந்தாதிருப்பதென்ன; பரமபதம் நமக்கு ப்ராப்யமாகிறதும் ப்ராப்யனானவன் நித்யவாஸம் பண்ணுகையாலேயன்றோ? ஆனபின்பு பிராட்டிமாரோடு சேதநரோடு ப்ரஹ்மாதிகளோடு வாசியற எல்லார்க்கும் ஒக்கப்ராப்யனானவன்றான் தனக்கு ப்ராப்யமென்று விரும்பி வர்த்

விசேஷித்ததுக்குக்கருத்து (என்றுமொக்கவித்யாதி). (அலங்காரங்களை) என்றது-சத்ர சாமராதி ராஜசிஹ்நங்களை. ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அரு.—வியமுடையின்ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே திருக்கண்ணபுரத்தை ப்ராபகமாகத் தொழச்சொன்னார்; இதில் ப்ராப்யமென்கிறாரென்று விவக்ஷித்து ஸங்கதி யருளுகிறார் (வருந்தாதித்யாதி). (என்னவாசி) என்றது-திருக்கண்ணபுரத்தை ப்ராபகமென்னவே ப்ராப்யமான பரமபதம் கைபுகுந்ததோ வில்லையோவென்கை. ... ... ... ... ... ... *

(க) (உ) தி-வாய்-கo-கூ-கo.

திக்கிற தேசம் திருக்கண்ணபுரம்; ஆனபின்பு நமக்கும் அவ்விடமே ப்ராப்யமென்று அத்தேசத்தை அநுபவிக்கிறார். .... .... .... *

மூ.—வியமுடைவிடையின முடைதர மடமகள்
குயமிடைதடவரை யகலமதுடையவர்
நய†முடைநடையன மிளையவர் நடைபயில்
கயமிடைகணபுர மடிகள்தமிடமே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இளையவர் | (திருக்கண்ணபுரத்தில் வர்த்திக்கும்)ஸ்த்ரீகளுடைய | விடைஇனம் | ஏழ்வ்ருஷபங்களும் |
| நடை | நடையழகை | உடைதர | முறியும்படியாகப்பண்ணி (அதனால்) |
| பயில் | (கற்றுக்கொண்டு)பழகி | மடமகள் | ஆத்மகுணோபேதையானநப்பின்னைப் பிராட்டியின் |
| நயம்உடை | ஆநந்தத்தை விளைவிக்குமதான | குயம் | ஸ்தநங்களாலே |
| நடை | நடையழகையுடைய | இடை | நெருக்கப்பட்டதாய், |
| அனம் | ஹம்ஸங்களையுடையதான | தடம் | விசாலமான |
| கயம் | பொய்கைகளாலே | வரை | மலைபோலிருக்கிற |
| இடை | வ்யாப்தமான | அகலமது | திருமார்வை |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான | உடையவர் | உடையவரான, |
| வியம் | வேறுபாட்டை [து, | அடிகள்தம் | நமக்கு ஸ்வாமியான கண்ணனுடைய |
| உடை | உடையதுகளான | இடம் | வாஸஸ்தாநம். (க) |

வ்யா.— முதற்பாட்டு. (வியமுடை விடையினமுடைதர) "வியம்" என்று வேறுபாடு. அதாகிறது - கம்ஸப்ரேரிதமாய் வந்தவையிறே. அன்றிக்கே, "வியம்" என்று - ஒக்கமாய், பயாவஹமாம்படி மலைபோலே பெரியவடிவை யுடைத்தாயிருந்தபடியைச் சொல்லுதல். இப்படியிருக்கிற வ்ருஷபங்களேழும் பசளைக்கலம்போலே யுடைய. (மடமகளித்யாதி) ஆத்மகுணோபேதையான நப்பின்னைப் பிராட்டியுடைய குயங்களுண்டு - குசங்கள்; திருமுலைத்தடங்கள். அவைநெருக்குகிற மலைபோலே அகன்ற திருமார்பையுடையவன்.

அரு.—முதற்பாட்டு. (வியமுடையித்யாதி) (பசளைக்கலம்) பச்சைப் பானை. (அவைநெருக்குகிற) என்றது - அவற்றாலே நெருக்குண்கிற வென்ற

† அரும்பதாநுகுணமாக "நயமடநடை" என்றிருக்கவேணும்.

அன்றிக்கே, "குயமுடை" என்று பாடமானபோது, "குயமுடைத் தடவரை" என்கிறதை மெலித்து "குயமுடைதடவரை" என்று கிடக்கிறது.

(நயமித்யாதி) கண்டார்க்கு ஆகர்ஷகமாமபடி தர்ஸநீயமான நடையையுடைத்தான அன்னங்களானவை அங்குத்தை வத்ரீகளுடைய நடையிலே குருகுலவாஸம்பண்ணுநிற்குமாயிற்று. (கயமிடை கணபுரமடிகள்தமிடமே) பொய்கைகளாலே நெருங்கியிருந்துள்ள திருக்கண்ணபுரம் நமக்கு ஸ்வாமியானவனுடைய வாஸஸ்தாநம்.

மூ.—இணைமலிமருதினொடெரு திறவிகல்செய்து
துணைமலிமுலையவள் மணமிகு கலவியுள்
மணமலிவிழவினொடடியவரளவிய
கணமலிகணபுரமடிகள்தமிடமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மணம் | கல்யாணகுணங்கள் | இற | இற்றுவிழும்படியாக (நடந்தவனும்,) |
| மலி | மேன்மேல் உண்டாகும்படியான | துணைமலி | அதிகமான சேர்த்தி அழகையுடைய |
| விழவினொடு | திருநாளிலே | முலையவள் | ஸ்தநங்களை யுடையளான நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| அளவிய | அந்யோந்யம் கலத்திருக்கிற | | |
| அடியவர் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய | மணமிகு | ஸ்வயம்வரத்திலுண்டான |
| கணம் | ஸமூஹத்தாலே | | |
| மலி | வ்யாப்தமான [து, | கலவியுள் | ஸம்ஶ்லேஷத்தில் (ஆசையாலே) |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான | | |
| இணைமலி | நன்றாய் சேர்த்தியை யுடைத்தான | எருதினொடு | வ்ருஷபங்களோடே |
| | | இகல் | யுத்தத்தை |
| மருது | மருதவ்ருக்ஷங்களானதுகள் | செய்து | பண்ணினவருமான அடிகள்தம்இடமே. (உ) |

படி. (மெலித்து) மெல்லொத்தாக்கி.

"நயம்" என்று ரஞ்ஜநீயதையும் "மடம்" என்று - மடப்பத்தையுமுடைய நடை என்று லக்ஷணயா இவ்வர்த்தம் விவக்ஷித்தருளுகிறார் (கண்டார்க்கித்யாதி). ... ... ... ... ... ... ... ... (க)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இணைமலி) சேர்த்திமிக்கிருந்துள்ள மருதுகளானவை. இரண்டும் தன்னிலொன்றென்னலாம்படிக்ருத்ஸங்கேதமாய்ப் பொருந்திநிற்கிற மருதுகள், இவன் தவிழ்ந்து போகிற போக்கிலே இற்றுவிழும்படி. (எருதித்யாதி) ருஷபங்களோடே கூட யுத்தம்பண்ணி, சேர்த்தி அழகு மிக்கிருந்துள்ளமுலைத்தடங்களையுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய ஸ்வயம்வரத்திலுண்டான ஸம்ஶ்லேஷம் பெறுகைக்காக. (மணமித்யாதி) கல்யாணங்கள்மேன்மேலுண்டாகிறதிருநாளிலே; அன்றிக்கே, "மணம்" என்றுகை கோக்கைக்குப்பேராய், நெருங்கக்கோத்துக்கொண்டு ஸேவித்துநிற்கிறதிருநாளிலே. (அடியவரளவியகணமலிகணபுரம்)ஶ்ரீவைஷ்ணவர்களுடைய நெஞ்சுகலந்ததிரள் மிக்கிருந்துள்ளதிருக்கண்ணபுரம். மணமிக்க உத்ஸவத்துடனே அடியவர்கூடின வென்றுமாம். (உ)

மூ.—புயலுறுவரைமழை பொழிதரமணிநிரை
மயலுறவரைகுடை யெடுவியநெடியவர்
முயல்துளர்மிளைமுயல் துளவள விளைவயல்
கயல்துளுகணபுரமடி கள்தமிடமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முயல் துளர் | யத்நியாநின்ற களைக்கொட்டுகளை (உடையவர்கள் முகத்திலே) | மிளை | சிறுதூறிலிருந்து) புறப்பட்ட) |
| | | முயல் துள | முசல்களானதுகள் துள்ளும்படியாகவும், |

அரு.—இரண்டாம்பாட்டு. (இணையித்யாதி). கீழ்ப்பாட்டிலே நப்பின்னைப்பிராட்டியும் தானுமாயிருக்கிற சேர்த்தியிலே அடிமைசெய்கிற * மதிமுகமடந்தையர் உண்டாகையாலே வைகுந்தமாநகர்போலே ப்ராப்யமாயிருந்ததென்று அநுபவித்தார்; இதில் இவ்விருவருமான சேர்த்தியிலே * அடியார்குழாங்கள் அடிமைசெய்கிறபடி யுண்டாகையாலே ப்ராப்யமென்றநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

"இகல்" என்றதினர்த்தம் - யுத்தமென்றது. (பெறுகைக்காக) என்றதுக்கு (பண்ணி) என்ற கீழ்பதத்தோடே அந்வயம். (கல்யாணங்கள்) ஒப்பனையால் வந்தரூபகுணங்கள். "அளவிய" என்றதுக்கு அந்யோந்யம் கலந்திருக்கையாக வருளிச்செய்து, திருநாளோடு கலக்கையாக அர்த்தாந்தரமருளுகிறுர் (மணமித்யாதி). "மணமலிவிழவினொடு அடியவரளவியகணமலிகணபுரம்-இணைமலிமருதிற நடந்து - துணைமலிமுலையவள் மணமிகுகலவியுளாகையாலே, எருதினேடு-இகல்செய்திருக்கிறவடிகள் தமிடமே" என்று சிலபதங்களைக் கூட்டிக்கொண்டு அந்வயம் கண்டுகொள்வது. ... ... (உ)

| | | | |
|---|---|---|---|
| வளம் | அழகானது [யான | மணி | (க்ருஷ்ணனேயே ரக்ஷகனுகப் பெறுத லாகிற) அழகை யுடைய |
| விளை | விளையும்படி நேர்த்தி | நிரை | பசுக்கூட்டமானது |
| வயல் | கழனிகளில் (உழுகிற வர்கள்முகத்திலே) | மயல் | (புத்தியில்) மயக்கத்தை |
| கயல் | மத்ஸ்யங்களானதுகள் | உற | அடைந்து (கலங்குமளவில்) |
| துளு | துள்ளும்படியாகவுமிருக்கிற | வரை | கோவர்த்தநமலையை |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான | எடுவிய | எடுத்தவனுய் |
| புயல் | மேகங்களில் [து, | நெடியவர் | ஜகத் ரக்ஷணத்தில் முக்க்யனுன |
| உறு | (இந்த்ரன்) ப்ரவேசித்து | | |
| வரை | கல்மயமான | | |
| மழை | மழையை | | |
| பொழிதர | வர்ஷிக்கும்போது | | அடிகள்தம் இடமே. (ந) |

வ்யா.—மூன்றும்பாட்டு. (புயலித்யாதி) மேகத்திலேபோய் புக்கொன்றி, அவன் கல்வர்ஷத்தைவர்ஷிக்க, இந்த்ரன் கருத்தைப் பின்சென்று வர்ஷிக்குமத்தனையிறே. (மணிநிரைமயலுற) தன்னையே ரக்ஷகனுக வுடைத்தாயிருந்துள்ள பசுநிரையானது அறிவு கெட்டுக்கலங்க. "மணி" என்று - அழகாய், அதாகிறது - அவனும் ரக்ஷிக்கத்தானும் ஒருதலைபற்றுகையன்றிக்கே அவனே ரக்ஷகனும் படியிருக்கை. மலையைக் குடையாகவெடுத்துப் பரிஹரித்து ரக்ஷணத்தில் தன்னை எண்ணினுல் பின்னை ஒருவரில்லாதபடி யிருக்கிறவர்.

அரு.—மூன்றும்பாட்டு.(புயலித்யாதி) கீழ்ப்பாட்டில், அடியார்கள்குழாங்களையுடைய தேசம்போலே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியையுடைய தேசமென்றநுபவித்தார். திருவுள்ளமானது-(க)"பஹுதாஸந்தத து:க்கவர்ஷிணி - பஹுதாஸந்தத து:க்கவர்ஷிணீ" என்கிறபடியே ஜ்பு(ர்)வ துர்திநமேநடையாடுகிற லீலாவிபூதியிலே யிருக்கிற கண்ணபுரத்தை ப்ராப்யமென்கிறபடியென்னென்ன; அரியனசெய்து அவ்வர்ஷத்தைப் போக்குவானுள்ள தேசமாகையாலே ப்ராப்யமென்னக் குறையில்லை யென்கிருரென்று ஸங்கதி.

இந்த்ரன் மேகத்திலேபோய் புகுகையாவதென்னென்ன வருளிச் செய்கிருர் (இந்த்ரனித்யாதி). நெடியவரென்றதுக்குத் தாத்பர்யமருளுகிருர் (ரக்ஷணத்திலித்யாதி).

(க) ஸ்தோத்ரரத்நம்-சக.

(முயல்துளர்மிளைமுயல்துள) யத்நியாநின்றுள்ள துளருண்டு களைக்கொட்டு; அத்தைக்கொண்டு களைபறிக்கிறவர்கள் முகத்திலே, மிளையுண்டு-சிறுதூறு, அதில் நின்றும் புறப்பட்ட முயல்களானவை இவர்கள் முன்னே துள்ளுமாயிற்று. (வளவிளைவயல்) அழகிய வயலிலே உழுகிறவர்கள் முகத்திலே கயல்கள் துள்ளாநிற்குமாயிற்று, குறுஞ்சிநிலமும், மருதநிலமும் கலந்தாப்போலே காணுமிருப்பது.

மூ.—ஏதலர்நகைசெய விளையவரளைவெணெய்
போதுசெய்தமரிய புனிதர்நல்விரைமலர்
கோதியமதுகரம் குலவியமலர்மகள்
காதல்செய்கணபுர மடிகள்தமிடமே. (ச)

| பதம். | உரை. |
|---|---|
| நல் | நல்லதான |
| விரை | பரிமளத்தையுடைய |
| மலர் | பூவில் (இருக்கிற மதுவை) |
| கோதிய | பாநம்பண்ணின |
| மதுகரம் | வண்டுகளாலே |
| குலவிய | சூழப்பட்ட |
| மலர்மகள் | பூவையிருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியார் |
| காதல்செய்து | விரும்பிவர்த்திக்கும் படியான [து |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான |

| பதம். | உரை. |
|---|---|
| ஏதலர் | சத்ருக்களான சிசுபாலாதிகள் |
| நகைசெய | சிரிக்கும்படியாக |
| இளையவர் | பெண்களால் |
| அளை | கடைந்துவைத்த |
| வெணெய் | வெண்ணெயை |
| போதுசெய்து | அமுதுசெய்து |
| அமரிய | பூர்ணனாய் |
| புனிதர் | புனிதருமான |
| | அடிகளதம் இடமே. (ச) |

(முகத்திலே) என்றதின்விவரணம் (முன்னே) என்றது. முயல்துள்ளுதலையும், கயல்துள்ளுதலையும் சொல்லுகிறவர்க்குத் தாத்பர்யமென்னென்ன வருளுகிறார் (குறுஞ்சியித்யாதி). (குறுஞ்சி)மலைச்சார்பு-கொல்லைநிலமென்கை.

அரு.—நாலாம்பாட்டு. (ஏதலரித்யாதி) கீழ்ப்பாட்டில் துக்கவர்ஷத்தைப் போக்குமவன் நிற்கையாலே ப்ராப்யதேச மென்னுகின்றீர்; நமக்கு கிஞ்சித்கரிக்கப் பெற்றாலிறே நமக்கு ப்ராப்யதேசமாவதென்ன; அதுக்குக் குறையுண்டோ? அவன் ஆஶ்ரித கரஸ்பர்ஶமுள்ளதிலே அபிநிவிஷ்டனன்றோ? நமக்கு கிஞ்சித்கரிக்கைக்கு உறுப்பாக பிராட்டி விரும்பிவர்த்திக்கிறவிடமென்றருளுகிறாரென்று ஸங்கதி.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஏதலர்நகைசெய) சத்ருக்களுண்டு சிசுபாலாதிகள்; அவர்கள் சிரிக்கும்படியாகபெண்கள் அளைந்த வெண்ணெயை அக்காலத்திலே அமுதுசெய்து அதுதனக்கு தா (ர)ரக மாயிருந்த விருப்பில் புரையற்றிருக்குமவன். (நல்விரையித்யாதி) மிக்கபரிமளத்தை யுடைத்தான பூவில் மதுபானம் பண்ணின வண்டுகளானவை தந்தாம் செருக்காலே அவற்றைக்கோதி, அது - ஆத்த ஸாரமானவாறே அத்தை விட்டுப்போந்து கொண்டாடிச் சூழப்பரவாநின்றுள்ள பூவை இருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியார் விரும்பி வர்த்திக்கிற திருக்கண்ணபுரம் புதிதரான வடிகளுக்கு ஸ்தாநம்.

மூ.—தொண்டருமமரரும் முனிவரும் தொழுதெழ
அண்டமொடகலிடமளந்த வாமர்செய்து
விண்டவர்படமதிளிலங்கை முன்னெரியெழக்
கண்டவர்கணபுரமடிகள் தமிடமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது | செய்து | செய்து, |
| தொண்டரும் | ஸ்ரீ வைஷ்ணவர்களும் | விண்டவர் | சத்ருக்கள் |
| அமரரும் | ப்ரஹ்மாதிதேவர்களும் | பட | முடியும்படியாகவும் |
| முனிவரும் | ஸநகாதிருஷிகளும் | முன் | முன்பு |
| தொழுது | பணிந்து | மதிள் | மதிளையுடைத்தான |
| எழ | உஜ்ஜீவிக்கும்படியாக | இலங்கை | இலங்காநகரத்தை |
| அண்டமொடு | ஆகாசத்தோடே | எரி | அக்நியானது |
| அகலிடம் | பூமிப்பரப்படங்கலும் | எழ | கிளர்ந்து வ்யாபரிக்கும்படியாகவும் |
| அளந்தவர் | அளந்தவனாய், | கண்டவர் | பண்ணினவனுமான |
| அமர் | யுத்தத்தை | | அடிகள் தம்இடமே. (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தொண்டருமித்யாதி) ஸ்ரீவைஷ்

(ஆடி) என்றவநந்தரம் "அவைகள்" என்றுசேஷம். ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (தொண்டருமித்யாதி). கீழ்ப்பாட்டில் பெண்கள் அளைந்த வெண்ணெயமுதுசெய்தானென்னுநின்றீர்; "அவர்கள் அவனையல்லது அறியாதபடி மிகவும் வ்யாமுக்தரன்றோ? நாம் கிஞ்சித்கரிக்கும் போது தாத்ருஶப்ரேமம் பிறக்கமாட்டாமையாலே செய்ததுகுற்றமாய் விழாதோ" என்று அஞ்சினநெஞ்சுக்கு அவன்ப்ரயோஜநாந்தர பரனுக்காகத் தன்னை இரப்பாளனுக்கியும், அவர்களை அழித்தும் செவ்வையாகப் பரியுமவனுயிருப்பானொருவன், அதுக்கு நமக்கஞ்சவேண்டா வென்கிறுரென்று ஸங்கதி.

ணவர்களும் ப்ரஹ்மாதிகளும் ஸநகாதிகளும் தொழுது உஜ்ஜீவிக்கும்படியாக அந்தரிக்ஷத்தோடே பூமிப்பரப்பை அளந்தவர். (அமர்செய்து) பூசல்செய்து.(க) "ஸ்வர்ஷ்ஜ்ஜயஸி-த்விதாபஜ்யேயம்" என்று பொருந்தாமையிலே நின்றவர்கள் மூடிய; ப்ரஹ்மாதிகளுக்கும் கூடக்கணிசிக்கவரிதான ஊரை அக்நியானதுகிளர்ந்து வ்யாபரிக்கும்படி பண்ணினவர். .... .... .... .... .... .... (ரு)

மூ.—மழுவியல்படையுடையவனிடம் மழைமுகில்
தழுவியவுருவினர் திருமகள்மருவிய
கொழுவியசெழுமலர் முழுசியபறவைபண்
எழுவியகணபுரமடிகள்தமிடமே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| திருமகள் | பெரியபிராட்டியார் |
| மருவிய | நித்யவாஸம் பண்ணுகையாலே இளமையையுடையதாய், |
| கொழுவிய | ச்லாக்யமானதாய் |
| செழு | அழகியதான |
| மலர் | புஷ்பங்களிலே |
| முழுசிய | மூழ்கிக்கிடக்கிற |
| பறவை | வண்டுகளுடைய |
| பண் | கா(ஸ)நத்தாலே |
| எழுவிய | வ்யாப்தமாய், |
| மழுவு | மழுவுஎன்கிற ஆயுதத்தை |
| இயல்படை | விதேயமான ஆயுதமாக |
| உடையவன் | உடையவனான எம்பெருமானுக்கு |
| இடம் | வாஸஸ்தாநமுமான |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது |
| மழை | ஜலத்தாலே(ஸம்ருத்தமான) |
| முகில் | மேகம்போலே |
| தழுவிய | ப்ரமஹரமான |
| உருவினர் | திருமேனியையுடையனான |
| | அடிகள்தம் இடமே. (கூ) |

வ்யா.—ஆறும்பாட்டு. (மழுவித்யாதி) மழுவைத் தனக்கு

"விண்டவர்" என்றது-நெஞ்சுவிண்டவரென்றாய், சத்ருக்களைச்சொல்லுகிறதென்றருளிச் செய்கிறார் (த்விதேத்யாதி). ... ... ... ... (ரு)

அரு.—ஆறும்பாட்டு. (மழுவித்யாதி) அவன்கலந்து பரிமாறும் ஆச்ரித வ்யாமுக்தனுகிலும், ஒருதலைக்காமமாய் விழாதோ? இத்தலையிலும் ப்ரேமம் விளையவேண்டாவோவென்ன; அதுக்கு அவன் திருமேனியைக் காணவே ஸகலதாபங்களும் தீர்ந்து காதலும் கடல்புரைய விளையுமென்கிறாரென்று ஸங்கதி.

(க) ரா-யு-ரு-கூ-கக.

விதேயமான ஆயுதமாக வுடையவனுடைய ஸ்தாநம். (மழைமுகி லித்யாதி) மேகம்போலே ஸ்ரமஹரமான வடிவையுடையவர். (திரு மகளித்யாதி) பெரிய பிராட்டியார் நித்யவாஸம் பண்ணுகையாலே இளைதாய் கொழுவியதாய் அழகியதான பூவிலே முழுகின வண்டி னுடைய பண்கிளர்ந்த திருக்கண்ணபுரம் அடிகள்தமிடமே. (சு)

மூ.—பரிதியொடணிமதி பனிவரைதிசைநிலம்
எரிதியொடெனவினவியல் வினர்செலவினர்
சுருதியொடருமறை முறைசொலுமடியவர்
கருதியகணபுர மடிகள்தமிடமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுருதியொடு | நல்லஸ்வரத்தையுடை | திசை | திக்குக்கள் |
| அரு | அரிதாயிருக்கிற [த்தான | நிலம் | பூமி |
| மறை | வேதங்களை | எரி | ஜ்வலியாநின்ற |
| முறை | முறையிலே | தீ | அக்நி |
| சொலும் | சொல்லாநிற்கிற | என | என்றுசொல்லப்படுகிற |
| அடியவர் | தாஸஜநங்களாலே | இன | இப்படிப்பட்டபதார்த் தங்களை |
| கருதிய | ப்ராப்யமென்று விரும் பப்பட்ட | இயல்வினர் | ப்ரகாரமாக உடைய ராய் |
| கணபுரம் | திருக்கண்ண புரமான | செலவினர் | நடத்திக் கொண்டு போருகிறவரான |
| பரிதியொடு | ஸூர்யனுடன் [து | | |
| அணி | அழகான | | |
| மதி | சந்தரன், | | |
| பனிவரை | ஹிமவான் முதலான குலபர்வதங்கள் | | அடிகள்தம்இடமே. (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பரிதியித்யாதி) ஆதித்யனோடே தர்ஸ நீயமான சந்த்ரன், குலபர்வதங்கள், திக்குக்கள், பூமி, எரிகிற அக்நி

"மழுவியல் படையுடையவனுடைய விடமான கணபுரமடிகள்தமிடம்" என்றந்வயம். ... ... ... ... ... ... ... (சு)

அரு.—ஏழாம்பாட்டு. (பரிதியித்யாதி) அவன்திருமேனி நமக்குக் காதல் விளைக்குமென்றாலும் போனகாலத்திலே நாம் விமுகராய்ப் போந்தபடியை நினைத்தால் அச்சமாயிருக்கிறதேயென்ன; அத்தசையிலும் நம்மைவிடமாட் டாதே ஸர்வவ்யாபகனாய் ஆபி (ஆ) முக்க்யம் பார்த்திருந்தானவனென்று சொல்லாநின்றுகொண்டு அடியவர் பலரும் நமக்கு உசாத்துணையுண்டாகை யாலே நமக்குப் பூர்வவ்ருத்தத்தை நினைக்கவும் விரகில்லை யென்கிறாரென்று ஸங்கதி.

என்று சொல்லப்படுகிற இப்படிப்பட்ட பதார்த்தங்களைத் தமக்கு ப்ரகாரமாகவுடையராய் நடத்திப்போருகிறவர். இத்தால் ஜகதாகாரதையைச் சொன்னபடி. (சுருதியித்யாதி) நல்ல ஸ்வரத்தையுடைத்தாய் தன்னைப்பெறிலும் பெறவரிதாயிருக்கிற வேதங்களை "அவன்சேஷி, நாம் சேஷபூதர்" என்றிருக்கிறமுறையிலேசொல்லுகிற அடியார்தங்களுக்குப்ராப்யமென்று புத்திபண்ணி வர்த்திக்கிற திருக்கண்ணபுரம். (க) "வேதநாவர் விரும்பும் திருக்கண்ணபுரம்" என்னக்கடவதிறே. .... .... .... .... .... .... (எ)

மூ.—படிபுல்குமடியிணைப் பலர்தொழமலர்வைகு
கொடிபுல்குதடவரை யகலமதுடையவர்
முடிபுல்குநெடுவயல் படைசெலவடிமலர்
கடிபுல்குகணபுர மடிகள்தமிடமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முடி | நாத்துமுடிகளோடே | படி | பூமியை |
| புல்கு | கூடியிருக்கிற | புல்கும் | அளந்துகொண்ட |
| நெடு | விசாலமான | அடியிணை | திருவடிகளை |
| வயல் | வயல்களிலே | பலர் | ஸகலரும் |
| படை | கலப்பையை | தொழ | ஆஶ்ரயிக்கும்படியாக, |
| செல | நடத்தியதாலும் | மலர்வைகு | பெரியபிராட்டியாரா |
| அடி | காலாலே | கொடி | லே |
| செல | குழப்புவதாலும் (அரு | புல்கு | ஆஶ்ரயிக்கப்பட்டதா |
| | இருந்த) | தடம் | விசாலமான [ய் |
| மலர் | தாமரைப்பூக்களுடை | வரை | மலைபோலிருப்பதுமா |
| கடி | பரிமளத்தாலே [ய | அகலமது | திருமார்வை [ன |
| புல்கு | வ்யாப்தமான [து | உடையவர் | உடையனான |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான | அடிகள்தம் இடமே. (அ) | |

"பனிவரை" என்று ஹிமவானைச் சொன்னது உபலக்ஷணமாயருளுகிறார் (குலேத்யாதி). இயல்வு - ஸ்வபாவமாய், அதினர்த்தம் (ப்ரகாரேத்யாதி) "செலவினர்" என்றதுக்கர்த்தம் (நடத்தியித்யாதி). (தன்னை)ப்ரதிபாத்யனை ஈஶ்வரனையென்றபடி. ... ... ... ... ... ... (எ)

அ.—எட்டாம்பாட்டு. (படியித்யாதி) பூர்வவ்ருத்தத்துக்கும் நினைக்க விரகில்லை யென்னவே நெஞ்சு உகந்து, நாம்கிஞ்சித்கரித்து உஜ்ஜீவிப்போமென்று நினைத்து கிஞ்சித்கரிக்க உபகரணங்கள் வேணுமேயென்ன; அவற்

(க) தி-வாய்-கூ-க0-க.

வ்யா.-எட்டாம்பாட்டு. (படியித்யாதி)''படி''என்று-பூமி; அத்தை புல்கும்அடியிணையுண்டு-பூமிப்பரப்பைஅளந்துகொண்ட திருவடிகள். (க) "[illegible]- ஸங்கைஸ்ஸுராஞும்'' என்கிறபடியேஅவற்றை யெல்லாருமொக்க விருந்ததே குடியாக ஆஸ்ரயிக்க; மலர்வைகு கொடியுண்டு - பெரியபிராட்டியார், அவள் விரும்பி அணையாநின்றுள்ள பெரியவரை போன்றிருந்த மார்வையுடையவர். (முடியித்யாதி) நடுகைக்காக எங்குமொக்கப் பரப்பிக்கிடக்கிற முடிகளையுடைத்தான பரந்தவயலிலே கலப்பையைக் கொடுபுக்குநடத்தி. (அடிசெல) அடைவிலே காலாலே ஒருகால்குழப்புவர்கள். அவ்வளவிலே இடையிலே தப்பிக்கிடந்த தாமரைப்பூவானது பரிமளத்தைப் புறப்படவிடாநிற்குமாயிற்று. .... .... .... .... .... (அ)

மூ.—புலமனுமலர்மிசை மலர்மகள்புணரிய
நிலமகளெனவின மகளிர்களிவரொடும்
வலமனுபடையுடை மணி வணர்நிதிகுவை
கலமனுகணபுரமடிகள்தமிடமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நிதிகுவை | பொற்குவைகளையுடைத்தான | புலன் | இந்த்ரியங்களானவைகள் |
| கலம் | மரக்கலங்களாலே | மனு | அழுந்தி கிடக்கும்படியாக(அழகையுடைய) |
| மனு | வ்யாப்தமான [து | | |
| கணபுரம் | திருக்கண்ணபுரமான | | |

றுக்கும் குறைவில்லை. திருவுலகளந்த * பத்தியுழவன் அடிபட்ட ஆஸ்ரித முக கமலங்களோபாதி அவ்வூரில் உழவரடியாலு மடிபட்ட தாமரைப்பூ பரிமளம் அலையெறியாநிற்கும்; வேண்டினபடி இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்யலாமென்று திருவுலகளந்த அபதானத்தையும் பிராட்டியோட்டைச் சேர்த்தியையும் தாமரைகளின் ஸம்ருத்தியையும் அருளிச்செய்கிறரென்று ஸங்கதி.

மலரிலே வைகு-வர்த்திக்கிற கொடியென்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறர் (மலரித்யாதி). (முடிகளை) நாத்துமுடிகளை. "செல" என்றத்தை "படை''என்றத்தோடன்வயித்தது மாத்ரமன்றிக்கே "அடி" என்றத்தோடும் அன்வயித்துக்கொள்வதென்று திருவுள்ளம்பற்றி ப்ரதீக க்ரஹணம் பண்ணுகிறர் (அடிசெல) என்று. ... ... ... ... ... ... (கூ)

(க)

| | | | |
|---|---|---|---|
| மலர்மிசை | புஷ்பத்தில் (நித்ய வாஸம்பண்ணு கிற) | மகளிர்கள் | ஸ்த்ரீத்வத்தையுடைய |
| | | இவரொடும் | இவர்களோடும் [ரான |
| | | வல | வலதுதிருக்கையிலே |
| மலர்மகள் | பெரியபிராட்டியார் | மனு | பொருந்தியிருக்கிற |
| புணரிய | நித்யஸம்ச்லிஷ்டையாயிருக்கிற | படை | திருவாழியை |
| | | உடை | உடையனுமாய், |
| நிலமகள் | ஸ்ரீபூமிப்பிராட்டியார் | மணி | நீலமணிபோலிருக்கிற |
| எனவின | என்றிப்படி சொல்லப் படுகிற | வணர் | நிறத்தையுடையனுன |
| | | | அடிகள் தம்இடமே. (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (புலனித்யாதி) கண்டாருடைய இந்த்ரியங்கள் பிணிப்புண்ணும்படியாயிருக்கிற மலரைத் தனக்கிருப்பிடமாகவுடையளாயிருக்கிற பெரியபிராட்டியார், தன்னோடு நித்யஸம்ச்லிஷ்டையாயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி யென்றிப்படி சொல்லப்படுகிற நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை யுடையராயிருக்கிற இவர்களோடும், வலத்திருக்கையிலே மன்னுநின்றுள்ள திருவாழியை யுடையனுமாய், நீலமணிபோலே குளிர்ந்திருந்துள்ள வடிவையுடையவர். பொற்குவைமாருத மரக்கலங்களையுடைய திருக்கண்ணபுரம். கடலொரு புறமாயிருக்கும்போலே காணும். .... .... (கூ)

மூ.—மலிபுகழ்கணபுரமுடைய வெம்மடிகளை
வலிகெழுமதிளயல் வயலணிமங்கையர்
கலியனதமிழிவை விழுமியவிசையினொடு
ஒலிசொலுமடியவ ருறுதுயரிலரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வலி | தார்ட்ட்ய (ஸ்ரீ) த்தா லுண்டான | வயல் | வயல்களாலே |
| | | அணி | அலங்கரிக்கப்பட்ட |
| கெழு | பெருமையை யுடைய | மங்கையர் | திருமங்கைக்கு நிர்வாஹகரான |
| மதிள் | மதிளினுடைய | | |
| அயல் | ஸமீபத்திலே யிருக்கிற | | |

அந.—ஒன்பதாம்பாட்டு. (புலனித்யாதி) கீழில் ஆராதனோபகரணமும் குறைவற்றதேசமாகையாலே ப்ராப்யமென்றநுபவித்தார்; இதில் இருவர்க்கும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தி குறைவற்ற விஷயமென் றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"வணர்" என்றது-வண்ணரென்றாய் (வடிவையுடையவர்) என்றது.(கூ)

| | | | |
|---|---|---|---|
| கலியன | ஆழ்வாருடையதாய் | விழுமிய | அழகியதான |
| மலி | (பரமபதத்திற் காட்டில்) அதிகமான | இசையினோடு | ஸ்வரத்துடன் |
| புகழ் | புகழையுடைய | ஒலிசொலும் | அப்ய (ஸ்ய) ஸிக்கவல்லரான |
| கணபுரம் | திருக்கண்ணபுரத்தை | அடியவர் | ஆச்ரிதர்கள் |
| உடைய | வாஸஸ்தானமாகவுடைய | உறு | அநுபா(வ்ய)வ்யமாய் நேர்ந்திருக்கிற |
| எம்அடிகளை | என் ஸ்வாமிவிஷயமான | துயர் | பாபங்களை |
| தமிழ்இவை | இத்திருமொழியை | இலரே | அடையார்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மலிபுகழித்யாதி) பரமபதத்திற்காட்டில் மிக்க புகழையுடைத்தாயிருக்கிற திருக்கண்ணபுரத்தை வாஸஸ்தாநமாகவுடைய என்ஸ்வாமியைக் கவிபாடிற்று. வலிமிக்கிருந்துள்ள மதிளினருகே யுண்டான வயலாலே அலங்க்ருதமான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்தவை. (விழுமியவிசையினொடு) அழகிய இசையோடேகூட. (ஒலிசொலுமடியவர்) இத்திருமொழியை வண்குறிஞ்சி என்று சொல்லுவர்கள். இத்தை அப்ப்யஸிக்குமவர்கள். (உறுதுயரிலரே) அவர்களுக்கு (௧)"அவஶ்யமநு போக்தவ்யம்- அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற பாபங்கள் கிட்டாது.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

---

அரு.—பத்தாம்பாட்டு. (மலிபுகழித்யாதி) "மலிபுகழ்" என்றதுக்கு ப்ரகரணோசிதமாகப் பரமபதத்திலும் ப்ராப்யபூமியென்னும் தாத்பர்யத்தை யருளுகிறார் (பரமேத்யாதி). ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அரு.—வாஞோர்ப்ரவேசம். தொண்டருய்யும் வகையிலே திருக்கண்ணபுரத்துக்கு அநிஷ்ட நிவர்த்தகதயா ப்ராபகத்வத்தை யநுஸந்தித்து கீழ்த்திருமொழியிலே ப்ராப்யமென்றது ஸந்தித்தார். அவ்வளவுமன்றியே அவன்றனே உம்மைப் பெறவேணுமென்று திரியாநின்றான்; நீர் அவன்படியைக் காணீரென்று ஜ்ஞாநத்தை உண்டாக்குகையாலே அவன் படிகளையும் இத்தேசத்திலே கண்டேனென்று ஜ்ஞாநஸாதந்தயா அநுஸந்திக்கிறாரென்று

(௧) ப்ருஹந்நாரதீ.

# பெரியதிருமொழி
## எட்டாம்பத்து எட்டாந்திருமொழி
### வானோர் ப்ரவேசம்.

வ்யா.—வானோர், திருக்கண்ணபுரம் ப்ராப்யமென்றார்கீழ்; நமக்கு ப்ராப்யமென்னுமளவேயோ? அவன் அநாதிகாலம் எதிர்சூழல் புக்குத்தட்டித்திரிய நாம் அத்தை அறியாதேயிருந்துதிரிந்தநாளில் இழவெல்லாம் தீரும்படியான தேசமன்றோவென்கிறார்.

மூ.—வானோரளவும்முதுமுந்நீர் வளர்ந்தகாலம் வலியுருவில்
மீனாய்வந்து வியந்துய்யக்கொண்ட தண்தாமரைக்கண்ணன்
ஆனாவுருவிலானாய னவனையம்மா விளைவயலுள்
கானார்புறவில் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானோரளவும் | தேவர்கள் எல்லையளவும் | கண்ணன் | திருக்கண்களையுடையனாய் |
| முது | பழமையான | ஆனா | அழியாத |
| முந்நீர் | ஸமுத்ரப்ரவாஹமானது | உருவில் | ஶரீரத்தையுடைய |
| வளர்ந்தகாலம் | வளர்ந்தகாலத்திலே | ஆனாயன் | இடையனாயவதரித்த |
| வலி | மிடுக்கையுடைத்தான | அவனை | அந்தகண்ணனை, |
| உருவில் | ஶரீரத்தையுடைய | அம் | அழகிதாய் |
| மீனாய் | மத்ஸ்யரூபமாய் | மா | பரப்பையுடைய |
| வந்து | வந்தவதரித்து | விளை | விளையும்படியான |
| வியந்து | (ரக்ஷகமாய்வைத்தகடலே வளர்ந்துவருவதைக்கண்டு) ஆஶ்சர்யப்பட்டு | வயலுள் | வயல்களையுடைத்தாய் |
| உய்யக்கொண்ட | ஜகத்ரக்ஷணம் பண்ணின | கான் ஆர் | காடுகள் நிறைந்த |
| தண் | குளிர்ந்த | புறவில் | பர்யந்தங்களையுடைத்தானலே |
| தாமரை | தாமரைப்பூபோன்ற | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |
| | | அடியேன் | ஶேஷபூதனான அடியேன் |
| | | கண்டுகொண்டேனே. | காணப்பெற்றேன். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (வானோரித்யாதி) தேவர்கள் எல்லையளவும் செல்லக் கடல்வெள்ளம் பரந்தநாள், அத்தையடையத் தன்

ஸங்கதியை யருளுகிறார் (திருக்கண்ணபுரமித்யாதி).

னுடைய ஒருசெலுவிலே யடக்கவல்ல பிடுக்கையுடைய மத்ஸ்யமாய்வந்து. (வியந்துய்யக்கொண்ட) நாம் ரக்ஷகமாக விட்டகடல் தானே பாத (𑌬𑌾𑌧) கமாவதே? இருந்தபடி யென்னென்று விஸ்மயப்பட்டென்னுதல்; அன்றிக்கே வேறுபாட்டு. ஜகத்காரணபூதனான தான் ப்ரஹ்மாதிகளளவிலே தன்னை அமையவிட்டால் தான் நின்ற நிலைக்கு இதுசேராதாயிருக்குமிறே. அங்ஙனுமன்றிக்கே விஜாதீயமான வடிவையுடையனாகையாலே வந்த நெடுவாசியைச் சொல்லிற்றாகவுமாம். (தண்தாமரைக்கண்ணன்) (க) "𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌃 𑌕𑌮𑌲𑌲𑍋𑌚𑌨𑌃 - மத்ஸ்யஃ கமலலோசநஃ" என்னக்கடவதிறே.

(ஆனுருவிலானயன்) ஸதாஏகரூபமான வடிவை இதரஸஜாதீயமாக்கிக்கொண்டு வந்தவதரித்தவன். ஆனதவுரு-கெடாதவுரு வென்றபடி. அழகியதாய் பரந்திருந்துள்ள வயலையுடைத்தாய் காணார்ந்திருந்துள்ள பர்யந்தத்தை யுடைத்தான திருக்கண்ணபுரத்திலே. ஒருபுறம் காடாயிருக்கும்போலே காணும். (அடியேன் கண்டுகொண்டேனே) சேஷபூதனான நான் காணப்பெற்றேன். (க)

மூ.—மலங்குவிலங்கு நெடுவெள்ளம் மறுகஅங்கோர்வரைநட்டு
இலங்குசோதியார முதமெய்துமளவோராமையாய்
விலங்கல்திரியத் தடங்கடலுள்சுமந்து கிடந்தவித்தகனை
கலங்கல்முந்நீர் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மலங்கு | மத்ஸ்யவிசேஷங்கள் | இலங்கு | (போனப்ராணன்களை மீட்கைக்கீடாய்) ப்ரகாசியாநின்ற |
| விலங்கு | தடுமாறும்படியாக | | |
| நெடுவெள்ளம் | ஸமுத்ரவெள்ளமான | | |
| மறுக | கலங்கும்படியாக [அது | சோதி | தேஜஸ்ஸால் |
| அங்கு | (ஆழத்துக்கு அவதியில்லாத) அந்த ஸமுத்ரமத்யத்தில் | ஆர் | பூர்ணமான |
| | | அமுதம் | அம்ருதமானது |
| | | எய்துமளவு | தோன்றும் வரையில் |
| ஓர் | அத்விதீயமான | ஓர் | அத்விதீயமான |
| வரை | மந்தரபர்வதத்தை | ஆமையாய் | கூர்மரூபியாய்க் கொண்டு |
| நட்டு | நிறுத்தி | | |

அ௫.—முதற்பாட்டு. (வானேரித்யாதி) (செலுவிலே) கீழ்வயிற்றிலே. வேறுபாட்டை விவரிக்கிறார் (ஜகதித்யாதி).

அம்மாவித்யாதிக் கர்த்தமருளிச் செய்கிறார் (அழகியதாயித்யாதி). (க)

| | | | |
|---|---|---|---|
| விலங்கல் | மந்தரபர்வதமானது | வித்தகனை | ஆஸ்சர்யாவஹனான எம்பெருமானை |
| திரிய | நான்குபக்கமும் ஸஞ்சரிக்கும்படியாக | கலங்கல் | கலங்காநின்ற |
| தடம் | விசாலமான | முந்நீர் | ஸமுத்ரத்தையுடைய |
| கடலுள் | ஸமுத்ரத்தில் (அந்த பர்வதத்தை) | | கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (௨) |
| சுமந்துகிடந்த | த(ரி)த்துக்கொண்டு கிடந்தவனும், (ஆமையாலே) | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மலங்குவிலங்கு நெடுவெள்ளம்) ஜலப்ராசுர்யமுள்ள விடத்தில்போலே காணும் மலங்குகள் தான் வர்த்திப்பது. உள்ளுக்கிடந்த பதார்த்தங்களடங்கலும் அங்கே இங்கே தடுமாறும்படி கடல்குழம்ப, அங்கு ஆழத்துக்கு அவதியில்லாத விடத்திலே மலையைக்கொடுபுக்கு நிறுத்தி, போனப்ராணன்களை மீட்கைக்கீடான தேஜஸ்ஸையுடைத்தான அம்ருதமானதுதோற்று மளவும் நீருக்கிறுயாதவடிவையுடைய ஆமையாய், மலைதிரிந்துவரும் படியாகப் பரப்பையுடைத்தான கடலிலே அதுக்கு தா(ர)க பூத னாய்க்கொண்டு கிடந்த விஸ்மயநீயனை. (கலங்கவித்யாதி) கடல் ஒரு புறமாயிருக்கும்போலே. .... .... .... .... .... (௨)

மூ.—பாராரளவும் முதுமுந்நீர் பரந்தகாலம் வளைமருப்பில்
ஏராருருவத்தேனமா யெடுத்த வாற்றலம்மானைக்
கூராராரவிளைகருதிக் குருகுபாயக் கயலிரியும்
காரார்புறவில் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாராரளவும் | பூமிப்பரப்படங்கலும் | மருப்பில் | கொம்பையுடைய |
| முது முந்நீர் | ஸமுத்ரமானது | ஏர் | அழகால் |
| பரந்தகாலம் | சூழ்ந்தகாலத்தில் | ஆர் | பூர்ணமான [தான |
| வளை | வளைந்திருக்கிற | உருவத்து | ப்ரீரத்தையுடைத் |

அ௫.—இரண்டாம்பாட்டு. (மலங்கித்யாதி) எதிர்சூழல்புக்குத் திரிகிற அவதாரங்களில் தமக்கு ஜ்ஞாந ப்ரதாநம் பண்ணுவதாக வேதப்ரதமான அவதாரத்தை யறிந்தபடியை யருளிச்செய்தார்கீழ்; தம்முடைய ஸகலபாரத்தையும் ப(ரி)க்கப் பிறந்தானென்று மலைசுமந்த கூர்மரூபியைக் கண்டபடியை யருளுகிறுரென்று ஸங்கதி.

(மலங்குகள்) மத்ஸ்யவிசேஷங்கள். "அங்கு" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறுர் (ஆழத்துக்கித்யாதி).... ... ... ... (௨)

| | | | |
|---|---|---|---|
| ஏனமாய் | வராஹரூபியாய் (அந்த பூமியை) | இரை | ஆஹாரமென்று |
| எடுத்த | எடுத்து வந்தவனாய் (அதனாலே) | கருதி | எண்ணி (அந்தமத்ஸ யங்களின்மேல்) |
| ஆற்றல் | மிக்க வலிமையை யுடையனான | பாய | பாயும்போது |
| அம்மானை | ஸர்வேஶ்வரனை, | கயல் | மத்ஸ்யங்களானதுகள் |
| கூர்ஆர் | மிகவும் தீக்ஷ்ணமான (மூக்கையுடைத் தான) | இரியும் | ஓடாநிற்குமதாய், |
| குருகு | நாரைப்பக்ஷியானது | கார் | மேகங்களாலே |
| ஆரல் | மத்ஸ்யங்களை | ஆர் | வ்யாப்தமான |
| | | புறவில் | பர்யந்தங்களையுடைய துமான |

கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பாராரித்யாதி) பூமிப்பரப்பையடையக் கடல்கொண்டகாலத்து வளைந்த கொம்பையுடைய ஏனமாய். (ஏராருவத்து) ஆயிரம்பண்ணை ப்ரளயம் கொண்டாலாகாதோ இப்படி அழகுநிறைந்தவராஹ விக்ரஹத்தை ஒருகால் காணலாமாகில். (எடுத்தவாற்றலம்மானை) அண்டபித்தியிலே சென்று சேர்ந்த பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறுகைக்கீடான வலியையுடைய ஸர்வேஶ்வரனை.

(கூராரித்யாதி) கூரியவாயலகையுடைத்தான குருகானது ஆரலை ஆமிஷமென்று புத்திபண்ணிப்பாய கயல்களானவை இரியாநிற்கும். (காராரித்யாதி) மேகங்களினுடைய நிரந்தரஸஞ்சாரத்தை யுடைத்தான பர்யந்தத்தோடுகூடின திருக்கண்ணபுரத்திலே. (௩)

மூ.—

உளைந்தவரியும் மானிடமுமுடனாய்த் தோன்றவொன்றுவித்து
விளைந்தசீற்றம் விண்வெதும்ப வேற்றோனகலம்வெஞ்சமத்து
பிளந்துவளைந்தவுகிரானைப் பெருந்தண் செந்நெற்குலைதடிந்து
களஞ்செய்புறவில் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே. (௪)

அரு.—மூன்றாம்பாட்டு.(பாரித்யாதி) தம்முடைய பா(ரூ)ரங்களைச்சுமக்கும்படியே யன்றிக்கே ஸம்ஸார ப்ரளயத்தில் நின்று மெடுக்கவல்லவனென்று வராஹாவதாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

ஆழ்வாருடைய ஈடுபாடுதோற்றத் தாத்பர்யமருளுகிறார் (ஆயிரமித்யாதி). (பண்ணை) ப்ரகாரம்.

(இரியாநிற்கும்) ஓடாநிற்கும். பயத்துக்கு த்ருஷ்டாந்தம் (கடலையித்யாதி). ... ... ... ... ... ... (௩)

| பதம். | உரை. |
|---|---|
| உளைந்த | ஸகலரையும் பயப்படுத்துமதான |
| அரியும் | ஸிம்ஹரூபமும் |
| மானிடமும் | மனுஷ்யரூபமும் |
| உடனாய் | பொருந்தும்படி |
| ஒன்றுவித்து | சேர்த்து |
| தோன்ற | நரஸிம்ஹனாய்த்தோன் |
| விளைந்த | அப்போதுண்டான [ற, |
| சீற்றம் | சீற்றத்தைக்கண்டு |
| விண் | தேவலோகமெல்லாம் |
| வெதும்ப | நடுங்கும்படியாக |
| வெம்சமத்து | யுத்தத்திலே |
| வேற்றோன் | சத்ருவான ஹிரண்ய |
| அகலம் | மார்வை [னுடைய |
| பிளந்து | இருகூறாய்ப்பிளந்து (அதனால்) |

| பதம். | உரை. |
|---|---|
| வளைந்த | வளைந்துகிடக்கிற |
| உகிரானை | திருவுகிரையுடையவனான எம்பெருமா |
| பெரும் | பெருத்ததாய் [னை |
| தண் | அழகியதான |
| செந்நெல்குலை | செந்நெல்குலைகள் |
| தடிந்து | (துணிந்தபிறகும்) வயிரம்பற்றி |
| களம்செய் | பரிமாற்றம்மாறாமலிருக்கிற |
| புறவில் | பர்யந்தங்களையுடைத்தான |

கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே. (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (உளைந்தவித்யாதி) தன்னுடைய தோற்றரவிலே சத்ருபக்ஷமானது குலைந்தோடும்படியிருக்கிற ஸிம்ஹரூபமும், உளமயிருமாய், மநுஷ்யவேஷமும் சேராதவடிவிரண்டும்சேர்ந்துதோன்ற, அப்போது பிறந்தசீற்றத்தைக்கண்டு ரக்ஷ்யகோடியிலே அந்வயித்ததேவலோகம் "எவ்வளவாய்த்தலைக்கட்டுகிறதோ?" என்றஞ்ச; வேற்றோனுண்டு - சத்ருவான ஹிரண்யன்; அவனுடைய மார்வை யுத்தத்திலே பிளந்து வளைந்த திருவுகிரையுடையவனை. (பெருந்தணித்யாதி) பெருத்தழகியதாயிருந்துள்ள செந்நெற் குலைகளை வயிரத்தை வெட்டுமாபோலே வெட்டி பரிமாற்றம் மாறாத பர்யந்தத்தையுடைத்தான. .... .... .... .... (௪)

---

அநு.—நாலாம்பாட்டு. (உளைந்தவித்யாதி) ஸம்ஸார ப்ரளயத்தில்நின்ற தம்மை யெடுக்கவல்லவன்படியை அநுஸந்தித்தவுடனே ஸம்ஸாரபீஜமான அஹங்காராதி விரோதிகளை நகாக்ரத்தாலே போக்க வந்தானென்று * நரங்கலந்த சிங்கத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"உளைந்த" - உளையப்பண்ணின வென்றாகி அருளுகிறார் (தன்னுடைய வித்யாதி). "தடிந்து" என்றபத வாஸனையை அருளுகிறார் (வயிரமித்யாதி). "களஞ்செய்" என்றவர்த்தமாநார்த்தமருளுகிறார் (பரிமாற்றம்மாறாத) என்று.

மூ.—

தொழுநீர்வடிவில் குறளுருவாய் வந்து தோன்றிமாவலிபால்
முழுநீர்வையம் முன்கொண்ட மூவாவுருவிலம்மானை
உழுநீர்வயலுள் பொன்கிளைப்பவொருபால் முல்லைமுகையோடும்
கழுநீர்மலரும் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொழும் | ஸகலரும் வணங்கும்படியான | அம்மானை | ஸர்வேஸ்வரனை |
| நீர் | நீர்மையையுடைய | உழுநீர் | உழுகையே ஸ்வபாவமாக உடைத்தான |
| வடிவில் | வடிவையுடைத்தான | வயலுள் | வயல்களிலே |
| குறளுருவாய் | வாமநவேஷத்தையுடையவனாய்க்கொண்டு | பொன் | பொன்னானது |
| | | கிளைப்ப | விளையும்படியாகவும், |
| | | ஒருபால் | ஒருபக்கத்தில் |
| வந்துதோன்றி | வந்தவதரித்து | முல்லை | முல்லை புஷ்பமும் |
| மாவலிபால் | மஹாபலி பக்கல் | முகை | கருமுகில் புஷ்பமும் |
| முழுநீர் | ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட | கழுநீர் | செங்கழுநீரும் |
| | | மலரும் | விகஸிக்கும்படியானதுமான |
| வையம் | லோகத்தை | | |
| கொண்ட | யாசித்துப் பெற்றவனு[ன | கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே. (ரு) | |
| மூவா | ஸதா ஏகரூபமான | | |
| உருவில் | விக்ரஹத்தையுடைய | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தொழுநீரித்யாதி)(க)"अवशाः प्रतिपेदिरे-அவசா: ப்ரதி பேதிரே" என்கிறபடியே கண்டார்க்குத் தொழுதல்லது நிற்கவொண்ணாத வடிவையுடைய வாமநவேஷத்தையுடையனாய் வந்தவதரித்து, கடல்சூழ்ந்த ராஜ்யம் மஹாபலியதாய், அவன் பக்கலிலே தான் இரந்துபெற்றானும்படி பெற்ற.(மூவாவுருவிலம்மானை) ஸதா ஏகரூபமான விக்ரஹத்தையுடைய ஸர்வேஸ்வரனை. தோன்றுகிற வாமநவேஷமன்று கிடீர் இவனுக்கு நிலைநின்ற வடிவென்கி

அநு.—அஞ்சாம்பாட்டு. (தொழுநீரித்யாதி) தம்முடைய விரோதியை சக்ரத்தாலே போக்கினவளவேயன்றிக்கே (க)"அடிக்கீழ் கொள்ளுமப்பன்" என்கிறபடியே தம்மைத் திருவடிகளின்கீழ்வைத்துக்கொள்ள வந்தவனென்று ஸ்ரீவாமநாவதாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

கண்டார்தொழுகையே நீர்மையாய் ஸ்வபாவமாயிருக்கிற வடிவென்று

(க) பார-உத்யோ.

ஞர். (உழுநீர் வயலுள்பொன்கிளைப்ப) உழுகைகயே ஸ்வபாவமாக வுடைத்தான் வயலிலே பொன்னானது வந்துதோன்றும். பொன் படுகுட்டமாயிற்று. பொன் படாநிடமடைய முல்லை, கருமுகை, செங்கழுநீர் இவையெல்லாம் மலராநிற்குமாயிற்று. .... (ரு)

மூ.—வடிவாய்மழுவே படையாக வந்து தோன்றிமூவெழுகால்
படியாரரசு களைகட்ட பாழியானை யம்மானைக்
குடியாவண்டு கொண்டுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும்
கடியார்புறவில் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வடி | கூரான | வண்டு | வண்டுகள் |
| வாய் | முகத்தையுடையதான [தை | குடியா | (தாரபுத்ராதிகளோடு) கூட்டமாக |
| மழுவே | மழுவென்கிற ஆயுதத் | கொண்டு | மதுவைக்கொண்டு |
| படையாக | ஆயுதமாக வுடைய பரசுராமனாய் | உண்ண | புஜிக்கும்போதும் |
| | | கோலநீலம் | அழகிய நீலோத்பலமா[னது |
| வந்துதோன்றி | வந்தவதரித்து | மட்டு | மதுவை |
| மூவெழுகால் | இருபத்தொருபடிகால் | உகுக்கும் | ப்ரவஹியாநிற்குமதாய் |
| படி | பூமியில் | கடி | பரிமளத்தால் |
| ஆர் | நிறைந்து கிடக்கிற | ஆர் | வ்யாப்தமான |
| அரசு | க்ஷத்ரியர்களை | புறவில் | பர்யந்தங்களை யுடையதுமான |
| களைகட்ட | நிரஸித்த | | |
| பாழியானை | பலத்தையுடையவ | கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே. | (சு) |
| அம்மானை | ஸர்வேச்வரனை,[னை | | |

வ்யா.— ஆறும்பாட்டு. (வடிவாயித்யாதி) வடித்தவாயை யுடையமழுவே ஆயுதமாகவந்து தோன்றி இருபத்தொருபடிகால்

---

விவக்ஷித்தருளுகிறார் (அவ்வூரா இத்யாதி). (பொன்படுகுட்டம்) பொன் விளையுமாகரம். ... ... ... ... ... ... ... (ரு)

அரு.—ஆறும்பாட்டு. (வடிவாயித்யாதி) தன்னடிக்கீழ் கொள்ளுமவனே யன்றிக்கே, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களாயுள்ள ஸகல ப்ரதிபந்தகங்களையும் அறுக்க வல்லவனென்று ஸ்ரீபரசுராமாழ்வானை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(வடித்த) கூராக்கின. குட்டிகளோடும் பார்யைகளோடும் உண்ண,

பூசுய

பூமி தெளியும்படியாகவந்து தோன்றின க்ஷத்ரியகுலத்தை அறுத்துப்போகட்ட வலியையுடைய ஸர்வேஶ்வரனை. (குடியாலித்யாதி) பசல்களோடும் குட்டிகளோடும் வண்டுகள்வந்து புஜிக்க, பின்னையும் தர்ஶநீயமான நீலமானது மதுவை ப்ரவஹியாநிற்கும். கடலிலே ஒரு சிறுங்கையை புஜிக்குங்காட்டில் கடல்வற்றுதிறே. பரிமளப்ரசுரமான பர்யந்தத்தையுடைய திருக்கண்ணபுரம். .... .... (௬)

மூ.—

வையமெல்லாமுடன் வணங்க வணங்காமன்னனாய்த்தோன்றி
வெய்யசீற்றக்கடியிலங்கை குடிகொண்டோட வெஞ்சமத்து
செய்தவெம்போர்நம்பரனைச் செழுந்தண்கானல் மணநாறும்
கைதைவேலிக் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வையமெல்லாம் | உலகமெல்லாம் | வெஞ்சமத்து | க்ரூரமானயுத்தத்திலே |
| உடன் | உடன்பட்டு | வெம் | க்ரூரமான |
| வணங்க | திருவடிகளில் ஆஶ்ரயிக்கும்படியாய் | போர் | யுத்தத்தை |
| வணங்கா | (தான் ஒருவரையும்) வணங்காதவனான | செய்த | பண்ணின |
| மன்னனாய் | சக்ரவர்த்தித் திருமகனாய் | நம் | நம்முடைய |
| தோன்றி | வந்தவதரித்து | பரனை | ஸ்வாமியை |
| வெய்ய | கடுமையான | செழும் | அழகியதாய் |
| சீற்றம் | சீற்றத்தையுடைத்தான | தண் | குளிர்ந்ததான |
| கடியிலங்கை | அரணாகப் போரும்படியான மதிளையுடைய லங்காநகரத்திலுள்ளார் | கானல் | நைதல் நிலத்தையும் |
| குடிகொண்டு ஓட | பார்யா புத்ராதி குடிகளுடன் ஓடும்படியாக | மணம்நாறும் | மிககபரிமளத்தையுடைத்தான |
| | | கைதை | தாழையையும் |
| | | வேலி | வேலியாக வுடைத்தான |
| | | கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே. (௭) | |

வுண்ணவற்றுதோவென்ன வருளுகிறார் (கடலிலேயித்யாதி). ... ... (௬)

அ௫.—ஏழாம்பாட்டு. ஸகலப்ரதிபந்தகங்களும் போக்குமளவன்றிக்கே தன்னையேநாளும் நான்வணங்கும்படி தன்சேஷித்வம்தோற்றவந்தவனென்று சக்ரவர்த்தித் திருமகனை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"எல்லாம்" என்றதுக்குக் கருத்தருளுகிறார் (உகந்தாரித்யாதி). (௭)

வ்யா.—ஏழாம்பாட்டு. (வையமித்யாதி) உகந்தாருடன் உகவாதாருடன் வாசியறதன்னை வணங்கத் தான் ஒருவரையும் வணங்காத ராஜனுய்த்தோன்றி, வெவ்விய சீற்றத்தையுடைய கடியிலங்கை குடிகொண்டோட யுத்தத்திலே வெவ்விய போரைப்பண்ணின நம்முடையஸ்வாமியை. (செழுந்தணித்யாதி) அழகிய குளிர்ந்த நெய்தல்நிலத்தையும் பரிமளத்தையுமுடைத்தான தாழையையும் வேலியாகவுடைத்தான திருக்கண்ணபுரம். (எ)

மூ.—

ஒற்றைக்குழையும் நாஞ்சிலுமொருபால் தோன்றத்தான்தோன்றி
வெற்றித்தொழிலார் வேல்வேந்தர் விண்பாற்செல்லவெஞ்சமத்து
செற்றகொற்றத் தொழிலானைச் செந்தீ மூன்றுமில்லிருப்ப
கற்றமறையோர் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒற்றை | ஒருகாதில் தொங்குகிற | கொற்ற | ஜயத்தையே |
| குழையும் | குண்டலம் (ஒருபக்கத் | தொழிலானை | தொழிலாகவுடையவனை |
| ஒருபால் | ஒருபக்கத்தில் [ திலும்) | | |
| நாஞ்சிலும் | கலப்பையும் | செம் | சிவந்த ஜ்வாலைகளோடு கூடிய |
| தோன்ற | தோன்றும்படி | | |
| தான் | தாமே | தீமூன்றும் | (கார்ஹஸ்த்யாதி) மூன்று அக்நிகளும் |
| தோன்றி | பலராமனுய்த்தோன்றி | | |
| வெற்றி | ஜயத்தையே | இல் | க்ருஹங்களில் |
| தொழிலார் | வ்யாபாரமாக வுடைய | இருப்ப | இருக்க |
| வேல் | ஆயுதத்தை தரியாநின் | கற்ற | வேத ஶாஸ்த்ரங்களை கற்றவர்களான |
| வேந்தர் | ராஜாக்கள் [ ற | | |
| விண்பால் | வீரஸ்வர்க்கத்துக்கு | மறையோர் | ப்ராஹ்மணர் வர்த்திக்கிற |
| செல்ல | செல்லும்படியாக | | |
| வெஞ்சமத்து | யுத்தத்திலே | | கண்ணபுரத்து அடியேன்கண்டு கொண்டேனே. (அ) |
| செற்ற | அழியச்செய்வதாலுண்டான | | |

அரு.—எட்டாம்பாட்டு. (ஒற்றையித்யாதி) கையும் கலப்பையுமாய்ப் பிறந்த நம்பி மூத்தபிரான் விஜயத்திலே தாம்தோற்று "ஜிதம் தே ஜிதந்தே" என்னப்பண்ணினுனென்று அவ்வவதாரத்தையநுஸந்திக்கிருரென்றுஸங்கதி.

வ்யா.—எட்டாம்பாட்டு. (ஒற்றைக்குழையுமித்யாதி) ஒரு காதுக்குழையும் கலப்பையும் ஒருபால்தோன்றத்தான் வந்து வெற்றியே தொழிலாகவுடைய வேலையுடைய ராஜாக்கள் விண்ணிலே செல்ல, யுத்தத்திலேசெற்ற வெற்றியைத் தொழிலாகவுடையவனை. (செந்தீயித்யாதி) த்ரேதாக்நிகள் தங்கள் க்ருஹங்களிலேயிருக்கை. த்ரேதாக்நி முகத்தாலே பகவத்ஸமாராதநம் பண்ணுகையாலே ஹவிஸ்ஸைக் கொள்ளத் தங்கள் க்ருஹங்களுக்குள்ளே ஸர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கும்படி கற்றப்ராஹ்மணர். .... .... (அ)

மூ.—

துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர்ந்துய்யப் பாரதத்துள்
இவரித்தரசர்தடுமாற விருள்நாள்பிறந்த வம்மானை
உவரியோதம் முத்துந்தவொருபா லொருபாலொண்செந்நெல்
கவரிவீசும் கண்ணபுரத்தடியேன் கண்டுகொண்டேனே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துவரி | இலவந்தம் பூப்போலேயும் | இருள் | நன்றாய் இருண்ட |
| கனி | கோவைப்பழம்போலேயும் (இருக்கிற) | நாள் | க்ருஷ்ணபக்ஷாஷ்டமியில் |
| வாய் | திருவதரத்தை யுடையளான | பிறந்த | அவதரித்தவனான |
| நிலமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டியான | அம்மானை | ஸ்வாமியான கண்ண பிரானை |
| துயர் | கஷ்டமானது [வள் | உவரி | ஸமுத்ரத்தினுடைய |
| தீர்ந்து | நிவ்ருத்தமாகி | ஓதம் | அலைகளானதுகள் |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படி | ஒருபால் | ஒருபக்கத்தில் |
| பாரதத்துள் | பாரதயுத்தத்திலே | முத்து | முத்துக்களை |
| இவரித்த அரசர் | எதிரிட்டராஜாக்கள் | உந்த | ஒதுக்கும்படியாகவும் |
| தடுமாற | தடுமாறும்படியாக | ஒருபால் | ஒருபக்கத்தில் |
| | | ஒண் | அழகிதான |

(ஒருகாது) என்றது கலப்பையை ஒருதோளிற் சுற்றிக்கொண்டு புறப்படுகையாலே ஒருகாதிற்குழையே புறம்புள்ளாருக்கு தோற்றுமென்னும் கருத்தாலே யென்றுகொள்வது. (விண்ணிலே) வீரஸ்வர்க்கத்திலே. "செற்ற" நசிப்பித்த. "மறையாளர்" என்னவமைந்திருக்க, "கற்ற" என்கையாலே தத்தத்ஜ்ஞாநநிஷ்டராம்படி கற்கை பலிக்கையாலே, அத்வைத அருளுகிறார் (த்ரேதாக்நிமுகத்தாலே யித்யாதி). ... ... ... ... ... (அ)

| | | |
|---|---|---|
| செந்நெல் | செந்நெலானது | கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (கூ) |
| கவரி | சாமரங்களை | |
| வீசும் | வீசாநிற்குமதான | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு, (துவரிக்கனிவாயித்யாதி) இலவந் துவரிகள்போலேயும் கோவைக்கனிபோலேயு மிருக்கிற வாயையுடைய நிலமங்கை க்லேசம்கெட்டு உஜ்ஜீவிக்கைக்காக. (பாரதமித்யாதி) பாரதஸமரத்திலே இவரித்தரசர் என்னுதல்; அன்றியே பாரதத்திலே அரசர்தடுமாற இவரித்தென்னுதல். இவர்தல் - ஏறுதல். (இருள்நாள்பிறந்த வம்மானை) அபரபக்ஷத்திலே அஷ்டமியிலே நள்ளிருளிலே பிறந்தவனை. (உவ்ரியித்யாதி) ஓரருகு கடல் திரையானது முத்தைத்தள்ள; ஓரருகு அழகியசெந்நெலானது கவரியெறட்டும் கண்ணபுரம். .... .... .... .... .... (கூ)

மூ.—மீனோடாமை கேழலரிகுறளாய் முன்னுமிராமனாய்
தானாய்பின்னுமிராமனாய் தாமோதரனாய்க் கற்கியும்
ஆனான்றன்னைக் கண்ணபுரத்தடியன் கலியனொலிசெய்த
தேனாரின்சொல் தமிழ்மாலை செப்பப்பாவம்நில்லாவே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மீனோடு | மத்ஸ்யரூபியாயும் | பின்னும் இராமனாய் | பலராமனாயும் |
| ஆமை | கூர்மரூபியாயும் | தாமோதரனாய் | க்ருஷ்ணனாயும் |
| கேழல் | வராஹரூபியாயும் | கற்கியும் | கற்கியாயும் |
| அரி | ந்ருஸிம்ஹனாயும் | ஆனான் தன்னை | அவதரித்தருளின எம்பெருமானை |
| குறளாய் | வாமநனாயும் | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே (ஸேவித்து) |
| முன்னும்இராமனாய் | பரசுராமனாயும் | | |
| தானாய் | சக்ரவர்த்தி த்திருமகனாயும் | அடியன் | சேஷபூதரான |

அரு.—ஒன்பதாம்பாட்டு. (துவரியித்யாதி) தம்மை ஜிதமென்னப் பண்ணின நம்பிமூத்தபிரானை அநுஸந்தித்துத் தம்முடைய ஸகலபாரங்களும் தீர்க்கப் பிறந்தகண்ணனை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(இலவந்துவரிகள்) என்றது - முன் இலவமரத்திற்சிவந்த பூவென்றபடி. "இருளையுடையநாள்" என்று விசேஷித்ததுக்கு ப்ரமாண ப்ரஸித்தியுமுட்கொண்டு தாத்பர்யமருளுகிறார் (அபரேத்யாதி). (எறட்டும்) வீசும். ... (கூ)

| | | | |
|---|---|---|---|
| கலியன் | ஆழ்வாராலே | சொல் | சொற்களை யுடையது மான |
| ஒலி | ஒலியுடன் | தமிழ் மாலை | இத்திருமொழியை |
| செய்த | அருளிச் செய்யப்பட்டதாய் | செப்ப | அப்ய (ஙூ) ஸிக்க |
| தேன் | அம்ருதத்தாலே | பாவம் | பாபமானது |
| ஆர் | பூர்ணமான | நில்லாவே | நிற்கமாட்டாது. (க0) |
| இன் | அழகிதான | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மீனோடித்யாதி) மத்ஸ்யாதிதசாவதாரங்களையும்பண்ணி ஜகத்ரக்ஷணம்பண்ணின தன்னைத் திருக்கண்ணபுரத்திலே கண்டடிமைபுக்க ஆழ்வாரருளிச்செய்த தேனோடொத்த நல்லசொல்லையுடையதமிழ்மாலை சொல்லப் பாவமானதுபோம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து எட்டாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## எட்டாம்பத்து ஒன்பதாந்திருமொழி
### கைம்மானம் ப்ரவேசம்.

வ்யா.—தாம் நெடுங்காலமிழந்த விழவுகளெல்லாம்தீர திருக்கண்ணபுரத்திலே தம்மை அநுபவிப்பதாக வெழுந்தருளி யிருந்தானென்றார் கீழ்த்திருமொழியிலே; இதில் இப்படி என்னிழவெல்லாம் தீர்க்கவந்தெழுந்தருளி நிற்கிற திருக்கண்ணபுரத்திலே கருவரைபோல் நின்றானுக்கு அடியேன் வேறொருவர்க்குரியேனல்லேனென்கிறார்.

அரு.—பத்தாம்பாட்டு. (மீனோடித்யாதி) "ஆர்தல்" பொருந்துதலாய், அத்தால்பலிதம் (ஒத்த) என்றது. ... ... ... ... ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

கைம்மானம் ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில் அவனுடைய பலபடிகளையும் காட்டுகையாலே ஜ்ஞாநப்ரதாநதேசமென்றார். அந்த ஜ்ஞாநகார்யமான க்ருதார்த்ததாநுஸந்தாநத்தாலே இனி ஒருவர்க்கும் சேஷமன்றென்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதியை அருளுகிறார் (தாமித்யாதி).

மூ.—கைம்மானமதயானை யிடர்தீர்த்தகருமுகிலை
மைம்மானமணியை யணிகொள்மரதகத்தை
எம்மானையெம்பிரானை யீசனையென்மனத்துள்
அம்மானையடியே னடைந்துய்ந்துபோனேனே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| கை | துதிக்கையினுடைய |
| மானம் | பெருந்தன்மையை யுடையதான |
| மத | மதித்திருக்கிற [ய |
| யானை | கஜேந்த்ராழ்வானுடை |
| இடர் | (முதலையால் நேர்ந்த) துக்கத்தை |
| தீர்த்த | போக்கினவனாய், |
| கருமுகிலை | காளமேகம்போன்ற வடிவையுடையனாய், |
| மை | மைபோன்ற நிறத்தை யுடைய, |
| மானம் | பெருவிலையனான |
| மணியை | மணிபோன்றவனாய், |
| அணிகொள் | அழகுடையதான |
| மரதகத்தை | மரதகமணிபோன்றவனாய், |
| எம்மானை | எனக்குஸ்வாமியானவனாய், |
| எம்பிரானை | எனக்கு உபகாரகனான |
| ஈசனை | ஸர்வேஶ்வரனாய் |
| என் | என்னுடைய |
| மனத்துள் | ஹ்ருதயத்திலே (நித்ய வாஸம்பண்ணுகிற) |
| அம்மானை | ஸர்வேஶ்வரனை |
| அடியேன் | சேஷபூ (பூ) தனான |
| அடைந்து | ஆஶ்ரயித்து [நான் |
| உய்ந்து போனேனே | உஜ்ஜீவித்துப்போனேன். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (கைம்மானமித்யாதி) முன்கையிடுக்காலே எல்லாவற்றையும் தூக்கி அடித்துப் பொகடுகிறேனென்றிருக்கிறபெருந்தன்மையையுடையமதயானையைஇடர்தீர்த்த, காளமேகம்போன்றவடிவையுடையவனை. மைபோன்ற நிறத்தையுடைய பெருவிலையனான மணிபோன்றவனை. அழகிய மரதகத்தை; அவ்வடிவழகாலே என்னையெழுதிக்கொண்டவனை. எனக்கு உபகாரகனான ஸர்வேஶ்வரனை. (என்மனத்தித்யாதி) என்னெஞ்சிலே யிருக்கிற ஸர்வேஶ்வரனை, அடைந்து உஜ்ஜீவித்துப்போனேன். .... .... (க)

அரு.—முதற்பாட்டு. (கைம்மானமித்யாதி) "மானம" பேரளவாய், இப்படி விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (முன்கையித்யாதி). "மானம்" பெருமையாய், அதின்தாத்பர்யம் (பெருவிலையனாய்) என்றது. ... ... (க)

மூ.—தருமானமழைமுகிலைப் பிரியாது தன்னடைந்தார்
வருமானம்தவிர்க்கும் மணியை யணியுருவில்
திருமாலையம்மானை யமுதத்தைக் கடல்கிடந்த
பெருமானை யடியேனடைந் துய்ந்து பிழைத்தேனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தரு | கல்பகதருபோன்றவனாய், | திருமாலை | ஸ்ரீய:பதியாய், |
| மானம் | பெரிதான | அம்மானை | எனக்கு ஸ்வாமியாய், |
| மழைமுகிலை | காளமேகம் போன்றவனாய், | அமுதத்தை | அம்ருதம்போன்றவனாய், |
| பிரியாது | ஒருகாலும்பிரியாமல் | கடல் | திருப்பாற்கடலிலே |
| தன்னடைந்தார் | தன்னைச்சேர்ந்தவர்களுக்கு | கிடந்த | கண் வளர்ந்தருளுகிறவனுமான |
| வரும் | வரும்படியான | பெருமானை | ஸர்வாதிகனான எம்பெருமானை |
| மானம் | அவமானங்களை | அடியேன் | தாஸபூதனான நான் |
| தவிர்க்கும் | போக்குமதான | அடைந்து | ஆஶ்ரயித்து |
| மணியை | சிந்தாமணிபோன்றவனாய், | உய்ந்து | உஜ்ஜீவித்து |
| அணி | அழகிதான | பிழைத்தேனே | பிழைக்கப் பெற்றேன். |
| உருவில் | வடிவையுடையரான | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தருமான மித்யாதி) அபேக்ஷித்தார்க்கு அபேக்ஷிதங்களைக் கொடுக்கக் கடவதாயிருந்துள்ள கல்பகதருபோலவும், அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கொடுக்கக் கடவதான பெரிய மேகம்போலவுமானவனை. தன்னைச்சேர்ந்தார்க்குவரும் அவமானங்களைப்போக்கும் மணியை. "மணியை" என்கிறது - சிந்தாமணியை. அழகியவடிவையுடைய ஶ்ரிய:பதியை; ஸர்வசேஷியை. என்னைச் சாவாமைக் காத்தவனை; என்னுடைய ரக்ஷணத்திலே உத்யுக்தனாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்

அரு.—இரண்டாம்பாட்டு. (தருமானமித்யாதி) ஆனைக்கூக்குரல் கேட்டோடி வந்தபடியைக் கீழருளிச்செய்தார்; ஆனைக்கூக்குரல் கேட்கவேணுமென்று அணித்தாகக்கிடந்த கிடையைஅநுபவித்துக்ருதார்த்தனானேனென்கிறாரென்று ஸங்கதி.

தருவைப்போலவும், மானமழை முகில்போலவுமானவனையென்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளுகிறார் (அபேக்ஷித்தார்க் கித்யாதி). ப்ரக்ருதோப

வாதிகளை. ப்ரஹ்மாதிகளுக்காகக் கடலிலேவந்து கண்வளர்ந்தருளின பெரியவனை. அடியேனடைந்துய்ந்து பிழைக்கப்பெற்றேன்.

மூ.—விடையேழன்றடர்த்து வெகுண்டு விலங்கலுறப்
படையாலாழி தட்ட பரமன் பரஞ்சோதி
மடையார்நீலம்மல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்
றுடையானுக் கடியேனொருவர்க் குரியேனோ. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | அந்தகாலத்திலே | ஆர் | பரந்திருக்கிற |
| விடைஏழ் | ஏழுவ்ருஷபங்களையும் | நீலம் | நீலோத்பலங்களாலே, |
| வெகுண்டு | சீறிக்கொண்டு | மல்கும் | வ்யாப்தமான |
| அடர்த்து | நிரஸித்தவனாய், | வயல் | வயல்களாலே |
| விலங்கல் | த்ரிகூடபர்வதத்தில் | சூழ் | சூழப்பட்ட |
| உற | சேரும்படியாக | கண்ணபுரம் ஒன்று | திருக்கண்ணபுரமொன்றையே |
| படையால் | வாநரஸேனையால் | உடையானுக்கு | (நித்யவாஸமாக) உடையனான எம்பெருமானுக்கு |
| ஆழி | ஸமுத்ரத்தில் | அடியேன் | சேஷபூ (த்ய) தனான நான் |
| தட்ட | ஸேதுபந்தநம்பண்ணினவனாய், | ஒருவர்க்கு | வேறுசிலர்க்கு |
| பரமன் | ஸர்வஸ்மாத்பரனாய், | உரியேனோ | பவ்யனாவேனோ? (ங) |
| பரஞ்சோதி | பரமதேஜோரூபியாய், | | |
| மடை | மடைகளிலே | | |

அவ.—மூன்றாம்பாட்டு. இதுதான் உமக்கு எத்தனைகுளிக்கு நிற்குமென்ன; நான் பிறர்க்குரியேனல்லேனென்கிறார்.

வ்யா.—(விடையித்யாதி) சீறி ருஷபங்களேழையும் நெரித்து த்ரிகூடசிகரத்திலே சென்றுகிட்டும்படியாக ❋ கானவெண்குரங்கும் முசுவும் படையாகக் கொண்டு கடலை யடைத்த. அன்றிக்கே அஸ்தமய பர்வதத்திலே ஆதித்யனஸ்தமித்தானென்னும்படி திருவாழியாலே ஆதித்யன் தேஜஸ்ஸைத்தடுத்து மறைத்த. (பரமன்) ஸமாதிக தரித்ரன். (பரஞ்சோதி) பிராட்டிக்கு வந்த ப்ரதிபந்தகத்தைப் போக்கி அத்தால் வந்த தேஜஸ்ஸையுடையனாயிருக்கிறவன்.

(மடையித்யாதி) மடைகளடைய மிக்கநீலத்தை யுடைத்தான

---

யோகியாக தாத்பர்யமருளிச்செய்து சப்தார்த்த மருளுகிறார் (ப்ரஹ்மாதீத்யாதி). ... ... ... ... ... ... ... ... (ங)

வயலாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தைத் தனக்கு வாஸஸ்தாநமாக வுடையவனுக்கு. ஸ்ரீவைகுண்ட்ட நாதனாயிருக்கு மிருப்புக் கவ்வருகே ஒன்றுபோலே காணுமிது. (அடியேன்) சேஷபூதனான நான். (ஒருவர்க்குரியேனோ) வேறுசிலர்க்கு உரியேனல்லேன். இத்தால் தம்ஸ்வரூபம் சொல்லுகிறார். பிறர்க்குரியேனல்லேனென்னுமிடம் சொல்லுகிறார். அஸாதாரண விபூதியுக்தனானவனுக் கென்னுமிடம் சொல்லுகிறார். .... .... .... .... .... (௩)

மூ.—மிக்கானைமறையாய் விரிந்தவிளக்கையென்னுள்
புக்கானைப்புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையை
தக்கானைக்கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக்கனியை யடைந்துய்ந்து போனேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மிக்கானை | ஸர்வாதிகனாய், | தக்கானை | க்ருபாவானாய், |
| மறையாய் | வேதப்ரதிபாத்யனாய், | கடிகை | திருக்கடிகையாகிற |
| விரிந்த | பரிச்சேதிக்க வொண்ணாதவனாய், | தடம் | விசாலமான |
| விளக்கை | விளக்குபோல் ஸ்வயம்ப்ரகாசனாய், | குன்றின் | மலையினுடைய |
| என் | என்னுடைய | மிசை | சிகரத்தில் |
| உள் | ஹ்ருதயத்திலே | இருந்த | எழுந்தருளி யிருக்கிற |
| புக்கானை | புகுந்தவனாய் (அதனாலுண்டான) | அக்காரக்கனியை | சர்க்கரையைப்போலவும் கோவைப்பழம்போலவும் போ(ஜ்ய)க்ய்யபூதனான எம்பெருமானை |
| புகழ்சேர் | புகழையுடையனாய் | அடைந்து | ஆச்ரயித்து |
| பொலிகின்ற | ப்ரகாசியாநின்ற | உய்ந்து போனேனே | உஜ்ஜீவிக்கப் பெற்றேன். (௪) |
| பொன்மலையை | பொன்மலைபோன்றவனாய், | | |

அநு.—மூன்றாம்பாட்டு. (விடையித்யாதி) ஸங்கதிதன்னை யருளுகிறார் (ஸ்ரீவைகுண்ட்டேத்யாதி). (அஸாதாரண விபூதியுக்தன்) என்றதுக்கு "வானவர்நாடு" என்னும்படியான பரமபதமன்றிக்கே *நான்முகனார்பெற்ற நாடான லீலாவிபூதியுமன்றிக்கே, *தானுகந்தவூர் திருப்பதிகளாகையாலே இதுவே அவனுக்கு அஸாதாரண விபூதியென்று கருத்து. ... ... (௩)

அநு.—நாலாம்பாட்டு. (மிக்கானையித்யாதி) "ஒருவர்க்குரியேனோ" என்றார்கீழ். அதுக்கடி அவனுடைய நிரதிசயபோக்யதையென்று அக்காரக் கனியை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

வ்யா.—நாலாம்பாட்டு. (மிக்கானை) ஸர்வாதிகனை. (மறையாய் விரிந்தவிளக்கை) வேறொன்றால் காணவேண்டாதே தனக்குத்தானே ப்ரகாசகமாயிருப்பது. ப்ரமாணங்களாலே அறியப்பார்க்குமன்று அவற்றாலே ப்ர்காசிக்கிற மேன்மைக்கு எல்லையன்றிக்கேயிருப்பது. (என்னுள்புக்கானை) என்ஹ்ருதயத்திலே தானே புகுந்தவனை; "ஒருஸம்ஸாரி சேதநனுடைய ஹ்ருதயத்திலே அவனுக்கபேக்ஷையின்றிக்கே யிருக்கத்தானே போய்புகுவதே? இதொரு நீர்மை யிருக்கும்படியே" என்று இருந்ததேகுடியாக எல்லாருமொக்கச்சொல்லுகையாலே வந்தமிக்கபுகழையுடையனாய்க்கொண்டு உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை, பரமதார்மிகனை. திருக்கடிகையாகிற மலையின்மேலே அக்காரம்போலேயும் கனிபோலேயும் நிரதிஶயபோக்யனாயிருக்கிறவனை. .... .... .... .... .... .... (ச)

மூ.—வந்தாயென் மனத்தேவந்து நீபுகுந்தபின்னை
எந்தாய் போயறியாயிதுவே யமையாதோ
கொந்தார் பைம்பொழில்சூழ் குடந்தைக்கிடந்துகந்த
மைந்தாவுன்னையென்றும் மறவாமைப் பெற்றேனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எந்தாய் | எனக்கு ஸ்வாமியானவனே! | போய்அறியாய் | நித்யஸூரிகள் பக்கல் போவதாகவும் நினைக்கிறிலை; |
| வந்தாய் | (நானிருந்தவிடத்தே) வந்தாய்; | இதுவே | (இனி) இந்தபேறே |
| என் | என்னுடைய | அமையாதோ | போதாதோ?; |
| மனத்தே | ஹ்ருதயத்திலே | கொந்து | கொத்துக்களாலே |
| நீ | நீயே | ஆர் | பூர்ணமாய் |
| வந்து | கிட்டி | பைம்பொழில் | அழகியதான சோலைகளாலே |
| புகுந்தபின்னை | ப்ரவேசித்தபிறகு | சூழ் | சூழப்பட்டதான |
| | | குடந்தை | திருக்குடந்தையில் |

"விளக்கு" என்றதுக்குத் தாத்பர்யம் (வேறொன்றாலித்யாதி). மறைக்கு ப்ரதிபாத்யனாய், அத்தாலும் ஆராலும் பரிச்சேதிக்கப் போகாதபடி விரிந்தவனென்று சப்தார்த்தமாய்தாத்பர்யமருளுகிறார் (ப்ரமாணங்களாலே யித்யாதி). புகழித்யாதிக்குக் கீழ்பதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (ஒருவித்யாதி). "தக்கான்" - தகவுடையவன் என்றுக்கித் தாத்பர்யமருளுகிறார் (பரமதார்மிகனை) என்று. ... ... ... ... ... ... (ச)

| | | | |
|---|---|---|---|
| கிடந்து | கண்வளர்ந்தருளி | என்றும் | என்றைக்கும் |
| உகந்த | (அதனால்) உகப்பையு | மறவாமை | மறவாமலிருக்கும்படி |
| மைந்தா | மைந்தனே? [டைய | | யாய் |
| உன்னை | உம்மை | பெற்றேன் | ப்ராபித்தேன். (ரு) |

அவ.—அஞ்சாம்பாட்டு. நாம் என்னஉபகாரம்பண்ணினோமர்க்குத்தான் இப்படிகிடந்து படுகிறதென்ன;

வ்யா.—(வந்தாயித்யாதி) இதுக்கு மேற்பட நீ பண்ணக் கடவதொருஉபகாரமுண்டோ? (வந்தாய்) நானிருந்தவிடம்தேடி நீயே வந்தாய். இவன் வந்திடுவானுக்கென்றுமிராத என்ஹ்ருதயத்திலே நீயேவந்து புகுந்தபின்பு, என்ஸ்வாமியானவனே! நித்யஸூரிகள் பக்கல் போவதாகவும் நினைக்கிறிலை. (இதுவேயமையாதோ) இனி இதுக்குமேற்பட ஒருவனுக்குப் பேறுகையாவதென்? கொத்துக்கள் மிக்கு அழகியதாயிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளி. "நாம் ஆஸ்ரிதர்க்கு உறுப்பாகப் பெற்றோமிறே" என்று அத்தாலே உகந்து இவர்களுக்கு விடவொண்ணாதபடி நவீக்ருதமான யௌவநத்தை யுடையனாயிருந்தவனே! இப்படி உபகாரகனான உன்னை மறவாதொழியப் பெற்றேன். நீயோ தீரக்கழிய உபகரித்து நின்றாய்; நான் அந்த உபகாரத்தை மறவாதொழியப் பெற்றேன். இனிஇதுக்குமேற்பட பேறுண்டோ?

மூ.—எஞ்சாவெந்நரகத்தழுந்தி நடுங்குகின்றேற்கு
அஞ்சேலென்றடியேனை யாட்கொள்ளவல்லானை
நெஞ்சேநீநினையாதிறைப்போது மிருத்திகண்டாய்
மஞ்சார்மாளிகைசூழ் வயலாலிமைந்தனையே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எஞ்சா | (ஒருகாலும்) குறைவில்லாத | அஞ்சேல் | "பயப்படாதேகொள்" |
| | | என்று | என்று சொல்லி |
| வெம் | வெவ்வியதான | அடியேனை | சேஷபூதனான என்னை |
| நரகத்து | நரகத்திலே | ஆட்கொள்ள | தாஸபூதனாக ஆக்கிக்கொள்ள |
| அழுந்தி | ஆழங்கால்பட்டு | | |
| நடுங்குகின்றேற்கு | நடுங்குகிற எனக்கு | வல்லானை | ஸமர்த்தனாய், |

அரு.—அஞ்சாம்பாட்டு. (வந்தாயித்யாதி) பாட்டுக்கெல்லாம் தொகுத்துத் தாத்பர்யம் (இதுக்கித்யாதி). "பெற்றேன்" என்கிற ஸ்வரத்துக்குட்லாகக் கருத்தருளுகிறார் (நீயோவித்யாதி). ... ... ... ... (ரு)

| | | | |
|---|---|---|---|
| மஞ்சு | மேகம் (வரையில்) | மைந்தனை | ஸ்வாமியை |
| ஆர் | வ்யாப்தமான | நெஞ்சே | மனமே |
| மாளிகை | க்ருஹங்களால் | நீ | நீ |
| சூழ் | சூழப்பட்டதாய் | இறைப்போது | க்ஷணகாலமும் |
| வயல் | வயல்களோடே கூடினதுமான | நினையாது | நினையாமலே |
| ஆலி | திருவாலியில் எழுந்தருளி யிராநின்ற | இருந்திகண்டாய் | இராநின்றாய். (கூ) |

அவ.—ஆறும்பாட்டு. நெஞ்சைப்பார்த்து அதினுடைய நினைவைக் காதாசித்கமாக்கி அவன் நமக்கு உபகரித்துநின்றான். நீ தப்பச் செய்யாநின்றாயென்கிறார்.

வ்யா.— (எஞ்சாவித்யாதி) யமன் தண்டலாலால் பண்ணின பாபத்தைக் கணக்கிட்டு அதுக்குத் தக்கபலத்தை அநுபவிப்பித்து பின்னை விட்டடிப்பார்கள்; அங்ஙனன்றிக்கே ஸம்ஸாரத்துக்கே ஹேதுவான பாபத்துக்கு ஓரவதியில்லாமையாலே ஒருகாலும் குறைந்துகாட்டாதாயிற்று. ஒருகாலும் குறையாதே யிருக்கிற ஸம்ஸாரத்திலே தரைகாணவொண்ணாதபடி அழுந்தி, நடுங்குகிற வென்னை, "நானுண்டே, நீ அஞ்சாதேகொள்" என்று. (அடியேனை யாட்கொள்ளவல்லானை) க்ஷத்ரிய புத்ரன்தலையிலே முடியை வைத்தாப்போலே.

(நெஞ்சே நீ நினையாதிறைப்போதுமிருந்திக்கண்டாய்)நீஜ்ஞாநப்ரஸரத்வாரமன்றோ? "நீ நினை"என்று என்னைப்ரேரிக்கவேண்டாவோ? ஒருக்ஷணகாலமும் நீ நினையாதேயிராநின்றாய். (மஞ்சாரித்யாதி) நினைக்க அருமைப்படவேண்டும்படி அவன்றன்னை யரியனாக்கித்தான் நீ நினையாதிருக்கிறாயோ?. மேகபதத்தளவும் ஓங்கின மாடங்கள் சூழ்ந்திருப்பதாய், வயலோடு கூடின திருவாலி யிலே வந்து ஸந்நிஹிதனான மைந்தனையே. .... .... .... (கூ)

---

அரு.—ஆறும்பாட்டு.—(எஞ்சாவித்யாதி) கீழ்தாத்பர்ய மருளிச்செய்து சப்தார்த்தமருளுகிறார் ( ஒருகாலுமித்யாதி ). "அடியேன்" என்றத்தாலே ஆட்கொள்ள ப்ராப்தனென்னுமது தோற்றுமென்று த்ருஷ்டாந்தமருளுகிறார் (க்ஷத்ரியேத்யாதி). ... ... ... ... ... ... ... (கூ)

மூ.—பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும் நின்றடியேனுக்கு
உற்றானாய்வளர்த் தென்னு யிராகி நின்றானை
முற்றா மாமதிகோள் விடுத்தானை யெம்மானை
எத்தால்யான் மறக்கேனிது சொல்லென்னேழைநெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெற்றார் | பித்ராதிகள் | நின்றானை | இருக்குமவனாய், |
| பெற்று | அடியேனை (பெற்ற பின்பு) | முற்றா | பருவம் நிரம்பாத |
| | | மாமதி | சந்த்ரனுடைய |
| ஒழிந்தார் | (யௌவந விரோதியென்று) போகட்டுப் போனார்கள்; | கோள் | க்ஷயத்தை |
| | | விடுத்தானை | போக்கினவனுமான |
| | | எம்மானை | என்ஸ்வாமியை! |
| பின்னும் | பின்பு | எத்தால் | எந்தமார்க்கத்தாலே |
| அடியேனுக்கு | சேஷபூதனான எனக்கு | யான் | நான் |
| உற்றானாய் | ஸகலவிதபந்துவாய் | மறக்கேன் | மறப்பேன்; [தான் |
| நின்று | நின்று | இது | இந்தவிஷயத்தை |
| வளர்த்து | உஜ்ஜீவிப்பித்து (அத | என் | என்னுடைய |
| என் | என்னுடைய [னால்) | ஏழை | அஜ்ஞதையையுடைய |
| உயிராகி | ப்ராணபூதனாய்க் கொண்டு | நெஞ்சே | மனமே! |
| | | சொல் | நீசொல்லு. (எ) |

அவ.—ஏழாம்பாட்டு. உமக்கித்தனை அதிமாத்ர நிர்பந்தமென்னென்ன; இவ்விஷயத்தை விட்டுப்போய் பின்னை நீ ஆரை நினைக்கவிருக்கிறாய்;என்? புறம்பு நினைக்க ஒருவருமில்லையோ வென்னில்; இது வன்றோ புறம்புள்ளார்படி.

வ்யா.—(பெற்றார் பெற்றொழிந்தார்) பித்ராதிகள் ராகாந்தராய் ப்ரஜைகளை உத்பாதித்து யௌவந விரோதி யென்று போகட்டுப் போக நிற்பர்களாயிற்று. பின்னையும் இவனுக் கொரு உறவு முறை யொழியச் செல்லாதிறே பண்ணிப் போந்த வாஸனையாலே, அவ்வளவில் அவர்கள் வழியாலேநின்று முகம்கொடுக்குமாயிற்று. தன் கைபார்த்திருக்கவேண்டும்படியான பருவத்தையுடைய வெனக்கு

அரு.—ஏழாம்பாட்டு. (பெற்றாரித்யாதி) "உற்றானாய்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளுகிறார் (பின்னையுமித்யாதி). வாக்யார்த்தமருளுகிறார் (தன்கையித்யாதி).

* எல்லா உறவு முறையும் தானேயாய் நின்று நோக்கி. (என்னு யிராகிநின்றானை) தாய் தகப்பன் பொகட்டவன்றும் நான் ஜீவிக்க வேணுமென்றிருக்குமிறே இச்சேதநன்தான்; அப்படி தனக்குப் பரி வனுனதானும் நோக்கினை னுயிற்று.

பருவம் நிரம்பாதசங்க்ரனுக்கு வந்த க்ஷயத்தைப்போக்கித்தன் னுடைய ரக்ஷகத்வத்தைக்காட்டி என்னையெழுதிக்கொண்டவன். (எத்தால்யான் மறக்கேன்) பண்ணின உபகாரம் அளவுபட்டு மறக் கவோ? புறம்பேயும் ஒரு புகலுண்டாய் மறக்கவோ? (இது சொல் லென்னேழை நெஞ்சே) ஸம்ஸாரத்தே சில விடவுமாய் பற்றவுமா யிருக்கிற விருப்பைக் கொண்டு பகவத்விஷயத்தை மறக்கலா மென் றிருக்கிற நீ சொல்லு. .... .... .... .... .... (எ)

மூ—கற்றார்பற்றறுக்கும் பிறவிப்பெருங்கடலே
பற்றுவந்தடியேன் பிறந்தேன் பிறந்தபின்னை
வற்றாநீர்வயல்சூழ் வயலாலியம்மானைப்
பெற்றேன் பெற்றதுவும் பிறவாமைப்பெற்றேனே. (அ)

| பதர். | உரை. | பதர். | உரை. |
|---|---|---|---|
| அடியேன் | நான் | நீர் | ஜலஸம்ருத்தியை யுடைத்தான |
| கற்றார் | ஜ்ஞாநிகள் | வயல் | வயல்களாலே |
| பற்று | ஸங்கங்களை [மதான | சூழ் | சூழப்பட்ட |
| அறுக்கும் | நிவர்த்தித்துக்கொள்ளு | வயலாலி | திருவாலியில் எழுந்த ருளி யிருக்கிற |
| பிறவி | ஸம்ஸாரமாகிற [திலே | அம்மானை | ஸர்வேஶ்வரனை |
| பெருங்கடலே | பெரிதான ஸமுத்ரத் | பெற்றேன் | ப்ராபித்தேன்; |
| பற்று | ஒருநிமித்தமாக | பெற்றதுவும் | அந்தபேற்றையும் |
| வந்து | வந்து | பிறவாமை | (விச்சேதம் பண்ணக் கடவ) மறுபிறப்பில் லாதபடி |
| பிறந்தேன் | ஜநித்தேன்; | பெற்றேன் | அடைந்தேன். (அ) |
| பிறந்தபின்னை | பிறந்தபின்பு | | |
| வற்றா | ஒருநாளும் வற்றுமலி ருக்கிற | | |

"முற்று" என்றதுக்கர்த்தம் (பருவமித்யாதி). இதுசொல்லென்னும் படி பிடிக்கைக்கு நெஞ்சுசொல்லமாட்டுமோ வென்னும் சங்கை தீரத்தாத் பர்யமருளுகிறார் (ஸம்ஸாரத்தையித்யாதி). "ஏழை" என்று - அஜ்ஞதை யாய், அதின்தாத்பர்ய மென்னவுமாம். ... ... ... ... ... (எ)

அவ.—எட்டாம்பாட்டு. உமக்கு உற்றானாய் நின்றவன் பண்ணின வுபகாரந்தானென்னென்ன; ஸ்வாநுபவத்துக்கு விச்சேதம் வாராத படிபண்ணித் தந்தவனன்றோ வென்கிறார். அதுக்கு உம்முடைய பக்கல் உள்ளதென்னென்னில்;

வ்யா.—(கற்றாரித்யாதி) அறிவுடையார் (க) "இங்கின்றநீர்மை யினியாமுறாமை" என்றுகழித்துக்கொள்ளத்தேடும் ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே திரைமேல் திரையாகக்கொண்டுபோந்து எற்றுமா போலே ஒருஜந்மம் ஒருஜந்மத்திலே தோள்மாற ✻ மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்துபோந்தேன்; இப்படிப்பிறந்து போராநிற்கச் செய்தே நான்பிறந்த ஸம்ஸாரத்திலே அவன்வந்து ஸந்நிஹிதனுகை யாலே அவனைப் பெற்றுக்கொண்டு நின்றேன்.

(வற்றாநீரித்யாதி) ஒருநாளும் நீர்மாறாத வயல்சூழ்ந்த திரு வாலியிலே நிற்கிற ஸர்வேஶ்வரனைப் பெற்றேன். (பெற்றதுவும்) அந்தபெற்ற பேறுதானும். (பிறவாமைபெற்றேன்) இப்பேற்றுக்கு விச்சேதத்தைப் பண்ணக்கடவஜந்மம் மறுவலிடாதபடி பெற்றே னென்னுதல்; அன்றிக்கே இப்பேற்றுக்கடியாக என்பக்கல் ஒருநன் மை பிறவாதிருக்கச்செய்தே பெற்றேனென்னுதல்; அங்ஙனன்றிக்கே பெற்றேனென்னும் உபகாரஸ்ம்ருதியும் வர்த்தியாதபடி பெற்றே னென்னுதல்; உபகாரஸ்ம்ருதி அநுவர்த்தித்தவன்று ப்ரத்யுபகாரம்

அரு.—எட்டாம்பாட்டு. (கற்றாரித்யாதி) (விச்சேதம் வாராதபடி) என்ற துக்கும் "பிறவாமை" என்கிற பதத்துக்குச் சொன்னயோஜனைக்கும் சேரத் தாத்பர்யம்கண்டு கொள்வது. அதாவது - இனி ஒருபிறப்பும் வாராதபடி யென்னும்பக்ஷத்தில், அநுபவவிச்சேதத்துக்கு ப்ரஸக்தியில்லாதபடி யென் கிறது; நன்மை - பிறவாமை யென்கிற பக்ஷத்தில் நாம்பண்ணின நன்மை யாலே அநுபவம் வந்ததாகில் வேண்டினபோது அநுபவிக்கவும், மற்றைப் போது ஆறியிருக்கவுமாயிருக்கையாலே விச்சேதப்ரஸக்தியுண்டு. உபகார ஸ்ம்ருதிபிறவாமையென்கிற பக்ஷத்தில் ப்ரத்யுபகாரம் தேடித்தடுமாறவேண் டுகையால் விச்சேத ப்ரஸக்திவரும். ஆகையால் இம்மூன்று யோஜனைக்கும் அநுகுணமாக இப்படி தாத்பர்யம் கொள்ளவேணுமென்கை.

"பற்றாவந்து" நிமித்தமாகவந்து என்றாய் அத்தைஉபபாதிக்கிறார் (திவை யித்யாதி). மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி). ... ... ... (அ

(க) திருவி-க.

தேடி நெஞ்சாறல் படவேண்டும்படி யிருக்குமிறே. அதுவேண்டாதே "ப்ராப்தம்இது" என்றிருக்கும்படி உபகரித்தானாயிற்று.

மூ.—கண்ணார் கண்ணபுரம் கடிகை கடிகமழும்
தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்கமேல்திசையுள்
விண்ணோர் நாண்மதியை விரிகின்றவெஞ்சுடரை
கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்றுகொலோ.(௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண் | கண்களுக்கு | நாள்மதியை | சந்த்ரனைப்போலே நித்யாநுபாவ்யனாய், |
| ஆர் | பூர்ணவிஷயமான | விரிகின்ற | உதயமாகாநின்ற |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்திலும், | வெம் | வெவ்வியதான |
| கடிகை | திருக்கடிகையிலும், | சுடரை | தேஜஸ்ஸையுடைய ஸூர்யனைப்போன்ற ப்ரதாபமுடைய எம்பெருமானை |
| கடி | பரிமளத்தால் | | |
| கமழும் | வ்யாப்தமாய் | | |
| தண் | குளிர்ச்சியால் | | |
| ஆர் | பூர்ணமுமான | இங்கு | இவ்விடத்திலேயே |
| தாமரை | தாமரைகளாலே | கண்ணார | கண்களுக்கு பூர்ணமாக |
| சூழ் | சூழப்பட்ட | கண்டு | ஸேவித்து |
| தலைச்சங்கம் | தலைச்சங்காட்டில் | களிக்கின்றது | ஆநந்திப்பது |
| மேல்திசையுள் | மேல்பார்ஶ்வத்திலும் | என்றுகொலோ | எந்தகாலம். (௯). |
| விண்ணோர் | நித்யஸூரிகளுக்கு | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கண்ணார்கண்ணபுரம்) கண்டார்க்குக்கண்மாறவைக்க வொண்ணாதபடியான திருக்கண்ணபுரம், திருக்கடிகை, பரிமளத்தைப் புறப்படவிடாநிற்பதாய், ஶ்ரமஹரமான தாமரைகளாலே சூழப்பட்ட தலைச்சங்காட்டில் மேல்பார்ஶ்வத்தில்.
(விண்ணோர்நாண்மதியை) நித்யஸூரிகளுக்கு என்று மொக்க அநுபாவ்யனானவனாயிற்று இங்கேவந்து ஸுலபனானான். (விரிகின்ற வெஞ்சுடரை) உதயகாலத்தில் ஆதித்யனைப்போலே ப்ரதாபம்

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கண்ணாரித்யாதி) நெஞ்சும் தாமுமாய் உசாவிக்கொண்டு அநுபவியாநின்றார்கீழ். இப்படியிருக்கச்செய்தே கண்கள்தான் யுகபத்அநேக திவ்யதேசங்களையும் ஸாக்ஷாத்கரிக்க வேணுமென்றாசைப்பட்டு அது இங்குப்பிறவாமையாலே பதறுகிறாரென்று ஸங்கதி.
கண்ணுக்குப் பரிபூர்ணமான விஷயமென்றாய், தாத்பர்யமருளுகிறார் (கண்டாரித்யாதி).

விஞ்சியிருப்பது, கண்ணாலே முகக்கலாயிருப்பது. (கண்ணித்யாதி) ஒருதேசவிசேஷத்திலேபோனல் ஸதாதர்ஶநத்தாலே(க) "[illegible] - அஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமத்தை இங்கே கண்ணாலேகண்டு களிக்கப்பெறுவதுஎன்றே வென்கிறர். இங்கே கண்ணாலே காண்கையாவதென்னென்னில்; இவருடைய த்வரை யிருக்கிறபடியிறே. .... .... .... .... .... .... (கூ)

மூ.—செருநீர்வேல்வலவன் கலிகன்றிமங்கையர்கோன்
கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை
இருநீரின்தமிழின்னிசைமாலைகள் கொண்டுதொண்டீர்
வருநீர்வையமுய்ய விவைபாடியாடுமினே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரு | கறுத்தும் | இரு | அதிகமான |
| நீர் | ஜலபரிதமுமான | நீர் | நீர்மையுடையதாய் |
| முகில் | மேகம்போன்ற | இன் | இனியதான |
| வண்ணன் | திருமேனி நிறத்தை யுடையரான | தமிழ் | தமிழ்ரூபமான |
| | | இன் | இனியதான |
| கண்ணபுரத்தானை | திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளி யிருக்கிற சவரிப்பெருமாள் விஷயமாக, | இசை | காநரூபமான |
| | | மாலைகள்கொண்டு | மாலாரூபமான ப்ரபந்தத்தைக்கொண்டு |
| | | தொண்டீர் | கைங்கர்ய பரர்களான நீங்கள் |
| செரு | யுத்தம் செய்கையே | | |
| நீர் | ஸ்வபாவமாகவுடைய | வரும் | (பூமிப்பரப்படங்கலும் சூழ்ந்து) வாராநின்ற |
| வேல்வலவன் - | வேல்கை வந்திருக்குமவரான | நீர் | கடலாலே சூழப்பட்ட |
| | | வையம் | லோகங்கள் |
| மங்கையர் | திருமங்கைக்கு | உய்ய | உஜ்ஜீவிக்கும்படி |
| கோன் | ராஜாவான | இவை | இப்ப்ரபந்தத்தை |
| கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செய்த) | பாடி | காநம்செய்து |
| | | ஆடுமினே. | ஆடக்கடவீர்கள். (கO) |

(என்னென்னில்) என்றது-காண்கைக்குத் தடையென் னென்றபடி. (த்வரை) என்றது - நினைத்தபோதே அங்கேபோய் காணவேணுமென்னும் த்வரையென்கை. ... ... ... ... ... ... ... (கூ)

(க) தைத்-ப்ருகு-௰-கூ.

வ்யா.—பத்தாம்பாட்டு. (செருநீர் வேல்வலவன்) செருச்செய்கையை ஸ்வபாவமாகவுடைய வேல் கை வந்திருக்குமவருமாய், ப்ரதிபக்ஷநிரஸநஸ்வபாவருமாய், திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரான ஆழ்வார் ஶ்ரமஹரமான வடிவையுடைய சவரிப்பெருமாளையாயிற்றுக் கவிபாடிற்று.

(இருநீரித்யாதி) விஷயவைலக்ஷண்யத்தையொழியவே மிக்க நீர்மையை யுடைத்தாயிருக்கிற இன்தமிழாகிற இசைத்தொடையைக்கொண்டு கைங்கர்ய ருசியுடையரான நீங்கள் கடல்சூழ்ந்தபூமியிலே இவற்றைப்பாடுவது ஆடுவதாய் உஜ்ஜீவித்துப்போகப் பாருங்கோள். அன்றிக்கே (க) "ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச - ஸர்க்கேபிநோபஜாயந்தே ப்ரளயேநவ்யதந்திச" என்கிறபடியே வரக்கடவதான ப்ரளயத்திலேபுக்கு அழுந்திநோவுபடாமே நீங்கள் இவற்றைக்கொண்டு பாடுவதாடுவதாக உங்கள்ஸஞ்சாரத்தாலே ஜகத்தை உஜ்ஜீவிப்பிக்கப் பாருங்கோளென்னுதல். .... .... .... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து ஒன்பதாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பெரியதிருமொழி
## எட்டாம்பத்து பத்தாந்திருமொழி
### வண்டார் ப்ரவேசம்.

வ்யா.—கண்ணுலேகண்டு களிக்கின்ற திங்கென்று சொல்லிகின்

அரு.—பத்தாம்பாட்டு- (செருவித்யாதி) "வருநீர்" பூமிசூழ்ந்துவருகிற நீரானகடலென்றும், மேலேவரக்கடவ நீர்ப்ரளயஜலமென்றும் இரண்டர்த்தமருளுகிறார் (கடலித்யாதி வாக்யத்வய்த்தாலே). "வையத்திலே நீங்கள் உய்ய" என்று முந்தினயோஜனைக்கு சப்தார்த்தம். ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அரு.—வண்டார் ப்ரவேசம். "கண்ணாரக்கண்டு களிக்கின்ற திங்கென்று

(க)

றாரே; கண்ணாலே கண்டுகளிக்கை பேறானால் அதுக்குத்தன்கைபார்த்திருக்கவேண்டும்படி யிருக்கிறவனைக் கேட்போமென்று பார்த்து நீ சொல்லென்கிறார். உம்முடைய அநந்யகதித்வத்தை ஆவிஷ்கரித்து கைங்கர்யத்தையொழியச் செல்லாத உம்முடைய சாபலத்தை ஆவிஷ்கரித்தநீர், கைங்கர்யம் பெற்றீரே; வாசிகமான வடிமைசெய்யா நின்றீராகில் இனிவேண்டுவதுண்டோவென்று அத்தை இவர் திருவுள்ளத்திலேபடுத்த, அத்தாலே இனியராய்த்தலைக்கட்டுகிறார்.*

மூ.—வண்டார்பூமாமலர்மங்கை மணநோக்கம்
உண்டானே உன்னையுகந் துகந் துன்றனக்கே
தொண்டானேற்கு என்செய்கின்றாய் சொல்லுநால்வேதம்
கண்டானே கண்ணபுரத்துறையம்மானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளாலே | கண்டானே | வெளியிட்டவனுமான |
| ஆர் | பூர்ணமாய் | கண்ணபுரத்துறை | திருக்கண்ணபுரமென்கிற திவ்யதேசத்தில் வர்த்திக்குமவனான |
| பூ | அழகியதாய் | அம்மானே | ஸ்வாமியே! |
| மா | பரப்புடையதுமான | உன்னை | உம்மை |
| மலர் | புஷ்பத்தில் நித்ய வாஸம்பண்ணுகின்ற | உகந்துகந்து | மிகவும் உகந்து |
| மங்கை | பெரியபிராட்டியாருடைய | உன்றனக்கே | உனக்கே |
| மணம் | மங்களாவஹமான | தொண்டானேற்கு | அடிமைசெய்யவேணுமென்றிருக்கிறஎனக்கு |
| நோக்கம் | வீக்ஷணத்தை | என்செய்கின்றாய் | (நீ) என்னசெய்வதாய் நினைத்திருக்கிறாய் |
| உண்டானே | (தாரகமாக) உடையவனாய், | சொல்லு | சொல்லவேணும். (க) |
| நால் | நான்குவிதமான | | |
| வேதம் | வேதங்களையும் | | |

வ்யா.—முதற்பாட்டு. (வண்டாரித்யாதி) வண்டுகள் ஜாதியாகப்படிந்திருப்பதாய், தர்ஶநீயமாய் பிராட்டிக்கு நினைத்தபடி

கொலோ" என்றுவிடாய்த்தவர் "காட்டினாய் கண்ணபுரத்துறை யம்மானே" என்று களிக்கப்ரஸக்தி யென்னென்னும் சங்கையிலே ப்ரஸக்தியைக் காட்டாநின்றுகொண்டு ஸங்கதியருளுகிறார் (கண்ணாலேயித்யாதி). களிக்கப் பெறாதநாளிலே சொல்லாநின்றாரென்று கீழோடே அந்வயம். (அதுக்கு) காலாவதிக்கு. ... ... ... ... ... ... ... ... *

வர்த்திக்கைக்கீடான பரப்பையுடைத்தான தாமரைப்பூவையிருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாருடைய நோக்கை தா(ஞ)ரகாதிகளாகவுடையவனே! (உன்னை) அவளோடுகூடி யிருக்கிறஉன்னை. ப்ரஹ்மசாரி யெம்பெருமானை யன்றுய்த்து இவர்உகந்திருப்பது. (உகந்துகந்து) மிகவுமுகந்து. (உன்றனக்கே தொண்டானேற்கு) தாயும் தமப்பனும் சேரவிருக்க அநுவர்த்திப்பாரைப்போலே, அவனுமவளுமான சேர்த்தியிலே அடிமைசெய்ய வேணுமென்றுய்த்து இவர் ஆசைப்பட்டிருப்பது. பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே அடிமைசெய்யவேணுமென்னும் சாபலத்தையுடைய என்க்கு.

(என்செய்கின்றாய் சொல்லு) நீ செய்தருளப் பார்த்ததென் சொல்லு. ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவளும் அவனுமானசேர்த்தியிலேயாயிற்று இவர்நினைந்திருப்பது. உபாய பா(ஞ) வத்தில் குறைவறவிருக்கிற நீ செய்தருளுவதாக நினைத்திருக்கிறதென் சொல்லு. (என்செய்கின்றாய் சொல்லு) தம்முடைய உகப்பைப் பேற்றுக்குப் பரிகாரமாக நினைத்திருக்கிறிலர்; அவன் நினைவே பேற்றுக்குப் பரிகரமாக நினைத்திருக்கையாலே சொல்லுஎன்கிறார். (நால்வேதம்கண்டானே)ப்ரளயகாலத்தில் இவற்றினுடையஆநுபூர்வியை ஸ்மரித்திருந்து வெளியிடுகையிறே-இவற்றைக் காண்கையாவது. நித்யமானவேதத்தின ஸாக்ஷாத்காரத்துக்கு மேற்படவில்லையிறே. அன்றிக்கே பட்டர் அருளிச்செய்தாராகச் சிறியாத்தான்பணிக்கும்படி; "இதுகர்த்தரி அன்று, கர்மணிகிடாய்" என்றுப்ராப்யப்ராபகங்

---

அரு.—முதற்பாட்டு. (வண்டாரித்யாதி). "மணமான" மங்களாவஹமான நோக்கமென்றர்த்தம் விவக்ஷித்து தா(ஞ) ரகாதிகளென்று ஆதிபத ப்ரயோகம் பண்ணுகிறாரென்று கண்டுகொள்வது. உனக்கென்னுதே "உன்றனக்கு" என்றத்தாலே தோன்றின ஸம்பந்தவிசேஷத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளுகிறார் (தாயுமித்யாதி).

(குறைவறவிருக்கிறநீ) என்றது-புருஷகாரத்தோடு கூடியிருக்கிற நீ யென்கை. "சொல்" என்று நிர்பந்திக்கக் கூடுமோவென்ன அவன் நினைவைக்கேளாதே இராமையாலே கேட்கிறாரென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (தம்முடைய வித்யாதி). (இது) என்றது - "கண்டான்" என்ற பதத்தை. (கர்மணிகிடாய்) என்றது-காணப்பட்டானென்று சொன்னபடிகிடாயென்கை. ... ... ... ... ... ... ... (க)

களிரண்டும் அவனே யென்னுமிடத்தையாயிற்று வேதங்கள் வெளியிட்டது. (கண்ணபுரத்துறையம்மானே) ப்ரமாணங்களிலே கேட்டுப்போகையன்றிக்கே கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி திருக்கண்ணபுரத்திலேவந்து ஸுலபனான நீ சொல்லு. .... .... (க)

மூ.—பெருநீரும்விண்ணும் மலையுமுலகேழும்
ஒருதாரா நின்னுளொடுக்கிய நின்னையல்லால்
வருதேவர்மற்றுளரென்றென் மனத்திறையும்
கருதேன்நான் கண்ணபுரத்துறையம்மானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ணபுரத்துறை யம்மானே? | | மற்று | வேறான |
| பெருநீரும் | ஸமுத்ரத்தையும் | தேவர் | தேவதைகள் |
| விண்ணும் | ஆகாசத்தையும் | உளர் | இருப்பர்கள் |
| மலையும் | மலைகளையும் | என்று | என்பதையே |
| உலகுஏழும் | ஸப்தலோகங்களையும் | நான் | நான் |
| ஒருதாரா | ஒருமாலையாக | என் | என்னுடைய |
| நின்னுள் | உன்னிடத்திலேயே | மனத்து | மனதில் |
| ஒடுக்கிய | சேர்ப்பித்துக் கொண்[ட] | இறையும் | கொஞ்சமும் |
| நின்னையல்லால் | உன்னைவிட்டு | கருதேன் | நினைத்தறியேன். (உ) |
| வரும் | ("நானேப்ராப்யன்" என்று) வாராநின்ற | | |

அவ.—இரண்டாம்பாட்டு. "உன்றனக்கே தொண்டானேன்" என்றுரே; இங்ஙன்சொல்லுவானென்? புறம்பே ஆஶ்ரயிப்பாரும் ஆஶ்ரயணீயருமாயன்றோ விருக்கிறதென்ன; அவர்கள் செய்தபடி செய்கிறார்கள்; எனக்கு முன்னம் இதர விஷயங்களில் புத்தியில்லை யென்கிறார்.

வ்யா.—(பெருநீருமித்யாதி) கடலும் ஆகாசமும் குலபர்வதங்களும் லோகங்களேழும் இவற்றையடையப்ரளயத்தில். (ஒருதாரா) ஒருமாலையாக. (நின்னுளொடுக்கிய) ஒருபூவை விழுங்கினாப்போலே யாயிற்று வருத்தமற்றிருந்தபடி. அன்றிக்கே (ஒருதாரா) ரக்ஷணத்துக்குத் தனிமாலையிட்டு நிற்கிறவனே! இவற்றையடையவும் திருவயிற்றிலேவைத்து நோக்கின உன்னையல்லது.

---

அரு°—இரண்டாம்பாட்டு (பெருநீருமித்யாதி) (என்றுரே) என்றவநந்தரம் "இதுக்குமறுமாற்றம் காணுமையாலே" என்றுகூட்டுவது.(என்ன)என்றதுக்கு ஈஶ்வரனுக்கபிப்ரேதமாகக் கொண்டென்று கருத்து.
ஸம்போதநயாக வர்த்தமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி). ... (உ)

(வருதேவரித்யாதி) ப்ரளயம் வந்தபோதாக உன்வயிற்றிலே போய்ப்புக்கு நீ வெளிநாடுகாணப் புறப்படவிட்டவாறே நான் ஆஸ்ரயணீயனென்று வருவதொருதேவதை யுண்டாக நான் அறியேன். (இறையும்) பூர்வபக்ஷத்வேநவும் நினைத்தறியேன். (கண்ணபுரத்துறை யம்மானே) ப்ரளயாபத்தைப் பரிஹரித்து இன்று ஆஸ்ரயணீயனென்னுமிடம் தோற்ற நீ வந்து ஸந்நிஹிதனாக நானெங்ஙனே வேறுசிலரை ஆஸ்ரயணீய ரென்றிருக்கும்படி. ஸம்ஸாரப்ரளயத்தைப் பரிஹரிக்கைக்காகவிறே நீ இங்குவந்து நிற்கிறது. (உ)

மூ.—மற்றுமோர்தெய்வமுள தென்றிருப்பாரோடு
உற்றிலேனுற்றது முன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்றுநான் கண்ணபுரத்துறையம்மானே. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ணபுரத்துறையம்மானே? | | கற்று | அப்யஸித்து (அந்த திருவஷ்டாக்ஷரம்) |
| மற்றும் | "உன்னைவிடவேறான | மற்றெல்லாம் | மற்றுமுள்ள அநேகார்த்தங்களை |
| ஓர்தெய்வம் | ஒருதெய்வமானது | பேசிலும் | சொல்லிற்றேயாகிலும் |
| உளது | உண்டு" | உற்றதும் | (நான்) அர்த்தமாக உணர்ந்து அறுதியிட்டது |
| என்றிருப்பாரோடு | என்றுசொல்லுமவர்களோடு | உன் | உம்முடைய |
| உற்றிலேன் | ஸம்பந்தமுடையேனல்லேன்; | அடியார்க்கு | சேஷபூதர்களான பாகவதர்களுக்கே |
| நான் | அடியேன் | அடிமை | சேஷபூதனாயிருப்பதுதான். (ங) |
| நின் | உம்முடைய | | |
| திருவெட்டெழுத்தும் | திருவஷ்டாக்ஷரத்தை | | |

அவ.—மூன்றும்பாட்டு. வேறுசிலரை ஆஸ்ரயணீயரல்லரென்று நினைத்திருக்குமளவேயோ? தாமஸபுருஷர்களோடு ஸம்பர்க்கமுமில்லை. ஸாத்விகரையொழியக் காலம் செலுத்தவும் மாட்டேனென்கிறார். (க)* எண்ணுதமானிடத்தை யெண்ணுமவனுமல்லேன். * (உ) பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரியுமவனல்லேனென்கிறார்.

---

அரு.— மூன்றும்பாட்டு. (மற்றுமித்யாதி) இவர்சொல்லாலேதானே உக்தார்த்தத்தை த்ருடீகரிக்கிறார் (எண்ணுதவித்யாதி).

---

(க) கக-ங-எ. (உ) எ-ங-ங.

வ்யா.—(மற்றுமோர்தெய்வ முளதென்றிருப்பாரோடுற்றிலேன்) தேவதாந்தர ஸ்பர்ஶமுடையாரோடு எனக்கொரு ஸம்பந்தமுமில்லை. (உற்றதுமித்யாதி) அவர்களைவிட்டு உன்னளவில் நின்றவனுமல்லேன். இவ்வநுஷ்ட்டாநம் தான் நீர் எங்கேயார் சொல்ல பரிக்ரஹித்தீரென்ன; நீ சொன்ன முதல் வார்த்தைக்கு அர்த்தமாக நான் நினைத்திருப்பது இதுவென்கிறார். இதுபின்னை அநேகார்த்தங்களைச்சொல்லுமே? ஜீவஸ்வரூபத்தைச் சொல்லும், நம்முடைய ஸ்வரூபத்தைச் சொல்லும்; ஜீவவஸ்துக்களுக்கும்நமக்குமுண்டான ஸம்பந்தத்தைச் சொல்லும்; ப்ராப்திபலமான கைங்கர்யத்தளவும் வந்திருக்குமேயென்ன; அது அநேகார்த்தங்களைச் சொல்லிற்றேயாகிலும் அதிலெங்குமாக நான் அறுதியிட்டிருக்குமர்த்தம்-அநந்யார்ஹசேஷத்வம்; அதுதான் ததீயசேஷத்வ பர்யந்தமாயல்லதிராது.

(ஸ்பர்ஶமுடையாரோடே) என்றது "மற்றுமோர் தெய்வமுடையாரோடு" என்னாதே, "உளதென்றிருப்பாரோடு" என்கையாலே மாநஸஸ்பர்ஶமுடையாரென்கை. "மற்றெல்லாம்" இத்யாதிக்கு உக்திப்ரத்யுக்திமுகேந தாத்பர்யமருளுகிறார் (இவ்வநுஷ்ட்டாநமித்யாதி). (முதல்வார்த்தை) என்றது - (க) "நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்னும்படி உபக்ரமத்தில் சொன்னதிருமந்த்ரம். (ப்ராப்தி) என்றது - சேஷசேஷிபாவ ஸம்பந்த நிபந்தநமான முறையென்கை. (எங்குமாக) ஸகலபதார்த்தங்களிலுமாக. (அறுதியிட்டு) என்றது - ஜ்ஞாதவ்யதயா அறுதியிட்டுவென்கை. ஜீவஸ்வரூபம் ஆஶ்ரயதயா ப்ரஸக்தமாகையாலும், பகவத்ஸ்வரூபம் விஷயதயா சொல்லவேண்டுகையாலும், தத்விஷயகைங்கர்யம் சேஷத்வகார்யமாகத் தன்னடையே வருமாகையாலும், அநந்யார்ஹசேஷத்வமே ஜ்ஞாதவ்யமாகையால், அது-பாகவதபர்யந்தமானாலிறே நிலைநிற்பது; ஆகையாலேஉன்னடிமையாகைபர்யந்தமாயிற்று ப்ராதாந்யேந தோற்றுமர்த்தமென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

"நின் திருவெட்டெழுத்தும் கற்றுநான் வல்லது". என்றதுக்கு என்னை உனக்கே அடிமையென்னுமர்த்தத்தை அறிவிப்பிக்கிறவார்த்தையிலேதானே "அடியார்க்காட்படுக்க வல்லவார்த்தை இது" என்று நான்தானே அர்த்தம் பண்ணவல்லது அது, என்று சப்தார்த்தம் விவக்ஷித்துகீழ் உக்தி ப்ரத்யுக்திரூபேண தாத்பர்யமருளிச்செய்து, கீழ்மேல்பாட்டுக்களில் ரீதியைவிடமாட்டாமல் "கண்ணபுரத்துறையம்மானே" என்று ப்ரதீகம் க்ரஹித்துத்தாத்பர்யமருளிச்செய்து, அதுக்குமேலே எழுத்துக்கற்றதும், "நான்வல்லது கண்ணபுரத்து

(க) க-க-க.

(கண்ணபுரத்துறை யம்மானே) இதுவன்றோ நீ இங்குவந்திருந்து ஓதுவித்தவர்த்தம். கீழும்கண்ணபுரத்துறையம்மானேயென்று போருகையாலே இதுவும் அப்படி நடத்தப் பார்க்குமன்று அக்ஷரமேறிவரும். அதுக்காக "கற்றுநான்வல்லது கண்ணபுரத்தானே" என்னுதல். அன்றிக்கே ரீதிபேதம் பிறவாமைக்காக "கண்ணபுரத்துறையம்மானே! நின்திருவெட்டெழுத்தும் கற்றுநானுற்றதும் உன்னடியார்க்கடிமை" என்றுவது. "உன்னளவில் நின்றவனல்லேன்" என்றபோது, "அவன் திருவுள்ளமென்படுகிறதோ?" என்று நஞ்ஜீயரருளிச்செய்ய; பிள்ளை "* அல்லிக்கமலக்கண்ணனுகிறான்" என்றருளிச்செய்தார். (க) "நீக்கமில்லாவடியார் தமடியாரடியார் ரெங்கோக்கள்" என்று இவர் பாகவதசேஷத்வத்தளவிலே நின்றவாறே, அவன் * அல்லிக் கமலக்கண்ணனுனன். ப்ரபந்நனுடைய லக்ஷணமாகிறது - ஸ்ரிய:பதியே உபாயோபேயங்களென்றிருக்கையும், தேவதாந்தர ஸ்பர்ஶமும், தாமஸபுருஷர்களோடு ஸம்பர்க்கமுமின்றிக்கே யிருக்கையும், பாகவதரையொழியச்செல்லாமையுண்டாயிருக்கையும், தர்மியை அநுபந்தித்திருக்கும் தர்மங்களை

---

றையம்மானே" என்று சேரப்பிடித்துக் கொள்ளுமளவிலே பதினுறு எழுத்தாய்விழுகையாலே கீழ்அடிகளில் ஸங்க்யைக்கு ஏற்றம் வருமென்று காட்டாநின்றுகொண்டு ரீதிபேதத்தை அங்கீகரித்து "கண்ணபுரத்தாய்" என்று பாடத்தைக் காட்டுகிறார் (கீழுமித்யாதி). இப்பக்ஷத்தில் "அதுநான் வல்லது" என்றத்தைவிட்டு பன்னிரண்டு எழுத்தாகவே அநுஸந்திப்பதென்று திருவுள்ளம். இப்படி பாடமே பஹுகோசஸித்தம். முந்தினது உண்டானவிடத்தில் கண்டுகொள்வது. அவனருளிச்செய்த திருமந்த்ரத்துக்கு ஸார்த்தமானவர்த்தம் - பகவதநந்யார்ஹசேஷத்வமாயிருக்க, இவருக்குக் கருத்தாகவெண்ணிற்று-அவனடியார்க்கடிமையானால், அவனுக்கு முகச்சுளிப்பு வாராதோவென்ன; வாராது; ப்ரத்யுத ஆநந்தமேயுண்டாமென்று ஸம்வாதமுகேந தாத்பர்யமருளுகிறார் (உன்னளவிலித்யாதி). மூன்று பாட்டாலும்பலித்த ப்ரமேய விசேஷந்தன்னையருளுகிறார் (ப்ரபந்நனுடையவித்யாதி). பாகவதர்களை யொழியச் செல்லாமை ஸ்வரூபமானால், திருமந்த்ரத்தில்இத்தை சப்தார்த்தமாகச்சொல்லாமல்போவானென்னென்னவருளுகிறார்( தர்மியையித்யாதி). பகவத்விஷயத்தில் அநந்யார்ஹசேஷத்வம் சொன்னபோதே அவ

---

(க) தி-வாய்-அ-கo-கo.

நேரே வ்யவஹரித்ததில்லையேயாகிலும் தர்மியைச் சொன்னபோதே தர்மங்களுமெல்லாம் சொல்லிற்றாமிறே. .... .... .... (௩)

மூ.—பெண்ணானாள் பேரிளங்கொங்கையினாரழல்போல்
உண்ணாநஞ்சுண்டு கந்தாரை யுகந்தேன்நான்
மண்ணாளா வாணெடுங் கண்ணி மதுமலராள்
கண்ணாளா கண்ணபுரத்துறையம்மானே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| மண்ணாளா | ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு வல்லபனாய் |
| வாள் | ப்ரகாசமாயும் |
| நெடும் | விசாலமுமான |
| கண்ணி | திருக்கண்களையுடையளாய் |
| மது | மதுஸ்யந்தியான |
| மலராள் | புஷ்பத்தில் வாஸம் பண்ணுமவளான பெரியபிராட்டியாருக்கு |
| கண்ணாளா | வல்லபனுமான |
| கண்ணபுரத்துறையம்மானே! | |
| பெண் | ஸ்த்ரீரூபமாய் |
| ஆனாள் | வடிவுடையளான பூதனையினுடைய |

| பதம். | உரை. |
|---|---|
| பேர் | பெரிதாயும் |
| இளம் | இளமையுடையதுமான |
| கொங்கையின் | ஸ்தநத்திலிருக்கிற |
| ஆர் | பூர்ணமாய் |
| அழல்போல் | அக்நிபோன்றதாய் |
| உண்ணா | ஒருவராலும் புஜிக்கப்படாததுமான |
| நஞ்சு | விஷத்தை |
| உண்டு | புஜித்து (பூதனையை முடித்து, அதனால்) |
| உகந்தாயை | உகப்பையுடைய உன்னை |
| நான் | நான் |
| உகந்தேன் | ஸந்தோஷித்தேன் (௪) |

அவ்.—நாலாம்பாட்டு. அக்குணங்களெல்லாமுண்டானாலும் நாம் விரும்பியிருத்தல் வலியபுருஷகாரமுண்டாதல்செய்தவன்றன்றோ, அதுகார்யகரமாவதுவென்ன; நஞ்சுதா (ஞு) ரகமான உனக்கு ஆகாதில்லை; பிராட்டிமார் எனக்குப் புருஷகாரமானபின்பு என் கார்யத்துக்குக் குறையுண்டோவென்கிறார்.

வ்யா.—(பெண்ணானாள்) பேயாயிருந்துவைத்துப் பெண்ணானாள். நிருபாதிக ஸ்த்ரீத்வமுள்ளது யசோதைப் பிராட்டிக்கிறே. அவளாகத்தன்னைபா(ஞு)வித்துவந்தாளாயிற்று. (பேரிளங்கொங்கை)

---

னுக்கு அநந்யார்ஹரான இவர்களை யொழியச் செல்லாமை சொல்லிற்றாமென்றுகருத்து. ... ... ... ... ... ... ... (௩)

அரு.—நாலாம்பாட்டு. (பெண்ணித்யாதி) கீழ்மூன்று பாட்டோடும் ஸங்காட்டுகிறார் (இக்குணங்களித்யாதி).

பெருமையையும் இளமையும் இரண்டும் அருளிச்செய்ததுக்குத் தாத்

ஏறிட்டுக்கொண்டதொழியபேயான படியாலே முலைபெருத்திருக்கு மிறே. யசோதைப் பிராட்டியாக வதுகரித்து வருகையாலே இளமையும் கிடக்கும். அக்நிகல்பமான விஷமாயிற்று; நெருப்பைவாயிடுவார் இல்லையிறே; (உண்ணாநஞ்சு) அறிவுடையார் புஜித்தறியாத விஷத்தை தா (ர) கமாக புஜித்து ப்ரதிகூலையான பூதனையை முடித்து "அநுகூலர்விரோதிபோகப் பெற்றோம்" என்று உகந்தவுன்னை உகந்தேன்நான்.

(மண்ணாளாவித்யாதி) விஷம்தாரகமான உனக்கு ஆகாதாரில்லை. நீ கைவிடப்பார்க்குமன்றும் விடவொண்ணாத புருஷகாரமுண்டு. (மண்ணாளா) பொறைதானாயிருக்கை, தான் பொறையாளாயிருக்குமளவன்றிக்கே, செய்தகுற்றங்களை அவன் திருவுள்ளத்திலே படாதபடி, (க) "ந கஶ்சிந் நாபராத்யதி-நகஶ்சிந்நாபராத்யதி" என்று அவனையும் பொறுப்பிக்குமவளாயிற்று. நோக்காலும் போக்ய(த்வ)த்தையாலும் அவன் தன்வழியே போம்படி நியமிக்குமவளாயிற்று. (கண்ணபுரத்துறையம்மானே) இவையெல்லாம் உண்டானாலும் கார்யமாகாதிறே நீ தூரஸ்தனாயிருந்தாயாகில்; அக்கண்ணழிவையும் அறுத்துவைத்தாயே. .... .... .... .... .... (ச)

மூ—பெற்றாரும் சுற்றமுமென்றிவை பேணேன்நான்
மற்றாரும் பற்றிலேனாதலால் நின்னடைந்தேன்
உற்றானென் றுள்ளத்து வைத்தருள் செய்கண்டாய்
கற்றார்சேர் கண்ணபுரத்துறை யம்மானே. (ரு)

---

பர்யமருளிச்செய்கிறார் (ஏறிட்டித்யாதி). விஷத்தைபுஜித்தாலும் உகப்பு வருமோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ரதிகூலையித்யாதி).

"வாணெடுங்கண்ணி" இத்யாதிக்குத் தாத்பர்யமருளுகிறார் (தானித்யாதி). திருவுள்ளத்தில்படாதபடி நோக்காலுமித்யாதியை ஏகமாக அந்வயித்துக்கொள்வது. இப்படிமயக்கி அவனை வசீகரிக்கவல்லாளோவென்ன வருளுகிறார் (நகஶ்சிதித்யாதி). (அவனையும்) என்றது- சொல்மிறுங்களுண திருவடியையுமென்றபடி. ... ... ... ... ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (பெற்றாரித்யாதி) "கீழேதேவதாந்தரங்களிலும் தேவதாந்தர ஸம்பந்திகளிடத்திலும் பற்றிலேன்" என்றீராகிலும் சரீரஸம்பந்திகளிடத்திலும் ரக்ஷகத்வ ப்ரதிபத்தியும், ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமும் தீர்ந்தாலிறே அதிகாரிபூர்த்தியுள்ளது. அதுவேண்டாவோவென்று பகவத

---

(க) ...

| பதம். | உரை. |
| --- | --- |
| கற்றார்சேர் | (ஸகலசாஸ்த்ரங்களையும்)கற்றவர்வர்த்திக்கிற |
| கண்ணபுரத்துறையம்மானே? | |
| நான் | அடியேன் |
| பெற்றாரும் | மாதாபித்ராதிகளும் |
| சுற்றமும் | உறவாளிகளும் |
| என்றிவை | என்றிப்படிப்பட்டவர்களை எல்லாம் |
| பேணேன் | பந்துக்களாக விரும்பமாட்டேன்; |
| மற்றாரும் | மற்றுயாரிடத்திலும்[ன் |
| பற்றிலேன் | ஸங்கமுடையேனல்லே |

| பதம். | உரை. |
| --- | --- |
| ஆதலால் | ஆகையால்(நிராலம்பனனான்) |
| நின்னடைந்தேன் | உம்மையே ஆஶ்ரயித்தேன் (ஆகையால்) |
| உற்றான் | "இவன் நமக்கு உறவானவன்" |
| என்று | என்று |
| உள்ளத்து | உம்முடைய திருவுள்ளத்திலே |
| வைத்து | வைத்துக்கொண்டு(அடியேன் பக்கல்) |
| அருள் | க்ருபையை |
| செய்கண்டாய் | செய்தருளவேணும். |

அவ.—அஞ்சாம்பாட்டு. நாமும் உகந்து, வஶ்யபுருஷகாரமுமுண்டாய், ஸுலபனுமானாலும் நீர்புறம்பு பற்றற்று அகிஞ்சநராய் வருமன்றன்றோ அதுகார்யகரமாவதென்ன; என் குறையறுத்து வைத்தேன்; நீ உன்தலையில் குறைகிடவாதபடி பரிஹரித்துக்கொள்ளாயென்கிறார்.

(பெற்றாரித்யாதி) நான் வேறுசிலரை பந்துக்களென்று நினைத்திருப்பதில்லை. (மற்றாரும் பற்றிலேன்) ஐயோ? இவனுக்குப்புறம்பொருவருமில்லையென்பாரையுமுடையேனல்லேன்; புறம்பொருவருமில்லையாகில் நீர் உண்டேயென்ன; நானும்எனக்குக் கழுத்துக்கட்டி. (ஆதலால் நின்னடைந்தேன்) நிராலம்பனாய் விழுமவனுக்கு ஒருதரையிலே விழவேணுமே. (க) "सतं निपतितं भूमौ - ஸதம் நிபதிதம்பூமௌ".

---

பிப்ராயத்தைக் காட்டாநின்றுகொண்டு ஸங்கதியருளுகிறார் (நாமுமித்யாதி). (அகிஞ்சநராய்) என்றது "மற்றாரும்" என்றவிடத்தில் தாமும் அந்விதராகையாலே ஸ்வரக்ஷணத்தில் ஸ்வாந்வயமற்றவரென்கை.

நின்னடைந்தேனென்ன வமைந்திருக்க "ஆதலால்" என்றுவிசேஷித்தவருக்குக்கருத்தை யருளுகிறார் (நிராலம்பநேத்யாதி).

---

(க) ரா-ஸு-௬௨-அ-௬௯.

(உற்றானென்றுள்ளத்துவைத்து) "இவன்நம்மைவிட்டுப் புறம்பேபோய் படக்கடவதெல்லாம் பட்டான்" என்று உன்திருவுள்ளத்திலேகொண்டு என்பக்கலிலே க்ருபையைப்பண்ணி யருளவேணும். அன்றிக்கே "என்னாலறுத்துக் கொள்ளவொண்ணாத ஸம்பந்தம்உன் கையதன்றோ? இவன்கீழ் விட்டுப்போந்த உறவுமுறையெல்லாம் நாமேயன்றோ" என்றுஇத்தைத் திருவுள்ளத்திலேகொண்டு என் பக்கலிலே க்ருபையைப்பண்ணி யருளவேணும். என்றான் இங்ஙனே செய்யவேண்டுகிறதென்னென்ன; (கற்றாரித்யாதி) நீ வர்த்திக்கிற ஊரிலுள்ளார் விழுந்தவேடெடுத்து வாசித்தறிவாருண்டோ? அறிவுடையார்க்கெல்லாம்படவேண்டாவோ?.(க) "ஆர்யேண கருணம் கார்யம்- ஆர்யேண - கருணம் - கார்யம்" என்னக்கடவதிறே என்று ஜீயரருளிச்செய்தவார்த்தை. அவர்கள்பக்கல் வேண்டாதவற்றைக் கிடந்து ஆராயாநிற்கிறதென்?, நம்ஸ்வரூபத்துக்கீடாகச் செய்யவேண்டுவதுகிடக்க ஆராய்ந்தால் கைவிடவொண்ணாதவற்றை ஆராய்கிறதென்? .... .... .... .... .... .... .... (ரு)

மூ.—எத்தியுன்சேவடி யெண்ணியிருப்பாரை
பார்த்திருந்தங்கு நமன்றமர்பற்றாது
சோர்ந்தம்நாமஞ்சுதுமென்று தொடாமைநீ
காத்திபோல் கண்ணபுரத்துறையம்மானே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ணபுரத்துறையம்மானே ? | | எண்ணிஇருப் பாரை | (நித்ய கைங்கர்யம்செய்யவேணுமென்று) எண்ணி இருக்குமவர்களை |
| உன் | உம்முடைய | நமன்றமர் | யமபடர்கள் |
| சேவடி | திருவடிகளை | | |
| எத்தி | ஸ்தோத்ரம் செய்து | | |

"உற்றான்" என்றதுக்கு துக்கங்களையுற்றானென்றும், எனக்கு உறவானவனென்றும் இரண்டர்த்தமருளுகிறார் (இவனித்யாதி வாக்யத்ரயத்தாலே). ஸம்வாதமுகேந தாத்பர்யமருளுகிறார் (அறிவுடையார்க்கித்யாதி). (க) "பாபாநாம் வா சுபாநாம் வா- பாபாநாம் வா சுபாநாம்வா" என்றெடுத்த ஶ்லோகத்துக்கு அர்த்தத்தை யுட்கொண்டு தாத்பர்யமருளுகிறார் (அவர்கள் பக்கலித்யாதி). (நம்ஸ்வரூபத்துக்கு) என்றது - ஆர்யரான நம்முடைய விசேஷஜ்ஞதைக்கென்றபடி. ... ... ... ... ... ... ... ... (ரு)

(க) ரா-யு-கககூ-சச.

| | | | |
|---|---|---|---|
| பார்த்திருந்து | (ஸ்ரீ ரவியோகஸமயம்) பார்த்திருந்து | நாம் | "நாம் |
| அங்கு | அந்த அந்திமதசையில் | அஞ்சுதும் | பயப்படுகிறோம்" |
| பற்றாது | கிட்டாமல் | என்று | என்று |
| சோத்தம் | சோத்தமென்று தாழ்ந்தார் சொல்லும் சப்தத்தைச் சொல்லி | தொடாமை | ஸ்பர்ஸியாமலிருக்கும்படி |
| | | நீ | தேவரீர் |
| | | காத்திபோல் | காத்திருப்பாய்போலும். |

அவ.—ஆரும்பாட்டு. நீ என்குற்றங்கள்பாராதே என்னைக் கொள்ளுமளவுபோராது; செய்த குற்றங்கள் ஆராய்வதாக நீ இட்டயமாதிகளும் என்பக்கல் வாராதபடி பண்ணவேணுமென்கிறார்.

வ்யா.—(ஏத்தியித்யாதி)உன் திருவடிகளை ஏத்தி (க) "வழுவிலா வடிமை செய்யவேண்டுநாம்" என்கிற மநோரதத்தையுடையராயிருக்குமவர்களை. (பார்த்திருந்து) அவர்களுடைய சரீரவிஸ்லேஷஸமயம் பார்த்திருந்து. அவ்வவஸ்த்தையிலே அந்திமஸமயத்திலே யமபடர்வந்துகிட்டாதே.

(சோத்தநாமஞ்சுதுமென்று)அவர்கள் அநுகூலராயிருப்பாரைக்கண்டால் சொல்லுவன இச்சப்தங்கள்.(உ) "இறைஞ்சியும் சாதுவராய்ப்போதுமின்கள்" என்கிறபடியே, "அவர்களைக்கண்டால் நாங்கள் அருகுவாரோம்" என்று கடக்கப் போம்படியாயன்றோ உன்ஸ்வபாவம். (கண்ணபுரத்துறையம்மானே) அவ்வவளவுகளறிந்து நோக்குகைக்காகவன்றோ இங்குவந்து நிற்கிறது. (௬)

மூ.—வெள்ளைநீர்வெள்ளத்தணைந்த வரவணைமேல்
துள்ளுநீர்மெள்ளத்துயின்ற பெருமானே
வள்ளலே யுன்றமர்க்கென்றும் நமன்றமர்
கள்ளர்போல் கண்ணபுரத்துறையம்மானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெள்ளை நீர் | திருப்பாற்கடலினுடைய | வெள்ளத்து | வெள்ளத்திலே |
| | | அணைந்த | அணைத்துக் கொண்டு கிடக்கிற |

---

அந.—ஆரும்பாட்டு. (ஏத்தியித்யாதி) உன் சேவடியெண்ணியிருப்பாரை நீ காத்திருப்பாயென்று அந்யாபதேசேந வநுஸந்தித்தது - ஸ்வகதமான தசையென்று விவக்ஷித்து ஸங்கதியருளுகிறார் (நீ யித்யாதி).
அவ்வவளவுகள் - அந்தந்த அவஸ்த்தைகள். ... ... ... (௬)

---

(க) தி-வாய்-௩-௩-௧. (உ) ௭-திருவ-௧அ.

| | | | |
|---|---|---|---|
| அரவணைமேல் | திருவநந்தாழ்வான் மேலே | பெருமானே | ஸர்வாதிகனாய், |
| துள்ளும் | துள்ளாநின்ற | வள்ளலே | உதாரனுமான |
| நீர் | திவலைகள் (ஸ்பர்ஶிப்பதால்) | | கண்ணபுரத்துறை யம்மானே? |
| மெள்ள | மெள்ள | உன்தமர்க்கு | உன்னடியார்பக்கல் |
| துயின்ற | திருக்கண் வளருமவனாய், | என்றும் | எந்த காலத்திலும் |
| | | நமன்தமர் | யமபடர்கள் |
| | | கள்ளர்போல் | சோரரைப்போல் மறைந்துவர்த்திப்பர்கள். |

அவ.—ஏழாம்பாட்டு. அவர்கள்கிட்டாமையேயோ? உன் ப்ரபாவத்தாலே அவர்களுக்கு மறைந்து வர்த்திக்கவேண்டும்படியாயன்றோ இருக்கிறதென்கிறார்.

வ்யா.—(வெள்ளையித்யாதி) திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே. (துள்ளுநீர்) கடலில் சிறுதிவலைகளானவை திருமேனியில் ஸௌகுமார்யத்துக் கீடாகவந்து துடைகுத்த. (மெள்ளத்துயின்ற பெருமானே) ஆர் யமவஶ்யராகிறார்; ஆர் கூப்பிடுகிறார், என்று கூக்குரல்கேட்கும்படி செவிதாழ்த்துக்கொண்டு மெள்ள கண்வளரும் ஸர்வாதிகனே!

(வள்ளலே) ஆஶ்ரிதவிஷயத்தில் பண்ணின ஔதார்யமெள்ளவிருந்தபடியென். (உன்றமர்க்கென்றும்) உன்னுடையாரைக் கண்டால் யமபடர்கிட்டாமையேயோ? மறைந்தன்றோ வர்த்திப்பது. (கண்ணபுரத்துறையம்மானே) காக்கிற நீ ஸந்நிஹிதனாயிருக்க, அவர்கள் எங்ஙனே வெளியிலே திரியும்படி. .... .... .... (எ)

மூ.—மாணுகிவையமளந்ததுவும் வாளவுணன்
பூணுகம்கீண்டதுவுமீண்டு நினைந்திருந்தேன்
பேணுதவல்வினையே னிடரெத்தனையும்
காணேன்நான் கண்ணபுரத்துறையம்மானே. (அ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (வெள்ளையித்யாதி) ஸங்கதியை யருளுகிறார் (அவர்களித்யாதி). அவர்கள் - யமபடர்.

துள்ளுநீராலே மெள்ளத் துயிலுகிறானென்று விவக்ஷித்து நீராலே துயிலுகையை வெளியிடுகிறார் (கடலித்யாதி). ... ... ... ... (எ)

அரு.—எட்டாம்பாட்டு. (மாணுகியித்யாதி) "ஈண்டு" என்றது நீட்டிக்கிடக்

| பதம். | உரை. |
|---|---|
| கண்ணபுரத்துறை யம்மானே? | |
| மாணுகி | (நீர்முன்பு) ப்ரஹ்மசாரியாய் |
| வையம் | லோகங்களை |
| அளந்ததுவும் | அளந்துகொண்டதையும் |
| வாள் | வாளாயுதமுடையனான |
| அவுணன் | ஹிரண்யனுடைய |
| பூண் | ஆபரணங்களாலே (அலங்க்ருதமான) |
| ஆகம் | மார்வை |
| கீண்டதுவும் | கிழித்ததையும் (நான்) |
| ஈண்டு | இப்போது |
| நினைந்திருந்தேன் | நினைத்திருந்தேன்; (அதனால்) |
| பேணாத | (ஆத்மாவுக்கு ஒருஹிதமும்) செய்யாதவனாய் |
| வல்வினையேன் | கொடிய பாபங்களைப் பண்ணினவனுமான |
| நான் | அடியேன் |
| இடர்எத்தனையும் | ஸகலபாபங்களையும் (இப்போது) |
| காணேன் | காணவில்லை. (அ) |

அவ.—எட்டாம்பாட்டு. நீபாபங்களைக் கனக்கக்கூடுபூரித்து வைக்கஅதினுடையப(ஃ)லாநுபவத்தைப்பண்ணுவிக்குமவர்களுக்கு மறைந்து வர்த்திக்கைக்கு வேண்டுகிற ஹேதுவென்னென்ன; நீ ஆஸ்ரிதர்க்காக உன்னை அர்த்தியாக்கின படியையும், விரோதிநிரஸந சீலனாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்தேன். அவைவாஸனையோடே போய்நிற்கக் கண்டேனென்கிறார்.

வ்யா.—(மாணுகி) உண்டென்று இட்டபோதோடு இல்லையென்று தள்ளிக் கதவையடைத்தபோதோடு வாசியற முகமலர்ந்து போம்படி இரப்பிலேதகணேறினவடிவையுடையனாய் பூமிப்பரப்பையடைய அளந்துகொண்டதும், சிறுக்கனுக்காக ஸாயுதனான ஹிரண்யனுடைய ஆபரணங்களாலே அலங்க்ருதமான மார்வைக்கிழித்ததுவும். (ஈண்டுநினைந்திருந்தேன்) நீமுற்காலத்திலே செய்தசெயலை நான்இப்போது நினைத்திருந்தேன்.

(பேணாதவித்யாதி) தேஹாத்வ்யதிரிக்தமா யிருப்பதோர் ஆத்மாஉண்டென்று அதுக்கொருநன்மைபாராதே, தேஹாத்மாபிமாநியாய் மஹாபாபங்களைத் திரட்டினநான், அவையடங்கலும் நிஸ்

---

றிறதாய், அதுதானும்இன்று யென்றபடியாகையாலே இப்படிவிசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (நீயித்யாதி).

ஆத்மாவைப்பேணாதவனாய் வல்வினையேனானவென்று அர்த்தம்விவக்ஷித்தருளுகிறார் (தேஹாதித்யாதி). போக்குமவன் இட்டுநிற்கையாலே போம்

ரோஷமாகப்போய்க்கொடுநிற்கக்கண்டேன். (கண்ணபுரத்துறையம்மானே) போக்குமவனளவுக்கு ஈடாயன்றோ போமதினளவு இருப்பது. .... .... .... .... .... .... .... (அ)

மூ.—நாட்டினாயென்னையுனக்கு முன்தொண்டாக
மாட்டினேனத்தனையே கொண்டென்வல்வினையைப்
பாட்டினாலுன்னை யென்நெஞ்சத்திருந்தமை
காட்டினாய் கண்ணபுரத்துறையம்மானே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ணபுரத்துறை யம்மானே? | | வல்வினையை | கொடியபாபங்களை |
| முன் | ப்ரதமத்திலே | மாட்டினேன் | போக்கினேன்; (மேலும்) |
| என்னை | அடியேனை | | |
| உனக்கு | உமக்கு | பாட்டினால் | அடியேன் பாடின பாட்டினால் |
| தொண்டாக | தாஸபூ (ஞு) தனாக | | |
| நாட்டினாய் | ஸ்திரப் படுத்தினாய்; (பிறகு அடியேன்) | என் | என்னுடைய |
| | | நெஞ்சத்து | மனதில் |
| அத்தனையே | அந்தக்ருபாவி சேஷத் | உன் | உம்முடைய |
| கொண்டு | தைக்கொண்டே | இருந்தமையை | இருப்பை |
| என் | அடியேனுடைய | காட்டினாய் | அறிவித்தாய். (௯) |

அவ.— ஒன்பதாம்பாட்டு. உம்முடையவிரோதி போனபடி தானென்? நீர்பெற்ற பேறுதானென்னென்ன;

வ்யா.—(நாட்டினாயென்னை யுனக்குமுன் தொண்டாக) முந்

---

பாபங்கள் தூரப்போயிற்றென்று தாத்பர்யத்தை யருளுகிறார் (போக்குமவனித்யாதி). ... ... ... ... ... ... ... ... (அ)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (நாட்டியித்யாதி). முதற்பாட்டுத்துடங்கி இவ்வளவும், கைங்கர்யத்தில் தம்முடையசாபல்யத்தையும், தம்முடையஅநந்யகதித்வாதிகளையும், அவனுக்குத்தாம்அறிவிப்பித்து "இப்படிப்பட்ட எனக்கு கண்ணாலே உன்னைக் கண்டுகளிக்கப்பெறுகையென்று சொல்" என்றுகேட்க, ஈஶ்வரனும் இவர்திருவுள்ளத்திலே களிப்புண்டாம்படி அடிமைகொண்டமையை அறிவிப்பித்து, இத்தையும் அவர் திருப்பவளத்தாலே கேட்கவேணுமென்று ஆசையாலே கேட்கிறாக கீழ்ப்பாட்டோடே ஸங்கதியை தர்ஶிப்பிக்கிறார் (உம்முடைய வித்யாதி).

முன் என்னை உனக்கு நாட்டினாயென்று யருளுகிறார் (முந்துறவித்யா

நுறமுனனம் நீசெய்தது இவனை நம்முடையானென்று அங்கே நாட்டுங்களென்றாய். நீ எனக்கு ப்ரதமஸுக்ருதமாகச் செய்தது இவனை நம்முடையனாக அங்கே நாட்டுங்களென்று சொன்னாய். (மாட்டினேனித்யாதி) நானும் அவ்வளவைக்கொண்டு உன்னைப்பற்றின ராஜகுலத்தாலே அநாதிகாலம் புத்திபூர்வகமாகப்பண்ணின பாபங்களை நிஸ்ஸேஷமாகப் போக்கினேன்.

(பாட்டினலித்யாதி) விரோதிபோகப் பெற்றவளவேயோ? அதுபோனால் பெறக்கடவ கைங்கர்யத்தையும் பெற்றேன். வாசிகமானவடிமையும் செய்யப்பெற்றேன். நாம்பாடின கவியினுடைய மதிப்பிருந்தபடியால், இதுநம்மால் வந்ததாகக்கூடாது, உள்ளேயிருந்து பாடுவிக்கிறானொருத்தனுண்டென்றறிந்து விதுகொண்டே நீ என்ஹ்ருதயத்திலேயிருக்கிற விருப்பை நிஸ்சயிக்கலாம்படி பண்ணினாய். (கண்ணபுரம்) இவரைப்பார்[illegible]த்த மூக்கோட்டையிருந்தபடி. .... .... .... .... .... .... .... (கூ)

மூ.—கண்டசீர்க் கண்ணபுரத்துறையம்மானை
கொண்டசீர்த்தொண்டன் கலியனொலிமாலை
பண்டமாய்ப்பாடுமடியவர்க் கெஞ்ஞான்றும்
அண்டம்போயாட்சி யவர்க்கதறிந்தோமே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்ட | கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படியான | உறை | நித்யவாஸஸ்தலமாக வுடையரான |
| சீர் | ஸம்பத்தையுடைய | அம்மானை | ஸர்வேஸ்வரனை, |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தையே | கொண்ட | (எல்லாரும் நெஞ்சிலே) கொள்ளும்படியான |

தி). (என்றாய்) என்றவநந்தரம் "என்கை" என்றுசேஷம். ஏதத்விவரணம் (நீ எனக்கித்யாதி). (அங்கே) என்று அடிமையெழுதிக்கொள்ளும் அக்கணக்குத் திட்டத்திலென்கை. தொகைமுறியான எட்டெழுத்தில் முதலெழுத்திலேதானே பகவதநந்யார்ஹ சேஷபூதரிலே நீருமொருவரே என்று அறிவிப்பித்தானென்று திருவுள்ளம்.

மலையாளத்தில் "மூக்கோட்டை" என்கிறவூரை நினைத்தால் கவிகளுக்

| | | | |
|---|---|---|---|
| சீர் | ஸ்வபவமுடைய | அடியவர்க்கு | தாஸபூ)தர்களு |
| தொண்டன் | பகவத் கைங்கர்ய ஸ்ரீயை யுடையரான | என்ஞான்றும் | எந்தகாலத்திலும் |
| கலியன் | ஆழ்வாராலே | [க்கு அண்டம்போய் | பரமபதத்தில்சென்று |
| ஒலி | ஒலியுடன் அருளிச்செய்யப்பட்ட | ஆட்சி | ஆளுகைஉண்டாகக்கடவது; |
| மாலை | மாலாரூபமான இத்திருமொழியை | அவர்க்கு | இத்தை அப்யஸித்தவர்களுக்கு |
| பண்டமாய் | நிதியாகக்கொண்டு | அது | அந்தபேறுஸித்திக்குமென்பதை |
| பாடும் | பாடுமவர்களான | அறிந்தோம் | அறிந்தோம். (க0) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கண்டசீரித்யாதி) உண்டான ஸம்பத்தை ப்ரமாணங்களிலே கேட்டுப் போகையன்றிக்கே கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி நிரவதிக ஸம்பத்தை யுடைத்தான திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேஶ்வரனை. (கொண்டசீர் தொண்டன்) ஆழ்வாருடைய ஶ்ரீவைஷ்ணவ ஶ்ரீயைச் சொன்னால் அதிலே சிலர்விப்ரதிபத்தி பண்ணுகையன்றிக்கே "ஆழ்வாராகில் தொண்டர்" என்று எல்லாரும் நெஞ்சிலே கொள்ளும்படியான நன்மையை யுடையராயிருப்பாராயிற்று. இதில் விமதி விஷயமன்றிக்கேயிருக்கை. ஆழ்வார் ஒலியையுடைத்தாக வருளிச் செய்தமாலை.

இவற்றை நிதியாகக்கொண்டு பாடுமடியார்களுக்கு காலதத்வமுள்ளதனையும் (க)"ஆண்மின்கள்வானகம்" என்கிறபடியேபரமபதம்

குப் பாட்டுக்கிளம்புமாபோலே இவருக்கும் திருக்கண்ணபுரத்தை நினைத்தால் பாட்டுக்கிளம்புமாகையாலே இவரைப் பாடுவித்த மூக்கோட்டை என்கிறது.

அரு.—பத்தாம்பாட்டு. (கண்டவித்யாதி) "கண்ட"என்றத்தாலே பரமபதத்தை வ்யாவர்த்திக்கிறதென்றருளுகிறார் (உண்டானவித்யாதி). (விமதி) விப்ரதிபத்தி.

பண்டமாவது - பண்டே அமர்ந்திருக்கிற வைப்பாகச் சேமித்ததாக்கி யருளுகிறார் (இவற்றையித்யாதி). ... ... ... ... ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

(க) தி-வாய்-க0-கூ-க.

ஆட்சியாகக்கடவது. (அதறிந்தோமே) ஸர்வேஶ்வரன் என் பக்கல் பண்ணின ஓரமிருந்தபடி கண்டேனுக்கு இத்தை அப்ய(ஸூ)ஸித்தவர்களுக்கும் அவ்வளவு சென்றல்லது பர்யவஸிக்க வொண்ணாதென்னுமிடத்தை அழகிதாகவறிந்தோம். (அண்டம்) ஆகாசம்; பரமாகாசம். * * * * * * * * * (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்

# பெரியதிருமொழி

## எட்டாம்பத்து பத்தாம்திருமொழி

## முற்றிற்று.

